

# நானும் என் தமிழும்

## - ஞானி

தாய்த்தமிழ்ப் பள்ளிக் குழந்தைகளுக்கு காணிக்கை, இந்த நூல்.

நூல் : நானும் என் தமிழும்

ஆசிரியர் : ஞானி (கி. பழனிச்சாமி)

முதற்பதிப்பு : ஆகஸ்ட் 1999

வெளியீடு : நிகழ்
123, காளீசுவரர் நகர்
கோயமுத்தூர் – 641 009

அச்சாக்கம் : ஜி.எம்.சிஸ்டம்ஸ்
காந்திபுரம் வீதி எண் 10,
கோயமுத்தூர் – 641 012

விலை : ரூபாய் 25/–

## உள்ளடக்கம் :

# முன்னுரை

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சேலம் தமிழ்ச்சங்கத்தில் 'ஞானியின் சுயம்' என்ற பொருளில் நான் உரையாற்ற வேண்டுமென்று சங்கத்தின் செயலர் திரு. க.வை. பழனிச்சாமி அவர்கள் கேட்டுக்கொண்டார். அச்சமயம் என்னைப்பற்றி நானே தொகுத்து அறிந்து கொள்வதற்காக, தொடர்ச்சியாக சில கட்டுரைகளை எழுதினேன்.

சென்ற ஆண்டில் அமெரிக்காவிலுள்ள தமிழ் இளைஞர்கள் அமைத்த 'விளக்கு' என்ற அமைப்பின் சார்பில் எனக்குப் பரிசு அளித்தார்கள். பரிசளிப்பின் போது 'என் வாழ்வும் பணியும்' என்ற பொருளில் நான் உரை நிகழ்த்த வேண்டுமென்று நண்பர் 'நாடகவெளி' ஆசிரியர் திரு. ரங்கராசன் கேட்டுக் கொண்டார். உரை நிகழ்த்துவதற்குப் பதிலாக ஞானியின் சுயம் என்ற பொருளில் நான் எழுதியிருந்த கட்டுரைகளை 'நானும் என் தமிழும்' என்ற தலைப்பில் ஒரு சிறு நூலாக வெளியிட்டேன். இந்த நூலை மேலும் விரிவுபடுத்த வேண்டும் என்ற முறையில் இரண்டொரு கட்டுரைகளை எழுதினேன்.

இந்தக் கட்டுரை நூல்தான், இப்பொழுது உங்கள் கையிலுள்ள சிறுநூல். இது என் தன் வரலாற்று நூல் அன்று. தன் வரலாறு எழுதுவது என் நோக்கமும் அன்று. எனது தமிழ்நேயத்தை, நானே புரிந்துகொண்ட முறையில் சொல்வதற்கான ஒரு முயற்சிதான் இந்த நூல். ஆற்றல் மிகுந்ததாகச் செயல்பட்ட தமிழ்ச்சூழல் மாறிக் கொண்டிருக்கும் இந்த வேளையில் எனது நூல் சிலருக்கேனும் தூண்டுதலாக இருக்கும் என்பது என் நம்பிக்கை.

'நிகழ்' இதழில் நான் வெளியிட்டு வந்த 'நண்பர்கள், பிரச்சனை – நான், நீங்கள்' என்ற பகுதியை இணைத்துள்ளேன். நண்பர்கள் மற்றும் நிகழ்ச்சிகள் குறித்து நான் எழுதிவந்த குறிப்புகள் இவை. எட்டு இதழ்களில் மட்டும் இந்தக் குறிப்புகளை எழுதினேன். இவற்றை நண்பர்களும் சுவைத்து படித்தார்கள். இக்குறிப்புகளின் வழியே நான் என்னை வெளிப்படுத்திக் கொண்டதைக் காட்டிலும் நண்பர்கள் பலரை, அவர்களது நற்செயல்கள் மற்றும் பண்புகள் வழியே வெளிப்படுத்தினேன். குறைந்த அளவிற்கு 50 இதழ்களிலேனும் எழுதக்கூடிய அளவுக்கு நண்பர்களும் நினைவுகளும் நெஞ்சில் பதிந்துள்ளன. இவற்றை எழுத இன்னொரு வாய்ப்பு எனக்கு இனி வரும் என்று தோன்றவில்லை. ஆகவே 'நிகழ்' இதழ்களில் வெளியான இக்குறிப்புகளை இந்த நூலில் இணைத்துள்ளேன். இவற்றோடு

எனது நூல்கள் குறித்து நண்பர். கோவை வாணன் எழுதித்தந்த ஒரு தொகுப்பையும் இந்த நூலில் சேர்த்துள்ளேன்.

'நானும் என் தமிழும்' என்ற பொருளில் 'விளக்கு' அமைப்பு விழாவில் இந்தச் சிறுநூலை நான் வெளியிட்ட போது என்னைப் போலவே, அல்லது என்னைக் காட்டிலும் தமிழறிவும் தமிழுணர்வும் கொண்டுள்ள, குறைந்த அளவிற்கு கோவை நகரப்பகுதியில் வாழ்கின்ற தமிழ்ச்சான்றோர்கள் தமிழியலோடு கூடிய வாழ்வியல் அனுபவங்களைப் பதிவு செய்து, நூலாக வெளியிடுவது தேவை என்று உணர்ந்தேன். நண்பர்களும் ஒத்துழைத்தார்கள். கோவையில் 'தமிழறிவியக்க'த்தைத் தோற்றுவித்தோம். இதன் வழியே தமிழறிஞர் பலருடைய வாழ்வியல் அனுபவங்களைத் தொகுத்து வருகிறோம். இவையும் 'நானும் என் தமிழும்' என்ற தலைப்பில் நூலாக வெளிவரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தன் வரலாறு எழுதுமளவிற்கு ஒரு பெரிய மனிதர் என என்னை நானே நினைத்துக் கொள்ளவில்லை. தன் வரலாறு எழுதுமளவிற்கு என் வாழ்வில் மேடு பள்ளங்களோ, விரிந்த அளவியலான வாழ்வியல் அனுபவங்களோ எனக்கு இல்லை. எனினும் ஒரு மனிதன் / மார்க்சியன் / தமிழன் என்ற முறையில் எனது புரிதலைப் பதிவு செய்வது ஒரு வரலாற்று கடமை என்ற முறையில் இந்தச் சிறுநூலை எழுதியுள்ளேன். இந்த நூல் முற்றுப்பெறவில்லை என்பதனால் நூலின் இறுதியில் பின்னுரையாக மேலும் சில குறிப்புக்களை இணைத்துள்ளேன்.

நான் எத்தனை மனிதர்களுக்குக் கடன்பட்டுள்ளேன் என்றெல்லாம் நினைக்கிறபொழுது எனக்குள் நான் இல்லாமல் போகிறேன். கண்ணீர்ப் பெருக்கோடு எனக்குள்ளிருந்து இன்னும் என்னை வளப்படுத்தி, வாழ்வித்து வருகிற சக்திகளுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நூல் எழுதியது தவறோ என்ற நினைப்பிலிருந்தும் இன்னும் நான் விடுபடவில்லை. இதற்காகவும் நண்பர்கள் மற்றும் பெரியவர்கள் என்னை மன்னிக்க வேண்டுகிறேன். நம் அனைவருடைய வாழ்வுக்கும் அர்த்தமும் அழகும் ஆற்றலும் தருவது தமிழ்தான். நமக்குத்தாய் மற்றும் தெய்வம் இந்தத் தாய்க்கு நாம் என்ன செய்து இக்காலத்தில் அவளுக்கேற்பட்டுள்ள குறைகளைத் தீர்க்கப் போகிறோம்? தமிழ்ப் பெருமை நம்மையோ நம் அன்னையையோ வாழ்விக்கப் போதுமானது இல்லை. 'நான்' நம்மை வாழ்விக்காது. 'நான்' அழிந்த நிலையிலேயே தமிழ்நேயம் நமக்குள் தங்கும். நம்மை வாழ்விக்கும். என்னளவில் அறிந்த உண்மை இது. இதைச் சொல்வதற்காகவும் இந்த நூல்.

தங்கள்

23.7.99 ஞானி

# 1. எனது கல்விப் பயிற்சி

1. இப்பொழுது என் வயது 62. என் சொந்த வாழ்க்கையை பொறுத்தவரை நான் மிகுந்த மனநிறைவோடு தான் இருக்கிறேன். கண் பார்வை இல்லாதது குறித்து எனக்குக் கவலை இல்லை. இரண்டொருவரைப் பார்க்க முடியவில்லை, சில இயற்கைக் காட்சிகளை கண்டு இரசிக்கமுடியவில்லை என்று எப்பொழுதாவது சில சமயம் எனக்குள் கவலை வரும். இரண்டொரு கணங்களில் இந்தக் கவலை என்னைவிட்டு நீங்கிவிடும். இப்படி இப்பொழுது கவலைப்பட்டு பயன் இல்லை என்று நான் உடனடியாக நினைத்துக் கொள்வதுதான் இதற்குக் காரணம்.

சொந்த வாழ்க்கையில் கவலை இல்லை என்றேன். உண்மை தான் - பொருளாதார வகையில் எனக்கு கவலை இல்லை. இருப்பதை வைத்துக் கொண்டு நான் இன்னும் நூல் வெளியீடுகளில் ஈடுபட்டிருக்கிறேன். நண்பர்களும் ஒத்துழைக்கின்றனர். தமிழுக்கு இன்றைய தேவை என்ன என்ற முறையில் என்னாலான சிலவற்றை விடாப்பிடியாகத் தொடர்ந்து செய்து வருகிறேன். ஒவ்வொரு நாளும் 5/6 மணிநேரம் படிக்கிறேன், எழுதவும் செய்கிறேன். படிக்காமலும், எழுதாமலும் என்னால் உயிர் வாழமுடியாது. உதவியாளர் மூலம் எழுதுகிறேன். படிக்கிறேன். நண்பர்கள் பலர் என்னை வந்து சந்திக்கின்றனர். அவர்கள்மூலம் நாட்டு நடப்புக்கள் முதலியவற்றை மேலும் அறிந்து கொள்கிறேன்.

என்னை நான் எப்பொழுதுமே மையப்படுத்துவதில்லை. நண்பர்கள் மற்றும் மக்கள் நலம் குறித்து நான் அக்கறை கொண்டுள்ளேன். நாடு நன்றாக இல்லை என்பது குறித்து தொடர்ந்து சிந்திக்கின்றேன். சொந்த வாழ்க்கையில் எனக்கு கவலை இல்லை என்றாலும், நாட்டு வாழ்க்கை குறித்து சிந்திக்கும்பொழுது நம் நாட்டுக்கு எதிர்காலம் இல்லை என்ற கவலை எனக்குள் அதிகரிக்கிறது.

2. எனது வாழ்க்கையில் 28 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணிபுரிந்தேன். கோவையில் ஒரு புகழ் பெற்ற பள்ளியில் பணிபுரிந்தேன். ஆசிரியர் பணி எனக்குப் பிடித்தமான பணி. உயர்நிலைப்பள்ளி கல்வி முடித்து, கல்லூரிக்குள் நுழைந்தபொழுது தமிழ்க்கல்வியைத் தேர்ந்து கொள்ளவிரும்பினேன். எனது விண்ணப்பத்தைப் பார்வையிட்ட பேராசிரியர், "நீ பெற்றுள்ள மதிப்பெண்களுக்கு உனக்கு முதல் பிரிவு கிடைக்கும், தமிழை ஏன் தேர்ந்து கொள்கிறாய் என்று கேட்டார். சிந்தித்துப்பார்" என்றார் "மூன்று நாள் கழித்து வா. தமிழ்தான்

வேண்டுமென்றால் கொடுக்கிறேன்" என்றார். தமிழைத்தான் நான் தேர்ந்தெடுத்தேன்.

இலக்கியம் குறித்து எனக்கு ஏற்பட்ட ஆர்வத்தை நினைத்துப் பார்க்கிறேன். எனது தொடக்கப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. அரங்கசாமி நாயுடு அவர்கள் எங்களுக்கு பாடங்கள் கற்பிக்கும் பொழுதே கம்பராமாயண செய்யுட்களைக் கற்பித்தார். எனது தந்தையார் ஊருக்கு உழைத்தவர். பங்கீட்டுக்கடை நடத்திய பொழுதும் சம்பாதிக்காதவர். சுதந்திரம் பெறுவதற்குச் சற்று முன்னரும், பின்னரும் நாடு வறுமை வாய்ப்பட்டிருருந்தது. எங்கும் வறுமையும் பட்டினியும், நாங்களும் அனுபவித்தோம். எங்கள் குடும்பம் பெரிய குடும்பம். கிராமத்தில் வாழ்ந்தோம். மானாவாரி பூமி அது. அந்த கிராமத்துச் சூழல் எனக்குள் இன்றும் பதிந்திருக்கிறது. கிராமம்தான் எனக்கு மண்ணின் மீதும், மனிதர்கள் மீதும் நேயத்தைக் கற்றுக் கொடுத்தது. இந்த நேயத்தின் வழியே தான் தமிழ் நேயத்தை நான் பெற்றேன். இந்தக் கதை மிகவும் விரிவானது. இப்பொழுதைக்கு இது தேவை இல்லை.

நடுநிலைப்பள்ளியில் நான் பயின்ற பொழுது, எங்கள் பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு நஞ்சுண்டேஸ்வரன், எனக்குள் மட்டுமல்லாமல் மேலும் சில மாணவர்களுக்குள்ளும் ஆளுமைக்கான வளர்ச்சியைத் தூண்டியவர் அவர்தான். கல்வியளவில் எங்களைத் தேர்ந்தவர்களாக அவர் உருவாக்கினார். அவர் இல்லையென்றால் நான் என்ன ஆகியிருப்பேன் என்பது பற்றி இப்பொழுது என்னால் சிந்திக்க முடியவில்லை.

3. கோவையில் நான் உயர் பள்ளிக் கல்வியைத் தொடர்ந்தபொழுது எனக்குள் தமிழ் உணர்வை வளர்த்தவர் புலவர் திரு. நா. சுந்தரராசனார் அவர்கள். பெருமைக்குரிய இந்தப் பள்ளியில் பணியாற்றிய அற்புதமான ஆசிரியர் குறித்து நான் சொல்லாமல் நகரமுடியாது. திரு. டி.வி. வெங்கட சுப்பிரமணிய அய்யர், திரு. இராஜம் அய்யர், திரு. இராமநாதன், நாராயணசாமி அய்யர் ஆகிய ஆசிரியப் பெருமக்களை நான் என்றும் மறவேன். பாடங்களில் பெற்றிருந்த பேரறிவை நினைத்து இன்று வியப்படைகிறேன். தங்கள் அறிவுத் திறனை எங்களுக்கு இவர்கள் முழுமையாக வழங்கினார்கள். இவர்கள் அனைவரும் பார்ப்பனர்கள். இவர்களைக் குறித்து என் மரியாதை என்றைக்கும் குறையாது.

கல்லூரியில் படித்த பொழுது என் நெஞ்சில் முதன்மையாக நிறைந்திருப்பவர் பேராசிரியர் பா.சு. மணியம். கோவை அரசுக் கல்லூரியில் அப்பொழுது பணியாற்றிய கொண்டல் சு. மகாதேவன்,

உருத்திரமணி, பொன்னப்பனார் ஆகியவர்களையும் நினைவு கொள்கிறேன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் படித்த காலம் என் வாழ்வின் பொற்காலம் என்று நான் மகிழ்வோடு சொல்லிக் கொள்ளமுடியும். பிரமாண்டமான அந்த நூலகத்தில் நான் என் ஆசை தீரப் படித்தேன் என்று சொல்ல முடியும். படிக்கும் ஆசை இன்றைக்கும் எனக்குள் அடங்கவில்லை என்பதையும்நான் உடனடியாகச் சொல்ல வேண்டும்.

தமிழ் இலக்கியம் மட்டுமல்லாமல், ஆங்கில இலக்கியமும் கற்றேன். தத்துவம், வரலாறு, அறிவியல் ஆகியவை எனக்கு என்றைக்குமே பிடித்த அறிவுத் துறைகள். எனது பேராசிரியர் திரு.வெ.ப.கரு. இராமனாதன் செட்டியார், திரு. மு. அருணாசலம்பிள்ளை, திரு. முத்துசாமி பிள்ளை, திரு. தண்டபாணி தேசிகர், திரு. சண்முகம் பிள்ளை ஆகிய இவர்கள் எந்த மொழித் துறையில் பணிபுரிந்திருப்பார்கள் என்றாலும் அந்த மொழிக்கு வளம் சேர்த்திருப்பார்கள். தமிழின் வளத்திற்கும் இவர்கள் ஆதாரமானவர்கள்.

4. 50 களில் நான் தமிழ் கற்றேன். தமிழ் ஏறுமுகமாக இருந்த காலம் அது. பெரியார், அறிஞர் அண்ணா, தெ.பொ.மு.வ., சேதுபிள்ளை முதலியவர்களின் வழியாக தமிழ்நாடு முழுவதும் பெருகிய தமிழ்ப் பேரார்வத்தில் நாங்கள் திழைத்தோம். தமிழ் இப்படித்தான் எங்களுக்குள் ஊறியது. ஒரு நூற்றாண்டுத் தமிழ் ஆய்வு இவர்கள் வழியே எங்களுக்குள் வந்து பதிந்தது. எனக்குள் இருக்கும் நேயத்தை இன்றளவும் வளர்த்தவர்கள் இந்தத் தமிழ் அறிஞர்கள். தமிழை நான் நன்கு கற்றேன். ஆங்கிலத்திலும் குறைவு வைத்துக் கொள்ளவில்லை. இறுதித் தேர்வில் அண்ணாமலை செட்டியார் நினைவுப் பரிசு எனக்கு கிடைத்தது என்பதை இங்கு மகிழ்ச்சியோடுதான் தெரிவித்துக் கொள்கிறேன். ஆண்டு முழுவதும் விடாப்பிடியாக படித்து வந்தவருக்கு இந்தப்பரிசு சென்றிருக்க முடியும். என் மரியாதைக்கு உரியவர் அவர். நான் என்ன செய்ய முடியும். தொடர்ந்து பலதுறை பற்றிய படிப்பின் காரணமாக தமிழைப் பற்றிய புரிதல் எனக்குள் கூடுதலாக இருந்திருக்க கூடும். வகுப்பறையில் நான் கழித்த நேரத்தைவிட, நூலகத்தில் நான் கழித்த நேரம் அதிகம்.

பட்ட வகுப்பிற்குமேல் முதுகலைப் படிப்பிற்கு நான் செல்லவில்லை. எங்கள் குடும்பத்தின் பொருளாதாரநிலை உதவியாய் இல்லை. பட்டவகுப்பு முடிந்த அன்றைக்கு பேராசிரியர் இராமநாதன் செட்டியார் என்னை தன் அறைக்கு அழைத்தார். பல்கலைக்கழக இணைவேந்தர் முத்தையா செட்டியாருக்கு அவர் வலக்கரம் என மதிக்கப்பட்டவர். தீர்க்கமான அவரது பார்வைக்கும் கூர்மையான சொற்களுக்கும் அவரிடம் அச்சம் கொள்ளாத மாணவர்களே இல்லை.

நான் அச்சத்தோடு தான் சென்றேன். முதுகலைப் படிப்பிற்கு நான் அவசியம் வரவேண்டும் என்றார். எனது குடும்பநிலையைச் சொன்னேன். கல்லூரிக்கான கட்டணம், விடுதிக்கான கட்டணம் முதலியவற்றுக்கு தான் ஏற்பாடு செய்வதாகச் சொன்னார். வியப்பும், அதிர்ச்சியுமாக நான் வெளிவந்தேன். எப்படியோ என் படிப்பை நான் தொடரவில்லை. தொடர்ந்திருந்தால் நானும் ஒரு பேராசிரியர் ஆகி இருப்பேன்.

5. பேராசிரியர் ஆகாதது குறித்து எனக்குச் சற்றும் வருத்தம் இல்லை. உயர்நிலைப்பள்ளியில் 28 ஆண்டுகள் தமிழாசிரியராய் பணிபுரிந்ததை ஏற்கனவே சொன்னேன். பேராசிரியர் ஆகி இருந்தால் இன்னும் பல ஆய்வு நூல்களை நான் எழுதியிருப்பேன். இந்த ஆய்வு நூல்களில் தமிழ் இருந்திருக்கும் வாழ்வு இருந்திருக்காது. பதவியில் உயர்ந்து செல்லும் பொழுது நிலத்தோடும், நீரோடும், மண்ணோடும், மக்களோடும், கொள்ளுகின்ற ஆழ்ந்த உறவுகளிலிருந்து விலகித்தான் செல்கிறோம். இப்படிச் சென்ற நிலையில் தமிழியல் ஆய்வு எப்படி வளம் பெறும்.

இப்படி நான் சொல்வதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. சிலர் என்னை மறுக்கவும் கூடும். இதற்கான பதிலை பிறகு பார்த்துக் கொள்ளலாம். சிறுவயது முதற் கொண்டே என் குடும்பத்தின் வறிய நிலையைச் சொன்னேன். கிராமத்து வாழ்க்கை நிலையைச் சொன்னேன். பெரிய குடும்பச் சூழலில் நான் அன்பைப் பயின்றேன். என் தாத்தா காலம் முதற்கொண்டே சாதிக் கலப்பு எங்கள் குடும்பத்தில் தொடர்ந்து ஏற்பட்டு வருகிறது. வணிகத் துறையில் எங்கள் குடும்பத்தவர். ஈடுபட்டிருந்த பொழுதிலும் எங்கள் வாழ்க்கை வளமாக இல்லை. வெளியூரிலிருந்து எங்கள் ஊரில் வந்து குடியேறியவர்கள் பெரும் செல்வராயினர். உள்ளூரில் வாழ்ந்த எங்களைப் போல பலரது வாழ்க்கை அடிமட்டத்தில்தான் இன்றைக்கும் இருக்கிறது. இதற்கு எத்தனையோ காரணங்கள். ஒரு ஊரில் நெடுங்காலமாக வாழ்பவர்களுக்கு இடையில் உள்ள நெருக்கமான உறவு காரணமாக ஒருவரை மற்றவர் ஏமாற்றிப் பிழைப்பதை அவர் நினைத்துப் பார்க்க முடியாது. வேற்றூர்களில் இருந்து வந்தவர்களுக்கு இந்த ஈரம் இல்லை. உறவு நெருக்கம் இல்லாத நிலையில் இலாபத்திலேயே முழு கவனம் செலுத்த முடியும். இதற்கு மேலும் காரணங்கள் இருக்கின்றன.

6. நான் சொல்ல வந்ததில், என் வாழ்வைப் பொறுத்தவரை ஒரு முக்கியமான உண்மை. 1960 களின் தொடக்கத்தில் நான் கோவையில் பணிபுரிந்தபொழுது மார்க்சியத்தோடு எனக்கு உறவு ஏற்பட்டது. மார்க்சியத்தை நண்பர்களோடு நான் ஆழ்ந்து கற்றேன். கலை இலக்கிய பெருமன்றத்தின் மூலம் தோழர்கள் ஜீவா, ரகுநாதன்,

ஆர்.கே.கண்ணன், ஜெயகாந்தன், வானமாமலை முதலிய அறிஞர்கள் பலரைக் கற்றேன். இவர்களை நான் நெருங்கிச் செல்லவில்லை என்றாலும் இவர்களின் ஆய்வறிவை பெரும் அளவில் சேகரித்துக் கொண்டேன். தொடக்கத்தில் நான் நேருவியனாக இருந்தேன். குருச்சேவை பெரிதும் இரசித்தேன். ஆனால் தோழர் எஸ்.என். நாகராசன் அவர்களோடு ஏற்பட்ட உறவின் காரணமாக மெல்ல, மெல்ல நான் மாறினேன். இப்படி மாறும் பொழுது எனக்குள் பெரும் சிரமங்களை உணர்ந்தேன். 1967,68 வாக்கில், தோழர் நாகராசன் மூலம் நானும் மாவோவின் சிந்தனைக்கு நெருக்கமானேன். எஸ்.வி.ஆரோடு நான் மிக நெருக்கமாக இருந்து மார்க்சிய நூல்களை ஆழ்ந்து கற்றேன். புலவர் ஆதி அவர்களையும் இங்கு அவசியம் குறிப்பிட வேண்டும். "புதிய தலைமுறை" இதழ் நடத்தினோம். 1979 வாக்கில் "பரிமாணம்" இதழை நடத்தினோம், நிறைய எழுதினேன்.

7. எனக்குள் தமிழோடும் மார்க்சியத்தோடும் ஏற்பட்ட உறவு குறித்து இங்கு அழுத்தமாகச் சொல்ல வேண்டும். என் வாழ்வின் மையமென இதைத்தான் நான் சொல்ல முடியும். தமிழோடு தான், மார்க்சியத்தோடுதான் எனக்கு வாழ்வு. மார்க்சியம் கற்றதால் தமிழ் எனக்குள் ஆழ்ந்த செறிவைப் பெற்றது. மார்க்சியம் கற்றதால் தமிழின் வளத்தை நான் ஆழமாக எனக்குள் சேகரித்துக் கொண்டேன். இந்த ஆதாரத்தில் தான் நான் தொடர்ந்து எழுதுகிறேன், சிந்திக்கிறேன். எனது பெரும்பாலான கட்டுரைகள் இந்த மையத்திலிலேயே சுழல்கின்றன. தமிழுக்கும் மார்க்சியத்திற்கும் இடையில் இத்தனை நேயத்திற்கும் இடம் உண்டா என சிலர் கேட்கக்கூடும். தமிழ் ஆர்வத்தை சிலர் மொழி வெறி என்பார்கள். தமிழ்த்தேசியம் என்று பேசுவதை இன வெறி என்று சொல்வார்கள். மாவோவின் வெளிச்சத்தில் மார்க்சியத்தை செறித்துக் கொள்வதை தீவிரவாதம் என்றும் சிலர் சொல்வார்கள். இவர்களுக்கெல்லாம் இங்கு நான் பதில் சொல்லவில்லை. என் கட்டுரைகளில் இது குறித்து நிறைய எழுதி உள்ளேன். திராவிட இயக்கமும், மார்க்சிய இயக்கமும் உடனடி அரசியல் காரணமாக எதிரெதிர் திசைகளில் சென்றன. இப்படி சென்றதற்கு காரணமான அனைவரும் தமிழுக்கும், தமிழ்த் தேசத்திற்கும், தமிழ் மக்களின் விடுதலைக்கும், தமிழ் இலக்கியத்தின் வளத்திற்கும், மார்க்சியத்திற்கும் எதிராக சென்றவர்கள் - தமிழுக்கும் மார்க்சியத்திற்கும் இடையில், திராவிட இயக்கத்திற்கும் மார்க்சியத்திற்கும் இடையில் பகைமையை தோற்றுவித்தவர்கள், வளர்த்தவர்கள். அவர்கள் எவ்வளவு பெரியவராக இருந்தாலும் அவர்கள் நம்மரியாதைக்கு உரியவர்கள் அல்லர்.

# 2. என் தமிழ் உணர்வு

1. தமிழ் உணர்வு வளர்முகத்தில் இருந்த காலத்தில் தமிழ் கற்றேன் என்று சொன்னேன். அடுத்து தமிழாசிரியராகப் பணிபுரிந்ததையும் சொன்னேன். ஆசிரியர் தொழில் என் பிழைப்புக்கு ஆதாரமாய் இருந்தது. தமிழ்ப் பாடதிட்டம் நான்கு, ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை தான் மாறுவதுண்டு. ஒரே பாடத்தை திரும்பத் திரும்ப நடத்துவதில் உள்ள சலிப்பை பெருமளவில் நான் உணர்ந்தேன். இருந்தபோதிலும் விருப்பத்தோடுதான் ஆசிரியப் பணிபுரிந்தேன். தொடர்ந்து படித்துக் கொண்டும் இருந்தேன். செய்யுள் அல்லது உரைநடைப் பாடம் தவிர மாணவர்களின் பொது அறிவை வளர்ப்பதில் கவனத்தோடு இருந்தேன். வியட்நாம் பிரச்சனை, இலங்கை சிக்கல், விண்வெளிப் பயணங்கள் குறித்தெல்லாம் மாணவர்களுக்கு நிறையச் சொல்வேன். ஒவ்வொரு பிரிவேளையிலும் கொஞ்சம் நேரம் ஒதுக்கிக் கொண்டு இவற்றை சொல்வேன். சிலப்பதிகாரத்தில் ஒரு காதை பாடமாக இருந்தாலும் சிலப்பதிகாரக் கதை முழுவதையும் விரிவாகச் சொன்ன பிறகுதான் குறிப்பிட்ட கதைப் பகுதியை நடத்துவேன். இயற்கை ஒவ்வா நிகழ்ச்சிகள் என கதைப் பகுதிகளில் வரும்பொழுது இப்படி நடைபெறச் சாத்தியம் உண்டா? என்றெல்லாம் மாணவர்களோடு விவாதிப்பேன். திருக்குறள் கருத்துக்களை மாணவர்கள் உள்ளத்தில் தங்க வைப்பது சிரமம் எனினும் விடாப்பிடியாகச் சொல்லிக் கொண்டிருப்பேன். கடவுள் கருத்தோடு எனக்கு உடன்பாடும் உண்டு, முரண்பாடும் உண்டு.

பள்ளி நேரம் தவிர வேறு நேரங்களில், மார்க்சியம் பற்றிய படிப்பில், ஆய்வில் முழு கவனம் செலுத்தினேன், "புதிய தலைமுறை" நடத்திய காலத்தில் கட்சி மார்க்சியரைப் போல் இல்லாமல் முழு அளவில் தமிழ் உணர்வோடு நானும் நண்பர்களும் செயல்பட்டோம். எங்கும், எதிலும் தமிழ் என்பது எங்கள் கொள்கை, 1965, 68ல் தமிழகத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் எங்கள் ஈடுபாடு அதிகம். மைய அரசின் ஆட்சி மொழியாக அனைத்து மாநிலங்களின் மொழிகளும் இடம் பெறவேண்டும் என்று எழுதினோம். பாரதிதாசனை நாங்கள் போற்றியது எங்களுடைய தமிழ் உணர்வு, கட்சி மார்க்சியரின் உணர்வுக்கு எதிரானதாகத்தான் இருந்தது. சங்க இலக்கியம், தொல்காப்பியம் குறித்த ஆய்வுக் கட்டுரைகளையும் "புதிய தலைமுறை"யில் வெளியிட்டோம். தமிழ் உணர்வைப் பொறுத்தவரை நாங்கள் யாருக்கும் சளைத்தவர்களாக இல்லை.

இவ்வாறு தொடங்கிய என் ஆய்வுகள் மேலும் விரிவும், ஆழமும் பெற்றன. தமிழின் தொன்மை, தமிழின் தனித்தன்மை பற்றியெல்லாம்

எனக்கு ஆழ்ந்த அக்கறை இருந்தது. தனித்தமிழ் என்பது தேவையான ஒரு இலக்கு. முழு அளவில் கடைப்பிடிப்பது நமக்கு அறிது என்றாலும், அந்த இலக்கை நமக்குள் கொண்டிருந்தால் மட்டுமே, நாம் பயன்படுத்தும் பொதுத்தமிழில் நல்ல சொற்கள் இடம் பெறும் என்பது என் கருத்து. பெருஞ்சித்திரனார் அவர்களின் "தென்மொழி" இதழை அதன் தொடக்கக் காலமுதலே நான் படித்து வந்தேன். ஆரிய எதிர்ப்பு என்பதில் எனக்கு எப்பொழுதும் முற்றான உடன்பாடு இல்லை. ஆரியர், தமிழை இகழ்ந்தனர் என்பதில் எனக்கு கருத்து மாறுபாடு இல்லை. ஆரியர் தமிழை ஒதுக்கியது எனக்கு உடன்பாடில்லை. ஆரியத்தை இகழ்வது எனக்கு இயலாது. ஆரியரால்தான் தமிழ் மக்கள் அழிந்தார்கள் என்பதை நான் ஒப்புக் கொள்வதில்லை. தமிழன் தன்னை விட்டுக் கொடுக்காமல் ஆரியர் இவனுக்குள் வெற்றி பெறமுடியாது என்பது என் கருத்து.

2. இப்பொழுது எல்லாவற்றையும் திரும்பப் பார்த்துக் கொள்கிறேன். இங்கு என் உணர்வை இப்படி தொகுத்துச் சொல்ல விரும்புகிறேன். தமிழ் கற்பது என்றால் திருக்குறள் கற்பது என்பது பொருள். சிலப்பதிகாரம் கற்பது என்று பொருள். திருக்குறள் கற்பது என்றால் குறட்பாக்களை மனப்பாடம் செய்வது, உரைநயங்களை விரித்துரைப்பது என்பது பொருளாகாது. திருக்குறளின் அறத்தைக் கற்க வேண்டும். அறத்தை நெஞ்சில் நிறுத்த வேண்டும். இன்றைய சமூகச் சூழலில் இந்த அறத்தின் தேவை பற்றி நமக்கு முழு அளவில் ஈடுபாடு வேண்டும். அப்படியானால் குறள் அறத்தின்வழியே நாம் சமதர்மம் கற்க வேண்டும். ஒப்புரவு அறிதல் முதலிய வள்ளுவரின் கருத்துக்கள் வழியே ஆழ்ந்த உணர்வை இன்றைய சூழலில் சமதர்மம் என நமக்குள் திரட்டிக் கொள்வதுதான் திருக்குறள் கற்பதற்கான பொருள். சிலம்பைக் கற்பதென்றால் சமூகத்தில் நிலவும் அநீதிகளுக்கு எதிராகப் போரிடுவது என்பது பொருள். இப்படியே தான் சங்க இலக்கியம் முதலியவற்றையும் நாம் கற்க வேண்டும். தமிழ் உணர்வு என்பதை இப்படித்தான் பொருள்படுத்த வேண்டும்.

இயற்கையை நாம் அழிக்க முடியாது. வாழ்வில் அறம் தழைக்கவேண்டுமானால் இயற்கை அழிந்த நிலையில் வாழ்வை மேம்படுத்த முடியாது. மக்களை ஊழலுக்குள்ளாக்கிய பிறகு அறம் பற்றிப் பேசிப்பயனில்லை. வாழ்வின் ஆதாரங்கள் அழிந்து ஊழலுக்கு எல்லாவற்றையும் உட்படுத்தியப்பிறகு தமிழ் உணர்வு நமக்குள் தங்காது. தமிழை மக்கள் மதிக்க மாட்டார்கள். பதவிக்கும், அதிகாரத்திற்கும், செல்வப்பெருக்கத்திற்கும் வாழ்வை ஒப்படைத்த நிலையில் தமிழுக்கு இடமில்லை. தமிழ் உணர்வுக்கு இடம் இல்லை. பட்டி மன்றங்கள் தமிழ் உணர்வை அழிக்கவே செய்யும். மக்கள் உணர்வை மலினப்படுத்துவது

பட்டி மன்றம் தமிழை வணிகப் பொருளாக்குவது தமிழை அழிப்பதற்கான முயற்சி. வெட்கமில்லாமல் ஒருவர் தன்னை தமிழ்ச் சான்றோர் என, தமிழறிஞர் என, அழைத்துக் கொள்ள முடியாது. தமிழை இப்படி வணிகமாக்குபவர்கள், கேவலமான அரசியல் ஆக்குபவர்கள் தமிழின் எதிரிகள்.

3. இப்படி நான் சொல்லும்பொழுது, நீங்கள் ஓர் உண்மையை புரிந்து கொள்ள முடியும். தமிழ் இலக்கியங்கள் வழியே தமிழ் வாழ்வை தமிழ் உணர்வை நான் பொருள்படுத்துவதில் மார்க்சியத் தாக்கத்தை நீங்கள் புரிந்து கொள்ளமுடியும். தமிழின் ஆழத்தைக் கண்டறிவதற்கு மார்க்சியம் தான் கருவி. பிழைப்புக்கும், பொருளுக்கும், அதிகாரத்திற்கும் தம்மை இரையாக்கிக் கொண்டவர்கள் தமிழ் உணர்வைப் பெறுவதில்லை. தமிழ் என்று முழங்குவோர், மார்க்சியத்திற்கு எதிராகப் பேசுவதையும் நாம் புரிந்து கொள்ள முடியும். இவர்கள் தமிழை வைத்து வணிகம் செய்பவர்கள், அரசியல் செய்பவர்கள். தமிழில் கதை என்றும், கவிதை என்றும் எழுதித்தள்ளி, நூல்கள் வெளியிட்டு, விழாக்கள் நடத்தி பெருமை சேகரித்துக் கொண்டு தமிழின் மீதமர்ந்து தமிழை அழிப்பவர்கள் இவர்கள்.

தொடக்க காலத்தில் பாரதிதாசன் கவிதைகளை பற்றி எனக்கு பெரிய மரியாதை இல்லை. பாரதியைத்தான் நான் மதித்தேன். ஆனால் தமிழ் உணர்வு எனக்குள் திரண்டு வரும் சூழலில் இறுதியாகத்தான் பாரதிதாசனை நான் கண்டுபிடித்தேன். என் அளவில் இது மிகப்பெரிய கண்டுபிடிப்பு. "தமிழுக்கும் அமுதென்று பேர்" என்று தொடங்குகிற பாடல்களில் தமிழைக் குறித்து பாரதிதாசன் சொல்லும் உருவகங்களை முன்பு வெறும் கற்பனைகள் என்று கருதினேன். ஆனால் இவற்றின் உண்மையைப் பிறகுதான் அறிந்து கொண்டேன். தமிழின்வழியே தான் இளமை முதற்கொண்டு அறிவும் உணர்வும் எனக்குள் நுழைந்தன. பயிர்களும், உயிர்களும், வானமும், கடலும், தாவரங்களும், பறவைகளும் - இப்படி ஆயிரக்கணக்கானவை எனக்குள் பதிந்தது தமிழோடு சேர்ந்துதான். தமிழ்மொழியின் மூலம் தமிழின் தொன்மை எனக்குள் இடம் பெறுகிறது. கோவலனும், கண்ணகியும், மணிமேகலையும் எனக்குள் தங்கி உள்ளார்கள். வள்ளுவரை எனக்குள் நான் தரிசிக்கிறேன். கணியன் பூங்குன்றன் எனக்குள் தங்கி எனக்குள் வளம் சேர்த்து வருகிறார். ஆழ்வார்களோடும், நாயன்மார்களோடும் நானும் கலந்து இருக்கிறேன். ஆண்டாளோடு சேர்ந்து நானும் கண்ணனைத் தேடி இருக்கிறேன். எனக்கு வயது 60 தல்ல, 1000 ஆண்டு. தமிழ் வரலாற்றின் இழைகள் எனக்குள் பதிந்துள்ளன. எனது வானம் தமிழ் வானம். காற்றும் கடலும் எனக்குள் உயிர்க்கின்றன.

4. பாரதிதாசனை பொறுத்தவரை தமிழ் என்பதற்கு நூறு பொருள் சொல்லுகிறார். தமிழ் என்றால் இனிமை, தமிழென்றால் காதல், தமிழென்றால் வீரம் என்று இப்படியே அன்பும், அறமும், கலையும், அழகும், இளமையும், முதுமையும் எல்லாமே பாரதிதாசனுக்குத் தமிழ்தான். ஆறும், கடலும், அலைகளும், நீரும், நிலமும், பயிர்களும், உயிர்களும் பாரதிதாசனுக்குத் தமிழ்தான்.

எங்கள் தமிழ் நிலம் அழியக்கூடாது. இன்னொருவன் தமிழன் நிலத்தை அபகரித்துக் கொள்ள முடியாது. எங்கள் உழவர்களை கைவினைஞர்களை அடிமைப்படுத்தக்கூடாது. இப்படி விரிகிறது பாரதிதாசனின் தமிழ் உணர்வு. வடக்கத்தியருக்கு மட்டுமல்லாமல் சந்தைப் பொருளாதாரம் என்னும் பெயரில் தமிழகத்திற்குள் வரும் எந்த அந்நியர்க்கும் தமிழ் நிலத்தை, தமிழ் இயற்கையை, தமிழ் மக்களின் வாழ்வுரிமைகளை, தமிழ் மக்களின் பண்பாட்டை அடகு வைக்க முடியாது. 5,000, 10,000, 20,000 ஆண்டுத் தொன்மையும் மேன்மையும் உடையவன் தமிழன். இவனுக்குள் வரலாறு பேராறாய் ஓடுகிறது.

திரும்பவும் நான் இப்படிச் சொல்லாமல், மார்க்சியத்தின் நெறியில் இல்லாமல் வேறு எப்படி தமிழ் உணர்வை பொருள்படுத்துவது? நமக்குள் உயிர்ப்பிப்பது? தமிழ்தான் நமக்கு உயிர். தமிழ்தான் நமக்கு வாழ்வு. கட்சி மார்க்சியனுக்கு ஏன் இந்த உண்மை புரியவில்லை? நான் உறுதியாகச் சொல்வேன் கட்சி மார்க்சியனுக்கு தமிழகம் தெரியாது. மார்க்சியமும் தெரியாது. இன்னும் ஒன்றை நான் சொல்ல முடியும். பெரியார் என்றும், கழகம் என்றும் வெறும் மேடைத் தமிழில் முழங்குபவர்களுக்கும் தமிழ் தெரியாது, தமிழின் ஆழம் தெரியாது, தமிழின் நீர்மை தெரியாது. வள்ளுவருக்கும், இளங்கோவுக்கும் இவர்கள் வாரிசுகள் அல்லர். இடையில் வந்த எத்தனையோ தரகர்களுக்கு இவர்கள் வாரிசுகள். இவர்களுக்கு தமிழை வைத்துப் பிழைக்க தெரிந்திருக்கிறது. தமிழ் இவர்களுக்குத் தாய் அல்ல.

# 3. எனது தேடல்

1. நிலத்தில் கிணறு தோண்டி அந்தக் கிணற்றில் வெளிப்படும் தண்ணீரை, ஒரு உழவர் கண்டுபிடிக்கிறார் தொகுத்து இரைக்கிறார். தனது நிலங்களுக்குப் பாய்ச்சுகிறார் என்றால் தண்ணீரை இவர் உற்பத்தி செய்தார் என்பது பொருளாகாது. நிலத்திற்கு அடியில் உள்ள நீரை இவர் கண்டுபிடித்தார், தேவையான ஆழம் தோண்டியதன் விளைவாக தண்ணீர் தொடர்ந்து ஊறுகிறது. ஊறிய தண்ணீரை வைத்து இரைத்து நிலங்களுக்கு பாய்ச்சி விளைச்சல் செய்கிறார். கிணறு தோண்டுவதற்கு அவர் பெருமுயற்சி செய்தார். திரும்பவும் சொல்லலாம் தண்ணீரை அவர் உற்பத்தி செய்யவில்லை. தண்ணீரைக் கண்டறியும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். தண்ணீர் அவருக்குத் தேவையாக இருந்தது. தனக்கு மட்டுமல்லாமல் மற்றவருக்கும் பயன்படும் விளைச்சலை செய்வதற்காகத்தான் அவர் கிணற்றைத் தோண்டினார்.

வள்ளுவர் சரியாகவே இந்த உண்மையைச் சொல்லுகிறார். ஊர்நடுவில் உள்ள, ஊருணி நீரால் நிறைந்தது என்றால், இதில் தனி ஒருவனது முயற்சி என்று எதுவும் இல்லை. மழை பெய்கிறது. ஒருவேளை வாய்க்கால் வெட்டி வைத்தது ஊர் மக்களது முயற்சி நிறைந்த நீர் ஊருணிக்குச் சொந்தமில்லை. தேவையான நீரை, அவரவர் எடுத்துக் கொள்ளலாம். இதேபோலத்தான் ஊர் நடுவில் பழுத்த மரம் பற்றியும் வள்ளுவர் சொல்லுகிறார். பழங்களை மனிதர் பறித்துக் கொள்ளலாம். பறவைகள் உண்ணலாம். தடை இல்லை.

இப்படி வள்ளுவர் சொல்லும் உவமைகள் எந்த உண்மையை நமக்கு உணர்த்துகின்றன? பெருந்தகையானுடைய செல்வம் இப்படிப் பயன்படும் என்கிறார். பேரறிவாளனுடைய திரு இப்படி பயன்படும் என்கிறார். செல்வம் அவனது சொந்த முயற்சியால் மட்டுமே அவனிடம் வந்து குவியவில்லை. எத்தனையோ பேர், எங்கெங்கிருந்தோ தந்த உழைப்பின் விளைவாக இவனிடம் செல்வம் குவிந்திருக்கிறது. அறிவுடையவன் இப்படித் தான் புரிந்து கொள்வான். அறிவில்லாதவன் தானே படைத்த செல்வம் என்று கர்வம் கொள்வான். வள்ளுவர் பெருந்தகையான் என்றும், பேரறிவாளன் என்றும் சொல்வதன் நுட்பம் நம் கவனத்திற்குரியது.

வள்ளுவர் இப்படி சொல்வதற்கான வரலாற்றுச் சூழலை நாம் கவனிக்க வேண்டும். வள்ளுவர் சொன்ன கருத்தும் வரலாற்றுச் சூழலிலிருந்து அவர் கண்டறிந்து திரட்டிய கருத்துத் தான். வள்ளுவர் காலத்தில் ஊர் நடுவில் மன்றங்கள் இருந்தன. சான்றோர் கூடி

மன்றங்களில் அமர்ந்து வழக்குத் தீர்த்தனர். இதற்கு அறங்கூர்அவை என்று பெயர். இத்தகைய அவை தமிழ்நாட்டின் வரலாற்றில் நெடுங்காலம் தொடருகின்ற முறை. ஊர் மன்றத்தில் இருந்தவர் சான்றோர் எனப்பட்டனர். தமக்கு முற்பட்ட ஆதிப்பொதுமைச் சமூகத்தின் தொடர்ச்சி என்று இவர்களைச் சொல்ல முடியும். இந்த பொதுமை அறத்தைதான் வள்ளுவர் பேசுகிறார். "இருவேறு உலகத்து இயற்கை திருவேறு தெள்ளியர் ஆதலும் வேறு" என்ற முரண் நிலை வள்ளுவருக்கு உடன்பாடில்லை. எப்படி இப்படி ஒரு சமூகமுரண் ஏற்பட்டது என்ற கேள்வியை வள்ளுவரும் கேட்கிறார். இதுபுரியவில்லை என்கிறார். இதுமாற வேண்டும் என்கிறார்.

2. இப்பொழுது நாம் சொல்லலாம் எனது தனித்தன்மை என்பது எனக்குள் நான் சேகரித்துக் கொண்ட பொதுத்தன்மைதான். நமது சமூகத்தில் காலங்காலமாகப் பெரும்பாலான மக்களுக்குள் தொடர்கின்ற பொதுத்தன்மையைத்தான் எனக்குள் திரட்டிக் கொள்ள நான் முயற்சி செய்தேன். இதற்கு மரபு என்றும் பெயர் சொல்லலாம். மரபு என்பதைப் பழமை என்று பொருள்படுத்துவது பொருந்தாது. மரபுக்குள் படைப்புத் தன்மை இயல்பாகப் பொருந்தியிருக்கிறது. படைப்புத்திறன் காரணமாக மரபு எப்பொழுதும் தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது மாணிக்கவாசகர் இறைவனைக் குறித்துச் சொன்ன வாசகத்தை இங்கு நினைவு கொள்ளலாம். "முன்னைப் பழமைக்கும் முன்னவனே பின்னைப் புதுமைக்கும் அப்பெற்றியனே" என்றார் மாணிக்கவாசகர். இறைவன், என்றும் அழிவில்லை, அவன் என்றும் இருக்கிறான், பழையவனாகவும் புதியவனாகவும் இருக்கிறான். தன்னை புதுப்பித்துக் கொள்ளவும் செய்கிறான். எப்பொழுதும் அவன் புதியவனாக இருக்கிறான் என்பது மாணிக்கவாசகர் கருத்து. மரபும் இத்தன்மையுடையதுதான். இந்த மரபின் ஆற்றலைத்தான் நானும் என் படைப்புக்களிலும் திறனாய்வுகளிலும், வரலாற்றுப் பார்வை, தத்துவப் பார்வை ஆகியவற்றிலும் கண்டறிந்து வெளிப்படுத்தி உள்ளேன். எனது சமூகச் சூழல் இப்படி ஒரு தீர்வை நோக்கி, கண்டுபிடிப்பை நோக்கி என்னை உந்தியது என்பதைத்தான், எனக்கானவாழ்வு என்று உணர்கிறேன். இதுபற்றியும் நான் சுருக்கமாகச் சொல்லவேண்டும்.

3. நான் கிராமச் சூழலில் வாழ்ந்தேன். பெரியதொரு குடும்பத்தின் பல்வேறு சிக்கல்களுக்கு இடையில் வளர்ந்தேன். வாழ்க்கை எனக்கு என்றைக்குமே சிக்கலாகத்தான் இருந்தது. என் குடும்பச் சூழலில் என் பெற்றோரும், சகோதரர்களும் வாழ்க்கை நெருக்கடியில் போராடிக் கொண்டிருந்தனர். கிராமச் சூழலிலும் பல்வகையான நெருக்கடிகளும் சிக்கல்களும். படிக்கிற சூழலிலும் எவ்வளவோ சிக்கல்கள். தமிழ்ச்

சமூகச் சூழலில் பல்வேறு வகையான இயக்கங்கள், இவற்றிற்கிடையிலும் முரண்கள். நம் சமூக சூழலில் இயல்பாகவே மதம் நம்மை பாதிக்கிறது. கோயில்களும், திருவிழாக்களும், சடங்குகளும் எப்பொழுதும் நம்மைத் தொடர்கின்றன. விடுதலைக்குப்பிறகு சமூக அளவில் எத்தனையோ சிக்கல்கள். சொந்த வாழ்க்கையிலும் அவமதிப்புக்கள், புறக்கணிப்புக்கள். சாண் ஏறினால் முழம் சறுக்குகிற வாழ்க்கை. போட்டிகளில் வெற்றி உறுதியில்லை. பொறாமைப்படுவதில் பயனில்லை. நினைத்த காரியங்கள் கை கூடுவதில்லை. நண்பர்கள், உறவினர்களின் அன்பு எப்பொழுதுமே ஆறுதலாக இருக்கிறது. கதைகள் கேட்கிறோம். பழமொழிகள் காதில் விழுகின்றன. உழவர் சமூகம் இடையறாது உழைக்கிறது. மழை கொட்டும், அல்லது மண்ணைக் காயவைக்கும். தமிழல்லாத பிறமொழிகளும் வழங்குகிற சூழல். உலகப் போர் நிகழ்ச்சிகளும் நமக்குள் வந்து விழுகின்றன. காந்தி, நேரு, முதலியவர்களோடு எப்படியோ சில உறவுகள். கடவுள் உண்மையா, இல்லையா என்ற கேள்வி. பெரியாரின் ஓயா அலைவுகள் திராவிட இயக்க நண்பர்களின் அலைசச்ல்கள் இப்படி எவ்வளவோ சொல்லலாம்.

இத்தகைய சூழலுக்குள் தான் நான் இருந்தேன். முரண்பாடுகள் எனக்குள்ளும், கீறல்களும், காயங்களும் ஏற்படுத்தின. எனக்குள் சிதைவுகளும், சிக்கல்களும், நேர்கின்றன. நல்ல எண்ணங்களும் தீய எண்ணங்களும் எனக்குள்ளும் மோதுகின்றன. காமம் முதலிய எத்தனையோ உணர்வுகள். இவற்றிலிருந்து நான் குணப்பட வேண்டும். தேர்ச்சி பெறவேண்டும். ஓயாத கேள்விகள். போதுமான புத்தகங்கள் கிடைப்பதில்லை. சிரமப்பட்டால் இரண்டொரு வகை நூல்கள் கிடைக்கும். இவற்றிற்கிடையில்தான் என்னை நானே திரட்டிக் கொள்வதற்கான முயற்சிகள்.

எனக்கு நினைவு தெரிந்த காலம் முதல் தொடங்கிய முயற்சிகள் இன்றும் தொடருகின்றன என்று நான் சொல்ல வேண்டும். எனினும் உச்சகட்டமான சில நெருக்கடிகளும், தீர்வுகளும் எனக்கு அவ்வப்பொழுது கிடைத்தன. இப்படி எத்தனை உச்சங்கள் என்னுடைய வாழ்க்கையில் இவற்றையெல்லாம் நான் நிதானமாகச் சிந்தித்துப்பார்க்கவேண்டும். கடவுளோடு எனக்கு ஏற்பட்ட நெருக்கடி, மார்க்சியத்தோடு எனக்கு ஏற்பட்ட நெருக்கடி. பெரியாரியத்தோடும் இப்படி ஒரு நெருக்கடி ஏற்பட்டது. மார்க்சியத்தின் இலக்கியக் கோட்பாட்டை வரையறுப்பதில் ஒரு நீண்டகால நெருக்கடி. தமிழில் அமைப்பியல் தொடங்கி இன்று பின் நவீனத்துவம் வரை பல்வேறு அணுகு முறை. இவை மார்க்சியத்தோடு மோதும்போது எனக்குள் ஏற்பட்ட நெருக்கடி. கடைசியாக தமிழ்த் தேசியம் என்ற அரசியலுக்காக தமிழ் மெய்யியல், தமிழ்ப் பண்பாடு, தமிழியச் சிந்தனை ஆகியவற்றைத் தொகுப்பதில் ஒரு நெருக்கடி.

இப்படி பலவற்றைச் சொல்லவேண்டும். இளமை முதற்கொண்டு நண்பர்களோடு உறவும், பகையும் "புதிய தலைமுறைக்" காலத்தில் எங்களுக்குள் ஏற்பட்ட நெருக்கடி ஆசிரியராகப் பணிபுரிந்த பள்ளி வாழ்க்கைக் காலத்தில் சில நெருக்கடிகள். குடும்பச் சூழலில் இன்றும் தொடரும் நெருக்கடிகள் என பலவற்றை நினைத்துக் கொள்கிறேன். இவற்றை விவரிப்பது சாத்தியம் இல்லை.

4. அடிப்படையில் நான் ஒரு திறனாய்வாளன் என்று அறியப்படுகிறேன். தமிழ் இலக்கியத்தை நான் போற்றுகிறேன். மார்க்சியத்தைக் கொண்டாடுகிறேன். மனித மேன்மை பற்றி எப்பொழுதும் சிந்திக்கிறேன். படைப்புத்திறன் இல்லாமல் எந்த மனிதரும் இல்லை. கவிஞர் அல்லது பொதுவாக படைப்பாளிகளுக்குள் இயங்குகிற படைப்புத்திறன் என்பது அவர்களுக்குள் மட்டும் இயங்குவதாக சிலர் போற்றுவதை கொண்டாடுவதை நான் வெறுக்கிறேன். இப்படிப் போற்றுபவர் தமக்குள் உள்ள படைப்புத்திறனைக் கண்டு கொள்ளாதவர்கள் அல்லது வளர்த்தெடுப்பதற்கான முயற்சிகளைச் செய்யாதவர்கள். அல்லது படைப்புத்திறன் என்பதை கவிதைக்குள் அல்லது இலக்கியத்திற்குள் மட்டும் கண்டவர். படைப்புத்திறன் இல்லாமல், விஞ்ஞானிகள், வணிகர்கள், உழவர், கொத்தனார் இல்லை. விலங்குகளுக்கும் கூட குறைந்த அளவிலேனும் படைப்புத்திறன் இல்லாமல் அவை வாழ முடியாது. படைப்புத்திறன் என்பதை சில கூறுகளில் மட்டும் நாம் இணங் காணுகிறோம் வளர்த்துக் கொள்கிறோம் பல பரிமாணங்களிலும், படைப்புத் திறனை வளர்த்துக் கொள்வதற்கான சாத்தியக்கூறுகள் நம் சமூகத்தில் இல்லை.

இளம் வயதில் இசை அல்லது ஓவியத்தில் பேரார்வம் உடைய எத்தனையோ சிறுவர்கள், இளைஞர்களுக்கு இவற்றை வளர்த்துக் கொள்வதற்கான வாய்ப்பு நம் சமூகத்தில் இல்லை. இவர்களின் படைப்புத்திறன்கள் மறுக்கப்படுவதோடு அன்றி முடக்குவதையும் அழிப்பதையும் பெற்றோர்கள் செய்கிறார்கள். ஆசிரியர்களும் செய்கிறார்கள். அப்புறம் அரசும் முதலாளிகளும் செய்கிறார்கள். இவர்கள் தம் தேவைகளுக்கு ஒத்த முறையில் அவர்களின் படைப்புத் திறன்களை முடக்குவதையோ குறுக்குவதையே, திட்டமிட்டுச் செய்கிறார்கள். இங்குதான் அரசியல் என்றும், பொருளியல் என்றும், கருத்தியல் என்றும் பேச வேண்டி உள்ளது.

5. இப்படி கவிதை என்று தொடங்கினால் உலகளவில் அரசியல் என்றும், வரலாறு என்றும் பயணம் செய்தாக வேண்டும். இடையில் நிற்கமுடியாது. கவிதை என்று தொடங்கினால், கம்யூனிசம் வரை பேசியாக வேண்டும். தொல்காப்பியர் என்று தொடங்கினாலும்

இப்படித்தான். கடவுள் என்று தொடங்கினாலும் இதே பயணம்தான். இத்தகைய பயணத்திற்கு ஒருவர் சில பத்தாண்டுகளைச் செலவிட்டாக வேண்டும். பயன்உள்ளவை இந்தப் பத்தாண்டுகள். குறுகிய எல்லைக்குள் வாழ்க்கைப் பயணத்தை நடத்த இயலாது. எல்லைகள் மனிதனை குறுக்கும். தடைப்படுத்தும், அழித்துவிடவும் செய்யும். எல்லைகளை விரித்துக் கொண்டே செல்ல வேண்டும். எல்லைகளின் விரிவுக்கு அளவு இல்லை. ஆங்காங்கே நின்று, நிதானித்தும் செல்லத்தான் வேண்டும்.

இந்தப் பயணம் ஒரு பேரின்பம். இந்தப் பயணத்தின் வழியே நம்மை நாம் கண்டுகொள்கிறோம். இயற்கையோடும், வரலாற்றோடும், சமூகத்தோடும், இவற்றையெல்லாம் உள்ளடக்கிய பிரபஞ்சத்தோடும் நாம் வாழ்கிறோம். இவையனைத்தும் நமக்குள் வந்துபோகின்றன. நமக்குள் பதிகின்றன. இப்படித் தான் நம்மை நாமே படைத்துக் கொள்கிறோம். இயற்கை அல்லது வரலாற்றின் அனைத்துப் பரிமாணங்களிலும் நமக்குள் வாழமுடியாதென்பது உண்மைதான். எனினும் இவற்றின் ஆற்றல் மிக்க சில கூறுகளில் உறவுகளில் நம்மை நாமே கண்டுகொள்ளமுடியும். நான் யார் என்ற கேள்வியை எழுப்பி நானே பிரம்மம் அல்லது சூன்யம் அல்லது பொருள் அல்லது சக்தி அல்லது சிந்தனை அல்லது விலங்கு என்றெல்லாம் இறுதி உண்மை எனக்கண்ட பல தத்துவங்களை நாம் பார்த்திருக்கிறோம் இவையெல்லாம் உண்மை பற்றிய சில கோணங்கள், சில பார்வைகள், இவற்றின் வழியே நாம் பேரளவில் பயணம் செய்தால் அன்றி நமக்குள் சரியான அல்லது தேவையான பார்வைகளை தொகுத்துக் கொள்வதும் சாத்தியமில்லை.

6. இப்பொழுது திரும்பவும் சொல்கிறேன். வாழ்க்கையின் நெருக்கடிகள்தான் தீர்வுக்கான விடைதேடி என்னைத் துரத்தின. நெருக்கடி மிக்க இந்த பயணத்தின்போதுதான் தமிழ் இலக்கியத்திற்குள் நான் ஆழ்ந்து சென்றேன். மார்க்சியத்திற்குள் தேடினேன். படைப்புத்திறனை அறிந்து கொண்டேன். திறனாய்வாளன் ஆனேன். மெய்யியலாளன் ஆனேன். இப்படித்தான் என்னை நானே சில புள்ளிகளில் தொகுத்துக் கொண்டேன். இத்தகைய பார்வை நான் பெற என்னைத் தூண்டியவர்கள், என்னோடு பயணம் செய்தவர்கள், எனக்கு வெளிச்சங்கள் வழங்கியவர் என்று எத்தனை பேர்களை நான் சொல்லமுடியும்! எத்தனை விரிந்த வரலாற்றுச் சூழலுக்கு நான் நன்றி சொல்ல வேண்டும்! சொற்களில் இவற்றை அடக்கமுடியாது. நானே கடவுள் என்று ஒருசமயம் அறிந்தேன். மனிதன்தான் கடவுளைத் தோற்றுவித்தான் என்பதைப் புரிந்து கொண்டேன். கடவுளை நான் மறுக்கவில்லை, வரலாறு என்றும் பிரபஞ்சம் என்றும் வாழ்க்கை என்றும் கடவுள் வடிவத்திற்குள் அர்த்தப்படுத்தக் கூடியதுதான் கடவுள்

என்றும் கருத்து. மனிதனோடு தொடர்புடைய எவ்வளவோ சக்திகள். எத்தனையோ புதிர்கள். சங்கரனோ, ராமானுஜனோ, புத்தனோ. தனியாக அவர்கள் இல்லை. நமக்குள் இவர்களை ஆங்காங்கே தரிசிக்க முடியும். இயற்கை நமக்கு எத்தனையோ உண்மைகளைக் கற்றுத்தரும். சண்டாளனிடமிருந்தும் சரியான உண்மைகளை சங்கரன் கற்றுக் கொள்வான். எல்லாத் தத்துவங்களும் சாதாரண மக்களிடமிருந்துதான் தோன்றுகின்றன. இறுதியில் நாம் தெரிந்து கொள்வது என்ன? நிலமும் நீரும், காற்றும், வானமும், சுத்தமாக இருக்கவேண்டும். மக்களின் படைப்புத்திறன் மேம்பட வேண்டும். இப்படி மேம்படுவதற்கான சமூகச் சூழல் வேண்டும். இத்தகைய சூழலில் தான் மனிதர்கள் தம்மைத்தாமே தமக்குள் படைப்புத்திறன் கண்டு வரலாற்றோடு பிரபஞ்சத்தோடு இணைந்து, தமக்குள் விரிவு கண்டு பேரானந்தம் கொள்ளமுடியும். இந்த மனித விடுதலை தான், வாழ்க்கையைத் திறனாய்வாளன் என்ற முறையில் நான் முன்னிலைப் படுத்துகிறேன். தமிழ் இலக்கிய ஆய்வு அல்லது மார்க்சிய ஆய்வு பற்றிய நோக்கத்தைத் தான் அல்லது தமிழோடு தொடர்புடைய எத்தகைய ஆய்வும் செயல்பாடுகளும் தமிழனின் விடுதலைக்கான ஆய்வாகத்தான், படைப்பாகத்தான் இருக்க முடியும். தமிழுக்குள் இந்த சக்தி உண்டு. பார்வை உண்டு. இதைத்தான் மரபு என்கிறேன். தமிழ் என்கிறேன். இதைக் கண்டறிந்து தொகுப்பதில் தான் எனது தேடல் அடங்கி உள்ளது.

# 4. எனது வரலாற்றுப் புரிதல்

1. வரலாறு குறித்து எனக்கேற்பட்ட ஆர்வம், எத்தகைய காரணங்களால் ஏற்பட்டது என்பது எனக்கு இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. எனினும் வரலாறு என்னைப் பொறுத்தவரை மிகுந்த கவர்ச்சி உடையதாய் உணர்கிறேன். வரலாற்றில் ஒருவர் தன்னை வைத்துப் பார்க்கும்பொழுதுதான், தான் தனிமனிதன் அல்லன் என்பதும், வரலாறு பல திசைகளிலிருந்தும் தனக்குள் வந்து கலந்துள்ளது என்பதும், இன்றைய தனது உருவாக்கத்திற்கும் குறைநிறைகளுக்கும் இன்றைய வரலாற்றுச் சூழல் எப்படியெல்லாம் காரணமாக அமைகிறது என்பதையும் தனது அடுத்த கட்டம் எது? என்பதையும் தெரிந்து கொள்ள முடிகிறது.

சென்ற நூற்றாண்டில் நான் பிறந்திருந்தால், நான் இன்றுபோல இருந்திருக்கமாட்டேன். இன்னும் சில நூற்றாண்டுகள் முற்பட்டுப் பிறந்திருந்தால் நான் பெரிதும் வேறுபட்டவனாக இருந்திருப்பேன் அதேபோல வேறு நாட்டில் பிறந்திருந்தால் நான் இன்றிருப்பதுபோல இருந்திருக்கமாட்டேன். இந்த உண்மை தனிமனிதன் என்ற முறையில் எனக்கு மட்டுமல்லாமல் உலகிலுள்ள அனைவருக்கும் பொருந்தும். குழுக்களாக மனிதன் வாழ்கிறான் என்று வைத்துக் கொண்டால். இந்த குழுக்களுக்கும், நாடுகளுக்கும் கூட இந்த உண்மை பொருந்துகிறது. வரலாறு பற்றிய கண்ணோட்டங்களும் தொடர்ந்து மாறி வருவதை நான் உணர்கிறேன்.

2. 5ம் வகுப்பு படித்தபொழுது எஸ்.எஸ். மாரிசாமி எழுதிய இரண்டொரு நூல்களை நான் படித்தேன். சைமன் டிவேளரா பற்றி ஒருநூல், சுபாஷ் சந்திரபோஸ் பற்றி இன்னொரு நூல். அடுத்து பல ஆண்டுகளுக்கு பிறகு வீரசாவர்க்கர் எழுதிய "எரிமலை" படித்தேன். இரண்டாம் உலகப்போர் பற்றிய செய்திகள் தினமணியில் படித்தேன். காந்தியின் இறப்பை வானொலியில் கேட்டு அதிர்ச்சியுற்றேன். நேருவின் "உலக சரித்திரம்" படித்தபோது, எனக்குள் எவ்வளவோ வியப்புக்கள் ஏற்பட்டன. பின்னர் நேருவின் டிஸ்கவரி ஆப் இந்தியா படித்தபோது, வரலாற்று அலைகள் எனக்குள் மோதியதை உணர்ந்தேன். அநேகமாக கல்லூரிக் காலத்திலும் அதற்கு முன்பும் இவற்றை படித்த நினைவு எனக்கு இருக்கிறது.

நெடுங்கால வரலாறு நம்மோடு தொடர்பு கொண்டிருப்பதை நேருவின் நூல்கள் தான் நமக்கு உணர்த்துகின்றன. இந்தியாவின் நெடுந்தூரப் பயணங்களின்போது, மக்கள் கூட்டத்திற்கு இடையில்

திடீரென ஒரு கிரேக்க முகம் தென்படுகிறது, மங்கோலியன் முகம் தென்படுகிறது என்றெல்லாம் நேரு எழுதிச் செல்கிறார். பழங்கால எல்லோரா, அஜந்தா குகைக்கோயில்களில் ஓவியமாய்த் தீட்டப்பட்ட முகங்கள் திடீரென இந்த மக்கள் கூட்டத்தில் தென்படுகின்றன என்று நேரு எழுதுகிறார். வேதகாலம் இன்னும் நம்மோடு இருக்கிறது என்கிறார். வேற்றுமைகளில் ஒற்றுமை குறித்து நேரு எழுதுகிற வாசகங்கள், என்னைப் பெரிதும் கவர்ந்தன. நெடுங்கால வரலாற்றை இன்றும் நமக்குள் நாம் சந்திக்கிறோம் என்பதுதான் என் கவர்ச்சிக்கு முதன்மையான காரணமாக இருக்கமுடியும். அன்றியும் நம் நாட்டில் மட்டுமல்லாமல் வேறு எத்தனையோ நாடுகளில் மக்கள் வாழ்ந்த வரலாற்று அனுபவங்கள் நமக்குள் எத்தனையோ உணர்வலை களை எழுப்புகின்றன. இவற்றைப் படிக்கிறபொழுது சில கணங்களேனும் அந்தத் தொலைதூர நாடுகளில் அந்த மனிதர்களோடு நாம் வாழ்வதை உணர்கிறோம். எப்படியோ நமக்குள் நாம் இருக்கிறோம். சின்னச்சின்ன உணர்வுகளுக்கு நமக்குள் இடம் கொடுப்பதை எவ்வளவு பெரிய மூடத்தனம் என்பதை அறிகிறோம்.

விஞ்ஞானிகள், தேசத் தலைவர்கள், சான்றோர்கள், எனப்பலரது வாழ்க்கை வரலாறுகளை படிக்கிறபோதும், எத்தனையோ பிரச்சனைகளோடு, எவ்வளவோ தீர்வுகளோடு நமக்குள் இணைவு ஏற்படுகிறது. நமது சூழலில் குறிப்பிட்ட கால அளவில் நமது வாழ்வின் வழியே நம்மால் உணர முடியாத பேரனுபவங்கள் நமக்கு வாய்க்கின்றன. நம்மை நாமே புரிந்து கொள்வதற்கு, பிறரோடு ஒன்றுபட்டோ பிறரிடமிருந்து நம்மை வேறுபடுத்தியோ, உணர்வதன் மூலம் தான் வரலாற்று அறிவு நம்மைப் படைக்கவும் செய்கிறது. இத்தகைய வரலாற்றுப் படிப்பின் வழியே நாம் பயணம் செய்யும்பொழுது நமக்கான வாழ்வை, தலைவர்களை, சான்றோர்களை தெரிவு செய்து கொள்ளவும் செய்கிறோம்.

(இன்று நினைத்துப் பார்க்கும்பொழுது என் இளம் வயதில் ஒருவேளை நேருவைத்தான் ஒரு இலட்சிய தலைவராகத் தேர்ந்து எடுத்துக் கொண்டதாக உணர்கிறேன். 1965க்குப் பிறகு நேருவின் பாதிப்பிலிருந்து என்னை விடுவித்துக் கொள்வதற்கு நான் பெரிதும் சிரமப்பட்டேன். எப்படி இருந்த பொழுதிலும் நேருவின் பாதிப்பிலிருந்து நான் இன்னும் முற்றாக விடுபடவில்லை. இன்றும் எனக்குள் உள்ள நேருவின் பாதிப்பு எனக்குத் தீங்கு செய்வதாக நான் உணரவில்லை) காந்தியைப் பொறுத்தவரை இன்றும் நான் அவரை மதிக்கிறேன் வரலாற்றில் இருந்தே கூட காந்தியைத் தூக்கியெறிந்துவிட மார்க்சியர் சிலர் வெறித்தனமாக முயற்சி செய்வது எனக்கு உடன்பாடில்லை வரலாற்றுச் சூழலை வைத்து காந்தியை மதிப்பிடுவதைத்தான் மார்க்சியர்

செய்ய வேண்டும். இதற்கு மாறாக காந்தியை முற்றாக மறைப்பதோ, மறுப்பதோ மார்க்சிய நெறியும் ஆகாது. மார்க்சிய பார்வைக்கு இது தீங்கு ஆகிவிடும். காந்தி எனக்குள் எங்கோ இன்னும் வாழ்வதாகத்தான் உணர்கிறேன். இன்றைய வரலாற்றுச் சூழலில் காந்திக்கான தேவை அதிகரிக்கவும் செய்திருக்கிறது.

3. 8ம் வகுப்பு படிக்கிறபோது என் ஆசிரியர் திரு நஞ்சுண்டேஸ்வரன் அவர்கள் மூலம் வரலாறு எனக்குள் கவர்ச்சியாய்ப் பதிந்திருக்கக் கூடும் என்று உணர்கிறேன். திருத்தமாக அவர் பாடநூலில் வரலாற்றை எங்களுக்குள் செலுத்தினார். திரும்பத் திரும்ப தேர்வு எழுத வைத்து பாடநூலில் உள்ள வரலாற்றை எங்களுக்குள் துள்ளியமாய்ப் பதிய வைத்தார். மாணவர்களுக்குள் ஆற்றலை வளர்க்க இத்தகைய வழிமுறையைத் தவிர வேறு வழிமுறை இல்லை என்றுகூட இப்பொழுது நான் உணர்கிறேன். மனத்தில் இவ்வாறு திட்டவட்டமாக பதிய வைத்துக் கொண்டால் பிரிதொரு சமயத்தில் இந்தப் பதிவுகள் தொடர்ந்து நாம் சிந்திப்பதைக் கோருகின்றன. மேலும், மேலும் வரலாற்றை நாம் படிப்பதற்கான துண்டுதலை இந்தப் பதிவுகள் தருகின்றன.

8ம் வகுப்பு தேர்வு முடிந்தபின் நான் செய்த ஒரு பெரிய முயற்சி என் நினைவில் உள்ளது. 9,10ம் வகுப்பு வரலாற்றுப் பாட நூல்கள் ஒரு சிலவற்றை நான் சேகரித்து நானே 4,5 குறிப்பேடுகளில் இந்திய வரலாற்றை முழுமையாகத் தொகுத்து எழுதினேன். பிறகுதான் கல்லூரி நூலகங்களில் பெரிய, பெரிய வரலாற்று நூல்களை நான் பார்க்கவும், சிலவற்றைப் படிக்கவும் செய்தேன். நேருவின் நூல்களை இப்படித்தான் நான் படித்தேன். எச்.ஜிவெல்ஸ் போன்றவர்களை கல்லூரி படிப்பின் இறுதிக் காலத்தில் தான் படித்தேன். என்னை மார்க்சியனாக உருவாகிக் கொண்ட காலத்தில் கோசாம்பி முதலியவர்களை படித்தேன். வரலாற்று வரைவியல் எனக்குப் பெரும் கவர்ச்சியை இன்றும் தருகிறது. வரலாறுகள் எவ்வாறு எழுதப்படுகின்றன என்பது பற்றியெல்லாம் இன்று கூடுதலாகச் சிந்திக்கிறோம்.

4. 60 தொடக்கத்தில் மார்க்சியத்தோடு எனக்கு நெருக்கமான உறவு ஏற்பட்டது. கல்லூரிக் காலத்தில் மார்க்சியம் என்னை வெற்றி கொள்ளக்கூடாது என்று எனக்கு நானே உறுதி செய்திருந்தேன். சமயம் தொடர்பான என்னுடைய அனுபவங்களின் விளைவாக என்னையும் நான் புரிந்து கொள்ள, சமயத்தையும் புரிந்து கொள்ள மார்க்சியம் தவிர வேறு நெறி இல்லை என்பதை உணர்ந்தேன். மார்க்சியத்தோடு எனக்கு இருந்த முரண் என்பது "எங்கல்சின் "குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்" நூலைப்

படித்தபோது முற்றாகத் தீர்ந்தது என்பதை இங்கு நான் குறிப்பிட வேண்டும். நேருவின் நூல்கள் மார்க்சியத்தை நோக்கி என்னை நகர்த்தின என்றபோதிலும், மார்க்சியம் தன்னை முற்றாக வசப்படுத்திக் கொண்டது எங்கல்சின் நூல் மூலம்தான். எங்கல்சு நூல் எனக்கு மாபெரும் வரலாற்றை எனக்குள் திறந்து வைக்கிற பேரொளியாகப்பட்டது. இந்,த நூலைப் படித்த அடுத்த பல வாரங்கள் இந்தநூல் எனக்குள் ஏற்படுத்திய வியப்பில் ஆழ்ந்திருந்தேன். என்னைப்போல இந்த நூலின் கவர்ச்சிக்கு பலர் ஆட்பட்டிருக்கக்கூடும். எத்தனையோ ஆண்டுகள் கழித்து நண்பர் ஜீவஒளியோடு பேசியபொழுது, இந்தநூல் அவருக்குள் ஏற்படுத்திய பெரும் கவர்ச்சி பற்றிக் கூறினார்.

மார்க்சிய நோக்கினாலான வரலாற்றுப் புரிதலை நான் இறுதியாகப் பற்றிக் கொண்டேன். தொடர்ந்து படித்தேன். வரலாற்றுப் பொருள்முதல்வாதம் குறித்து "பிளக்கனோவ்" நூல் பலமுறை படித்தேன். எனது புரிதல் முழு அளவில் சரியானது என்று உறுதியாகக் கூறமுடியாது. எஸ்.என். நாகராசன் அவர்களைப் பொறுத்தவரை, மார்க்சியம் குறித்தும், மார்க்சிய வரலாற்றியல் குறித்தும் நிறைய எங்களுக்குக் கற்பித்தார். நண்பர்களோடு சேர்ந்து நிறைய நூல்களை நானும் படித்தேன். "புதிய தலைமுறை"க் காலத்தில், நான் எழுதிய சில கட்டுரைகள் மார்க்சிய நோக்கிலான எனது புரிதலை கொண்டிருந்தன. என்று புரிந்து கொள்கிறேன். பிறகு இந்த இறுக்கம் தளரத்தான் செய்தது. அப்புறம் எத்தனையே புதிய புரிதல்கள் நேர்ந்தன.

5. இந்திய வரலாறு குறித்து கோசாம்பி அவர்களின் நூலை நாகராசன் அறிமுகப்படுத்தினார். அதன்பிறகு இர்பான், ஹபீப் முதலியவர்களின் நூல்களையும் கிடைத்த அளவுக்கு நாங்கள் படித்தோம். டாங்கே அவர்கள் எழுதிய நூலை நாகராசன் கடுமையாக விமர்சனம் செய்தார். இந்திய வரலாற்றுச் சூழலைப் புரிந்து கொள்வதற்கு மார்க்சியத்தை எவ்வாறு பயன்படுத்துவது என்பது இன்றைக்கும் பெரிய சிக்கலாக இருக்கிறது. நம்பூதிரிபாட் - இந்திய வரலாறு குறித்து நிறைய எழுதியுள்ளார். தெலிங்கான புரட்சி குறித்தும் நூல்கள் வெளிவந்தன. இந்தியாவின் பொருளியல், தத்துவ வரலாறு குறித்து தேவி பிரசாத் முதலியவர் நிறைய எழுதியுள்ளனர். மேற்குலக வரலாறு போல இந்திய வரலாறு இல்லை. இந்திய வரலாற்றின் தனித்தன்மையை மார்க்சியர் என்ற முறையில் நாம் தெரிந்தாக வேண்டும். பாஸ்டியன் விலங்கா அவர்களின் நூலின் கருத்துக்களைத் தொகுத்து "பரிமாணத்தில்" வெளியிட்டோம். இந்திய வரலாறு குறித்து மார்க்சிய அறிஞர்களின் நேர்காணல் ஒன்று "இந்து" இதழ் வெளியிட்டது. அதையும் தொகுத்து "பரிமாணத்தி"ல் வெளியிட்டோம்.

இந்திய வரலாறு போலவே தமிழக வரலாறும் தனித்தன்மை யுடையது. கே.கே.பிள்ளை அவர்கள் திராவிடக் கருத்தியல் என்ற பார்வையில் தமிழக வரலாற்றைத் தருகிறார். தமிழகத்தில் ஒரு 1000 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்ற இடங்கை, வலங்கை போராட்டங்கள் குறித்து அவரது கருத்துக்களைத் தொகுத்துப் "பரிமாணத்தில்" வெளியிட்டோம். கம்பராமாயணம் குறித்து பேராசிரியர் வீரைய்யன் எழுதிய நூலில் தமிழக வரலாறு குறித்து எழுதியிருக்கிறார். இதிலிருந்து ஒரு தொகுப்பைப் பரிமாணத்தில் வெளியிட்டோம். இத்தகைய முயற்சிகள் எல்லாம் நமக்கான வரலாற்றை எவ்வாறு அறிந்து கொள்வது என்ற நோக்கில் நாங்கள் கற்றுக் கொண்டவை.

சோவியத் யூனியனின் சோசலிச வரலாறு குறித்தும் தொடர்ந்து கற்றோம். ஆசிய உற்பத்திமுறை குறித்து மார்க்சின் ஆய்வுகளை அவ்வப்பொழுது கற்றபொழுதிலும் இந்திய வரலாற்றுக்கான திறவுகோல் இதில்தான் உள்ளது என்பதைப் புரிந்து கொள்ள எனக்கு நெடுங்காலம் பிடித்தது. இந்தக் கருத்தாக்கத்தின் அடிப்படையில் மட்டுமே இந்திய சமூகத்தின் தனித்தன்மையை நாம் புரிந்துகொள்ள முடியும். இந்தியாவின் கிராம சமூகத்தில் உற்பத்தியும், பகிர்வும், நிர்வாகமும் எவ்வாறு ஒருங்கிணைந்த முறையில் நடைபெற்றன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இத்தகைய கட்டமைப்பில்தான் சாதிக்கான இடம் உருவாகிறது. சாதி என்பது இங்கு முதன்மையாக பொருளியல்கூறு அடுத்தபடியாகத்தான் கருத்தியல்கூறு. பிரிட்டீஸார் வந்தபிறகு இந்த கட்டமைப்பை அவர்கள் குலைத்தனர். இந்திய சமூகத்தை முற்றிலும் வேறான பாதையில் அடித்துத் துரத்தினார். இந்தச் சிக்கல் இன்றளவும் நமக்குள் தீரவில்லை. இந்தச் சிக்கலின் வரலாற்றை புரிந்து கொள்ளாமல்தான் நமக்குள் கடுமையான மோதல்கள் தொடர்கின்றன.

மார்க்சியம் பற்றிய புரிதல்களில் எவ்வளவோ வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன. இறுக்கமாக உருவாக்கப்பெற்ற மார்க்சிய கட்டமைப்பை அங்கங்கே தளர்த்தி திருத்தங்கள் செய்து புதிய கூறுகளை உள்ளிருந்தே வளர்த்தெடுத்து நம் கால வரலாற்று சூழலுக்கான மார்க்சியக் கருத்தியலை உருவாக்குவதில் நாகராசனின் சாதனை வியக்கத்தக்கது. இவரின் புரிதலோடு நானும் இணைந்திருப்பது என்னைப் பொறுத்தவரை மிகுந்த மகிழ்ச்சி தருகிறது. என் அளவுக்கு நானும் கூடுதலான சில புரிதல்களை எனக்குள் வளர்த்திருக்கிறேன்.

6. வரலாறு தொடர்ச்சியாக, இடையீடுன்றி அறுபடாமல் எங்கும் எப்பொழுதும் நிகழ்வதில்லை. ஒரு கலாச்சாரத்தோடு, இன்னொரு கலாச்சாரம் மோதும்பொழுது ஒரு நாடு அல்லது சமயத்தின் வரலாற்று தொடர்ச்சி முற்றிலும் அறுபடுவதும்கூட சாத்தியம்தான். வெளிநாட்டுப்

படையெடுப்புக்கள் என்பன இப்படி ஒரு நாட்டின் வரலாற்றுப் பாதையை மாற்ற முடியும் அரிதாகவே இப்படி நிகழ்கிறது. பெரும்பாலான சமயங்களில் படையெடுப்பை அடுத்து, நாகரிகங்கள் கலக்கின்றன. சில புதிய எழுச்சிகள் தோன்றுகின்றன. முன்னைய வரலாற்றின் பல கூறுகள் அழிகின்றன. சில கூறுகள் புதிய அர்த்தத்தோடு புதிய நாகரிகத்தில் பொருந்துகின்றன. பழைய வரலாறு என்று அப்படியே தொடர்ச்சியாக இப்பொழுது நாம் பேசமுடியாது. எந்த ஒரு கலாச்சாரமும் தனக்குள் முரண்பட்டதாகத் தான் இருக்கமுடியும். முரண்பாடுகள் எப்பொழுதுமே தம் தீர்வுக்கான திறப்புக்களை கொண்டிருக்கின்றன. தக்க சமயம் நேரும்பொழுது இப்படி வரலாறு தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது.

இன்றைய/நாளைய தேவைக்கான முறையில் தொன்மையான வரலாற்றை நாம் கற்கிறோம், புரிந்து கொள்கிறோம், கட்டமைக்கிறோம்.

இத்தகைய கட்டமைப்பின் வழியேதான் பழைய வரலாறு நமக்குள் பல அல்லது சில கூறுகளில் தொடர்கிறது. வரலாற்று மரபு என்ற தொகுப்பினுள் ஒரு முக்கியமான கூறு தன்னைத்தானே புதிய அடிப்படைகளில் உயிர்பித்துக் கொள்வது ஆகும். ஆதிப் பொதுமைச் சமூகம் என்பது நமக்குள் இன்றளவும் தொடர்கிறது. வரலாற்று ஆய்வு என்ற முறையில் இந்த நீரோட்டத்தை நாம் கண்டடைகிறோம், நமக்குள் இணைத்துக் கொள்கிறோம்.

வரலாறு குறித்து அண்மைக் காலத்தில் பாலிம்செஸ்ட் என்ற கோட்பாட்டை நண்பர்கள் முன் வைக்கிறார்கள். மேற்கிலிருந்து வந்த எத்தனையோ கருத்தாக்கல்களில் இதுவும் ஒன்று. கிரேக்க நாட்டில் வரலாறுகளை பதப்படுத்தப்பட்ட தோல்மீது எழுதி வைத்தனர். அதே தோல்களிலுள்ள எழுத்துக்களை, அவை மறைந்த நிலையிலோ, அழிந்த பிறகோ வேறொரு நூற்றாண்டில் தம் கால வரலாற்றை எழுதினார். இப்படியே தொடர்ந்து வரலாறுகள் எழுதப்பட்டன. இன்று அந்த ஏடுகளை ஆராய்கிறபொழுது பாறை அடுக்குகள், தம்படி நிலைகளிலிருந்து மாறி மேலும் கீழுமாக பக்க வாட்டிலும் மாறியும் திரிந்தும் காணப்படுவதைப் போல இந்த ஏடுகளில் எழுதப்பட்ட வரலாறுகளை படிக்க நேருகிறது. ஏட்டுப் பதிவில் ஒரு வாசிப்பில் இடைக்கால வரலாறு முன்னுக்கு வரும். இன்னொரு வாசிப்பில் பழங்கால வரலாறு முன்னுக்கு வரும். இப்படியே வரலாறு என்பதும் அடுக்குகள் சிதைந்து தான் படிக்கப்படுகின்றன.

இப்படி நாம் புரியலாம். தமிழகச் சூழலில் நம்மை பொறுத்தவரை, ஆழ்ந்து செல்லும் பொழுது, பல நூற்றாண்டுகள் பதிந்திருப்பதை,

அறிகிறோம். சைவர்களின், நாயன்மார் வரலாறு அல்லது சமணர்கள் புத்தர்கள் கால வரலாறு சிலருக்கு மேலுக்குவந்து விடுகிறது. சிலருக்கு திராவிட வரலாறு முன்னுக்கு வருகிறது. பலருக்கு சங்ககாலம் முன்னுக்கு வருகிறது. மற்ற கால வரலாறுகள் பின்னுக்குப் போகின்றன ஏர் புள்ளியில் தோண்டினால் என்னென்னவோ கிடைக்கின்றன. இப்படித்தான் நமக்குள் ஆதிப்பொதுமை முதல் எவ்வளவோ தட்டுப்படுகின்றன. சமணர்களோடும், நாயன்மார்களோடும், புத்தர்களோடும், தொடர்பு கொள்கிறோம். இராஜராஜ சோழனோடு நமக்குத் தொடர்பு ஏற்பட்டுவிடுகிறது. இன்று தமிழக வரலாறு, இந்திய வரலாறு குறித்து பேசுபவர்களை நான் இந்த பாலிம்செஸ்ட் கோட்பாட்டின் மூலம் நாம் புரிந்து கொள்ள முடியும். இதன்காரணமாக மார்க்சிய வரலாறு அழிந்து விடுவதில்லை. நாம் சமூக சூழலில் நமக்குள்ளும் வெளியிலும் எதிர்ப்படும் முரண்பாடுகள் வழியேதான் பாலிம்செஸ்ட் கோட்பாட்டின் அடிப்படை புரிதலும் நிகழ்கிறது.

7. இந்த அடிப்படையில் தான் இன்று தமிழ்த்தேசியம் என்ற அரசியல் முனைப்புக்கு வந்து சேர்கிறோம். மார்க்சியம், தமிழ், முதலியவை இங்கும் சரியாக பொருந்துவதாகவே உணர்கிறேன். சமயம், இலக்கியம் திறனாய்வு முதலிய அனைத்தும் எனக்குள் இந்தப் புள்ளியில் வந்து இணைகின்றன. தமிழக வரலாறு, உலக வரலாற்று சூழலின் எத்தனையோ தாக்கங்களைக் கொண்டுள்ளதை இப்படித்தான் புரிந்து கொள்கிறேன். தமிழோடு, தமிழ் வாழ்க்கையோடு, தமிழ் அரசியலோடு இப்படித்தான் என்னை இணைத்துக் கொள்கிறேன். எனக்குள்ள பெரிய நம்பிக்கைக்கும் இதுதான் காரணம்.

# 5. தமிழக வரலாறு

1. தமிழ்த்தேசிய உணர்வு இன்று மீண்டும் உச்சம் பெற்று வருகிறது. இதற்கென இயக்கங்கள் உருவாகிவருகின்றன. இந்த நோக்கில் மக்கள் மத்தியில் தமிழ் உணர்வை நாம் திரட்டியாக வேண்டும். தேசம் என்பதற்கு ஸ்டாலின் தந்த வரையரைகள் முதலாளிய வறையரைகள். தேச உருவாக்கத்தின்போது, முதலாளிகளின் செயல்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஸ்டாலின் இந்த வரையரைகளைத் தொகுத்தார். மொழி அடிப்படையில் ஒருதேசம். அதற்கென ஒரு எல்லை, ஒரு பொருளியல் அமைப்பு, ஒரு வரலாறு, பண்பாடு என்ற முறையில் இந்த வறையரைகள் அமைந்தன. பிரெஞ்சுபுரட்சியின் போது முதலாளிகள் முன் வைத்த சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கருத்துக்கள் மிக விரைவில் பொய்யாகிவிட்டன. அதன்பிறகு இந்தக் கூற்றுக்களை மெய்மைப்படுத்துவதற்கு, மக்களாட்சி முறை மட்டுமல்லாமல் சோசலிசம் என்ற கோட்பாடும் தேவைப்பட்டது. முதலாளிகள் தமக்கென உழைக்கும் மக்களைக் கொண்டு ஒரு தேசத்தை உருவாக்கிக் கொண்டனர். நெடுங்கால வரலாற்றை தம் நோக்கங்களுக்கு உரியதாக கட்டமைத்துக் கொண்டனர். தமக்கான பொருளியலை படைத்துக் கொண்டனர். வரலாற்றிலிருந்து ஒரு பண்பாட்டுத் தொகுதியைக் கட்டமைத்தனர்.

இப்பொழுது முதலாளிகள் நம்மிடமிருந்து பறித்துக் கொண்ட தேசத்தை, வரலாற்றை, பொருளியலை, பண்பாட்டை நமக்குரியதாக மாற்றிக் கொள்ளத்தக்க முறையில் நாம் மீட்டெடுக்க வேண்டும். முதலாளி வகுத்த எல்லைகள் நமக்குப் பயன்படா. முதலாளியின் பொருளியல் அமைப்பு நம்மைத் தொடர்ந்து அழிக்கும். அதேபோல முதலாளியம் வகுத்த பண்பாட்டை நாம் மாற்றியமைக்க வேண்டும். எந்த ஒரு தேசத்தினுள்ளும் இரண்டு தேசங்கள் உள்ளன என்று ஆப்ரஹாம் லிங்கன் குறிப்பிட்டதை இங்கு நாம் நினைவு கொள்வோம். எந்த ஒரு கருத்தினமும் கட்டுடைத்துப் பார்த்தால் அதனுள் இருக்கிற வர்க்கச் சார்பு புலப்படும் என்று மார்க்சியம் கூறுகிறது.

தமிழ்த்தேசியம் என்ற கருத்தை வளர்த்தெடுக்கும் முறையில் அறிஞர் கு.ச.ஆனந்தன் அவர்கள் முன் வைத்துள்ள தேசியத்திற்கான சார்பு நிலைக் கூறுகள் என்பதில் நாம் கவனம் கொள்ளவேண்டும். இன்றைய சூழலில் சாதிமதங்கள் அற்ற சமனியம் என்ற கருத்தாக்கத்தையும், அனைத்து உழைக்கும் மக்களுக்கான கூட்டுடைமை என்ற கருத்தையும் அறிஞர் ஆனந்தன் இன்றைய தேவைக்கு ஒத்த முறையில் தேசிய இனம் என்பதன் வரையறைகளோடு இணைத்துக் கொள்ளவிரும்புகிறார். சாதி, மதம் என்பவை தமிழ் மக்களை கூறுபடுத்தக்

கூடியவை. இவற்றை வைத்துக் கொண்டு தமிழ்த்தேசியத்தை இன்று உருவாக்க முடியாது. வரலாற்றுக்குள் வந்துவிட்ட சோசலிசம் என்ற கருத்தை இனி ஒதுக்க முடியாது. உழைக்கும் மக்களுக்கு சோசலிசம் தேவ்வ, கூட்டுடமை தேவை. இவற்றை முன் வைத்தால் மட்டுமே தமிழ்த் தேசியம் என்ற அரசியலை நாம் இன்று முன்னெடுத்துச் செல்ல முடியும்.

முதலில் சமனியம் பிறகுதான் கூட்டுடமை என்ற எதிர்வாதங்கள் இன்று தேவை இல்லை. சாதி ஆதிக்கமும், மத ஆதிக்கமும் பொருளியல் மற்றும் அரசியல் ஆதிக்கத்தோடு முற்றாக இணைந்திருப்பதை இன்று நாம் பார்க்கிறோம். தமது பொருளியல் ஆதிக்கத்தைக் காத்துக் கொள்ளும் முறையில்தான், சாதிக்கும், மதத்திற்கும் இன்று தொடர்ந்து உயிர்ப்பைத் தந்து கொண்டிருக்கின்றனர். மதம் என்றும் கடவுளை மையமாகக் கொண்டதாக இல்லை. அதிகாரத்தில் மையம் கொண்டுதான் மதம் செயல்படுகிறது. மதம் முன்வைக்கிற கடவுளுக்கு இன்று மரியாதை இல்லை. சாதி என்பது வரலாற்றில் வழக்கொழிந்துவிட்ட ஒருமுறை. இன்று சாதியைக் காப்பது நமக்கு அவசியமில்லை.

2. மதம் பற்றி இங்கு சிலவற்றை நாம் சொல்லலாம். தமிழர் வரலாற்றில் சமயத்திற்கு இடம் இருந்தது. தமிழர்க்குச் சாதி இல்லை, மதமில்லை என்ற கூற்று 20ம் நூற்றாண்டு சூழலில் பெரியார் முன் வைக்கிற கூற்று. தமிழ் மக்களை பிரித்து வைக்கிற சாதியோ, மதமோ தேவையில்லை என்ற பெரியார் கருத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். நிகழ்காலம், மற்றும் எதிர்கால நோக்கில் பழங்காலத்தையும் பார்வையிட்டு பெரியார் இப்படிக் கூறினார். நிகழ்காலத் தேவைகள்தான் பழங்கால வரலாற்றைக் கட்டமைக்கின்றன என்ற உண்மையை நாம் புரிந்து கொள்ள முடியும்.

இதன் காரணமாக, வரலாற்றில் தமிழ் மக்களுக்கு மதம் இல்லை என்று சொல்வதற்கில்லை. ஆனால் தமிழர்களின் சமயத்தில் மக்கட் சார்பான சில கூறுகள் தொடர்ந்து இருந்தன என்பதை நாம் இங்கு காண வேண்டும். சங்க காலத்தில் பின்னால் மதம் என திரட்டுவதற்கான சில கூறுகள் இருந்ததை நாம் பார்க்கிறோம். பின்னால் சமணம் தமிழகத்திற்குள் வந்தபொழுது தமிழர்களின் சில நற்பண்புகளை வரலாற்றில் தமிழர் வளர்ச்சிக்கான ஆக்கக் கூறுகள் என திரட்டினர். பவுத்தர்களும், இவ்வாறே செயல்பட்டனர். தொல்காப்பியரும், திருவள்ளுவரும், இளங்கோவும் சமணச் சார்புடையவர் என்று கருதப்படுகின்றனர். இவர்கள் அசலான தமிழர்கள். நாகரிகங்களுக்கு இடையில் மோதல் இல்லாமல் வரலாறு இயங்குவதில்லை. சமணமும்

பவுத்தமும் தமிழ் மக்களுக்குள் அறிமுகம் ஆனபொழுது தமிழ் மக்களின் ஆக்கத்திறன்கள் சில மேலுக்கு வந்தன. பவுத்தமும், சமணமும் அறிவுச் சமயங்கள் என்று நாம் கூறுகிறோம். உண்மையில் பவுத்தம் முன்வைத்த நிர்வாணம் என்ற கோட்ப்பாடோ, சமண முன் வைத்த ஆன்மா என்ற கோட்பாடோ இன்று பார்க்கும்பொழுது நம் அறிவுக்குப் பொருந்தியனவாக இல்லை. ஆனாலும் இந்தச் சமயங்கள் அன்றைக்கும் சமூக நீதியை வலியுறுத்தின. அரசநீதி மக்கட் சார்புடையதாக இருக்க வேண்டும் என்பதைத் திருவள்ளுவரும் இளங்கோவும், சாத்தனாரும் வற்புறுத்தினர். வறுமை அறவே கூடாது. தன்னலத்துறவு என்ற அடிப்படையில் பண்பாடு அமைய வேண்டும். பெண்ணுக்கு கற்புடமை போல எல்லா மனிதர்க்கும் பண்பாடு தேவை. தன்வைத்துறவு பெருமைக்குரியது. இப்படி இந்தச் சமயங்கள் தமிழ் மக்களை உயர்த்தும் முறையில் செயல்பட்டன. இன்றைய நோக்கில் இந்தச் சமயங்களை நாம் பாராட்டுவது என்பது இத்தகைய கருத்துக்களுக்காகத்தான்.

3. தமிழர் வரலாற்றில் சமணர் மற்றும் பவுத்தர்களது வருகையின் உடன் நிகழ்வாக ஏற்பட்ட வரலாற்றுத் திருப்பத்தை இங்கு நாம் கவனிக்கலாம். தமிழகத்தில் களப்பிரர் எழுச்சி பெற்ற காலம் இதுதான். களப்பிரர் தமிழகத்திற்கு வெளியிலிருந்து வந்தனர் என்று சொல்ல முடியாது. பல்லவர்களை பொறுத்தவரை ஆந்திராவிலிருந்து வந்தவர்கள். அவர்கள் தமிழகத்திற்குள் நுழைந்து சில கடுமையான அதிர்ச்சிகளை ஏற்படுத்திய சூழலை அடுத்துத்தான் களப்பிரரின் எழுச்சியும் தோன்றியது. களப்பிரர் எழுச்சியின் போது நம் என்ன பார்க்கிறோம்? சேர, சோழ, பாண்டியர் இல்லை.

இரு நூற்றாண்டுகள் களப்பிரரும், அவரைச் சார்ந்தவர்களும் தமிழகத்தில் தம் ஆட்சியை நிறுவினர். இவர்கள் சூத்திரர். இவர்கள் பார்ப்பனியத்தை மறுத்தனர். பாண்டியன் பார்ப்பனர்களுக்கு ஒதுக்கி யிருந்த கிராமங்களைப் பறித்து மீண்டும் அதன் முன்னைய உரிமையாளருக்குத் தந்தனர். இவர்கள் காலத்தில்தான் அநேகமாக சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்கள் வந்திருக்க முடியும். சிலப்பதிகாரத்தில் கூட நாம் என்ன பார்க்கிறோம்? பாண்டியனுடைய, மதுரை அழிவை நாம் காண்கிறோம். மணிமேகலையில் புகார் நகரம் அழிந்தது பற்றி அறிகிறோம். கொற்கை முதலிய துறைமுக நகரங்களும் இக்காலத்தில் அழிந்திருக்கமுடியும். ஆழ்ந்து பார்த்தால் வியக்கத்தக்க முறையில் நமக்குள் வெளிச்சம்கூடும். அதிகாரபீடங்கள் இப்படித் தகர்கின்றன. தலைநகரங்களில் வம்பரும், திருடரும் கள்வரும் பெருகி இருந்தனர். ஒருவகையில் மார்க்சியர் கூறிய வர்க்கப் போராட்டம் ஏதோ சில வடிவங்களில் இங்கு நடந்திருக்க முடியும். களப்பிரர்

அன்றைய ஆதிக்கங்களை கலைத்துப் போட்டனர். சமணர்கள் சங்கம் வைத்து தமிழின் ஆக்கங்களை இந்தக் காலத்தில்தான் தொகுத்தனர். பெரும்பாலும் தமிழ் மக்களின் பண்பாட்டுச் செழுமைகள் என்று நாம் இன்றும் போற்றுகிற ஆக்கத் திரண்கள் இந்த காலத்தில் வெளிப்பட்டன. சங்க இலக்கியத்தில் நாம் காணும் கணியன் பூங்குன்றனார் முதலியவர்களின் பொதுமைக் கருத்துக்களுக்கு இங்கு ஆக்கம் கிடைத்திருக்க வேண்டும்.

4. மூன்று நூற்றாண்டு அளவில் மீண்டும் பாண்டியர் தலை காட்டுகின்றனர். பார்ப்பனியத்திற்கு ஏற்றம் தருகின்றனர். அரசுகள் மீண்டும் உருவாகின்றன. சமணமும் பவுத்தமும் அழிக்கப்படுகின்றன. சைவமும், வைணவமும் உருவாகின்றன. அரசுகள் இவற்றிற்கு ஆதரவு தரும் போக்கையும் நாம் காணுகிறோம். இடைக்காலத்தில் ஏற்பட்ட புதுமை அழிக்கப்பட்டு மீண்டும் வேறு ஒரு சமூகம் எழுகிறது. பெரும்பாலும் சாதியின் அடிப்படையில் சமூக அமைப்பு தம்மை நிறுவிக் கொண்டகாலம் என இதை நாம் சொல்லமுடியும். கி.பி. 8ம் நூற்றாண்டு வாக்கில் இந்தியா முழுவதும் இத்தகைய சமூக அமைப்பாக சாதியமுறை தன்னை நிறுவிக்கொண்டதை நாம் பார்க்கிறோம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக தமிழகத்திலும், தமிழகத்தை உள்ளடக்கிய இந்தியாவிலும் நிலவிய சமூக அமைப்பு குறித்து இங்கு சில விவரங்களைச் சொல்லலாம். கிராமப்புறங்களில் விளைநிலங்கள் முழுவதும், கிராமச்சமூகத்திற்கு உடைமையாக இருந்தன. தனிப்பட்டவர்களுக்கு நிலவுடைமை இல்லை. நீர்ப்பாசன நிலங்கள், மானாவாரி நிலங்கள் கிராம சமூகத்தில் உடமையாளர்கள் என்று இன்றும் காணப்படுகிற சில மேல் சாதியினர்க்கு இடையில் பிரித்துத் தரப்படுகின்றன. 7 அல்லது 14 ஆண்டுகளுக்கு ஒருமுறை இத்தகைய நிலங்கள் மாற்றித் தரப்படுகின்றன. ஆற்றுப்பாசனம் அல்லது ஏரிப்பாசனம் செய்பவர் மானாவாரி சாகுபடிக்குத் திரும்பவேண்டும். மானாவாரி சாகுபடி செய்தவர் ஆற்றுப்பாசனத்திற்குத் திரும்பவேண்டும். வேளாண்மை தான் முதன்மையான தொழில், கைவினைஞர்கள் பஞ்சமர்களோடு ஆண்டுக்கு இவ்வளவு என்ற முறையில் செய்து கொண்ட உடன்பாட்டின் அடிப்படையில் இவர்கள் வேளாண்மைக்கு தேவையான கருவிகள் மற்றும் உழைப்பைத் தரவேண்டும். கிராம உற்பத்தியில் இவர்களுக்கு உரிய பங்கு நிர்ணயிக்கப்பட்டது. கிராம நிர்வாகத்தில் இவர்களுக்குப் பங்கு இல்லை. சாதிகளுக்கு இடையில் திருமண உறவு நேரும்பொழுது சில கடுமையான விதிகள் தோன்றின. உயர்சாதிப்பெண்ணோடு உறவு வைத்துக் கொள்கின்ற கைவினைஞர் ஒருவரை இந்தச் சமூகம் தனக்குள்ளிருந்து வெளியேற்றி அவருக்குத் தனித்தொழில் விதிக்கிறது. இப்படி இவர்களது உடமை முறை மற்றும் நிர்வாக முறை காப்பாற்றப்பட்டன.

நிலவுடைமையாளர்களோடு பார்ப்பனர் இணைந்திருந்தனர். இந்த கிராம நிர்வாகத்தில் அரசின் தலையீடு இல்லை. கிராமப்புறத்துச் செயல்பாடுகள் அனைத்தும் கோவிலை மையம் கொண்டு நடைபெற்றன. கோவிலில்தான் நிர்வாகக் கூட்டங்கள் நடைபெறும். ஆவ்ணங்கள் பாதுகாக்கப்படும், நாணயங்கள் உரைத்துப் பார்த்துச் சோதிக்கப்பட்டன. தானிய களஞ்சியம் கோவிலில் தான் இருந்தது. மருத்துவச்சாலை கோவிலில் தான் அமைந்தது. கடவுள் நம்பிக்கை மறுக்கப்படவில்லை. இறைவனின் கருணையை முன்வைத்து வாழ்வு நடைபெறுகிறது. எல்லோருக்குள்ளும் சமய நம்பிக்கை இடம் பெற்றது அல்லது இடம் பெறுமாறு செய்யப்பட்டது.

இவ்வாறு உற்பத்தி, பகிர்வு, நிர்வாகம் ஆகிய அனைத்தும் ஒரு சேர நடைபெறும் முறையில் ஒரு நாடாக கிராமச்சமூகங்கள் இணைந்து செயல்பட்டன. கிராமச் சமூகத்தில் வேளாண்மைக்குத்தான் முதன்மை. வணிகம் அதற்கு அடுத்த இடம் தான். கால்நடைகளும் முக்கியம் தான், இந்தச் சூழலில் சமணத்திற்கும், பவுத்தத்திற்கும் இங்கு வாழ்வுரிமை இல்லை. இந்தச் சூழலில் கலவரங்களும் தவிர்க்க இயலாது. ஆகவே இந்தச் சமூக அமைப்புக்கு ஒத்த முறையில் கைவினைஞர்களையும் பஞ்சமர்களையும் இந்த சமூக அமைப்போடு இணைத்துக் கொள்ள வேண்டும். இங்குதான் பக்தி மார்க்கம் எழுகிறது. நாயன்மார்கள் தோன்றி தமிழகம் முழுவதும் சுற்றி வருகிறார்கள். தேவாரப் பாடல்கள் தொகுக்கப்படுகின்றன. சைவம், அன்பை போற்றுகிறது. சமணர், பவுத்தர் ஆகியவர்களின் துறவு நெறியும் மட அமைப்பும் சைவத்திற்குள்ளும் வந்து சேர்கின்றன. இறுதியில் சைவம் அரசோடு ஒத்துழைக்கிறது. பார்ப்பனியக் கூறுகளை சைவம் வறித்துக் கொள்கிறது.

களப்பிரர்கள் இவ்வாறு தான் முறியடிக்கப்பட்டனர். புத்தரும் சமணரும் இவர்களோடு சேர்த்து அழிக்கப்பட்டனர். நகரங்கள் துறை முகங்கள் அழிக்கப்படுகின்றன. கிராமச்சமூகத்தில், வேளாண்மைக்கு முதன்மை ஏற்படுகின்றது. கோவில்கள் உருவாக்கப்படுகின்றன. வரலாற்றில் இப்படி ஒரு திருப்புமுனை கி.பி. 8ம் நூற்றாண்டு தொடங்கி அடுத்த சில நூற்றாண்டுகளில் முடிவு பெற்றது என்று நாம் சொல்ல முடியும்.

5. தமிழகத்தின் வரலாற்றுத் திருப்பங்கள் இரண்டை இங்கு பார்த்தோம். மதங்கள் என்பவை வரலாற்றில் நடைபெறும் போராட்டங்களை ஒட்டித் தோன்றுகின்றன, வளர்கின்றன, பிறகு மாறுகின்றன. முற்றாக எதுவும் அழிந்து விடுவதும் இல்லை. அழிந்தது எனத் தோன்றினாலும் பழையவற்றின் கூறுகள் புதியனவற்றில் நுழைந்து தங்குகின்றன. கடவுளர் வரலாறு உட்பட எதுவும் இப்படித்தான்

நடைபெறுகிறது. பார்ப்பனியத்தை நாம் எப்பொழுதுமே அறிவுச் சக்தி என்று மதிப்பிட முடியாது. மதம் என்பதை பொதுவாக எப்பொழுதுமே அழிவுச் சக்தி என்று கூறவும் இயலாது. வரலாற்றுச் சூழலுக்குள் நடைபெறும் போராட்டங்களை ஒட்டித்தான் மதம் முதலியவற்றை நாம் மதிப்பிட முடியும்.

இத்தகைய சமூக அமைப்பினுள்ளும் ஏற்றத்தாழ்வுகள், முரண்பாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. கைவினைஞர்கள், பஞ்சமர்களின் ஆக்கங்கள் இல்லாமல் இந்தச் சமூகம் நிலைக்க முடியாது. சமூகம் எப்பொழுதுமே உழைக்கும் மக்களின் உழைப்புத் திறன்களை அதிகமாக அபகரிக்கவே செய்யும். இதன் காரணமாக முரண்பாடுகள் வெடிக்கத்தான் செய்யும். இப்படி வெடிக்கும் பொழுதெல்லாம் ஏதே ஒரு வகையில் இவற்றிற்கு இடையில் உடன்பாடு காணவேண்டும். தடுக்குமுறை எப்பொழுதுமே கூடுதலான எதிர்ப்பைத் தான் தோற்றுவிக்கும் சமரசமும் எப்பொழுதும் நிலைக்காது. தமிழகத்தில் இன்றுவரை நிலவுகிற சாதிப் போராட்டங்கள் முதலியவற்றைத் தொடர்ந்து 1000 ஆண்டுகளுக்கு மேலாக நடைபெற்ற இடங்கை, வடங்கைப் போராட்டச் சூழலின் தொடர்ச்சியாகத்தான் நாம் பார்க்க முடியும். இத்தகைய வரலாற்றுச் சூழலில் தான் தமிழகத்தில் எவ்வளவோ நடைபெற்றிருக்கின்றன, அழிவுகளும் நடைபெற்று உள்ளன. ஆட்சி மாற்றங்கள் நடைபெற்றன.

எந்த நாட்டின் வரலாற்றிலும் இப்படிப்பட்ட போக்குகள் இருக்கத்தான் செய்கின்றன. தமிழ் மக்களுக்கு மட்டுமே இவை உரியவை என்று சொல்ல முடியாது. தமிழக வரலாறு குறித்து தொடர்ந்து ஆய்வுகள் நடைபெறுகின்றன. வரலாறு குறித்தப் பார்வையும் நமக்கு இன்னும் உருவாகவில்லை. அங்கும், இங்குமாகச் சில கூறுகளை முதன்மைப்படுத்தி வரலாறு என நாம் சொல்லுகிறோம். இப்படி மீண்டும், மீண்டும் நம் பார்வையை நாமே புரட்டிப் பார்த்துக் கொள்கிறோம். திராவிட இயக்கம் தமிழக வரலாற்றை ஒரு வகையில் வரைய, முற்படுகிறது. இந்திய வரலாற்றுப் பார்வையும், தமிழக வரலாற்றுப் பார்வையும் வேறுபடுகின்றன. இந்திய வரலாற்றில் தமிழகத்தின் பங்கு மறுக்கப்படவும் செய்கின்றது. தமிழகம் தன்னை இந்திய வரலாற்றுச் சூழலில் தன்னை நிறுவிக்கொள்ள முனைவதையும் இத்தகைய முயற்சிகளை முறியடிக்கப் பலர் முனைவதையும் நாம் தொடர்ந்து பார்க்கிறோம்.

# 6. கட்சியோடு உறவு

1. பொதுவுடமைக் கட்சியோடு நான் கொண்டிருந்த உறவுகள் குறித்து, இங்கு சிலவற்றை நான் சொல்ல வேண்டும். மார்க்சிய லெனினியக் கட்சியின் தொடக்க காலத்தில் சுமார் 2 ஆண்டுகள் நான் அவர்களோடு இருந்தேன். அதற்குப் பிறகு மார்க்சியம் லெனினியம் சார்ந்த சில கட்சிகள்/குழுக்களின் ஓரத்தில் இருந்தேன். இன்றும் எனக்கு அவர்களோடு தொடர்பு குறைந்த அளவுக்கேனும் இருக்கிறது. இவர்களோடு தான் நான் உறவு கொள்ளமுடியும் மார்க்சியம் லெனினியம் என்ற கொள்கையிலிருந்து முரண்படுகிற பொதுவுடமைக் கட்சிகளோடு எனக்கு உறவில்லை. கட்சியோடு எனக்கிருந்த உறவுகள் என்னைப் பொறுத்த அளவில் எவ்வளவுதான் இன்றியமையாததாக இருந்தபோதிலும், அவர்களோடு என்னால் முரண்படாமலும் இருக்கமுடியவில்லை. இதன் காரணமாகக் கடுமையான மனக்கசப்புகளுக்கு உள்ளானேன். கட்சிவாதத்திற்கு என்னைப் பலியாக்கிக் கொள்ள எனக்கு இயலவில்லை. அதாவது கட்சியின் தலைமை என்னை முழு அளவில் கட்சிக்கு ஒப்படைத்துக் கொள்ளக் கோரியபொழுது எனக்கு அது சாத்தியமாக இல்லை. மார்க்சியத்தின் ஆழத்தோடும், விரிவோடும் தான் என்னால் உறவு கொள்ளமுடியும். குறுகிய செயல்பாட்டுத் தளத்தோடு என்னால் உறவு கொள்ள இயலவில்லை. இதுபற்றி இங்கு சிலவற்றைத் தொகுத்துச் சொல்லவேண்டும்.

2. "புதிய தலைமுறை" காலத்தில்தான் மார்க்சிய லெனினிய அமைப்போடு எங்களுக்கு உறவு ஏற்பட்டது. கட்சியோடு பல வகைகளில் நாங்கள் ஒத்துழைத்தோம். புதியதலைமுறை இதழுக்குள் கட்சியின் கரம் நீண்டபொழுது அதற்கு நான் ஒத்துழைக்கவில்லை. இலக்கியம், மொழி குறித்த சிக்கலில் கட்சி எங்களுக்கு வழிகாட்டக்கூடிய திறனுடையதாக இல்லை. இலக்கியம் குறித்து மார்க்சியப் புரிதலில் நாங்கள் தேடல் உணர்வோடு சென்று கொண்டிருந்தோம். கட்சியின் கட்டளைக்கு ஒத்துக் கொள்ள நண்பர்கள் முனைந்தபொழுது அவர்களோடு என் உறவை அறுத்துக் கொண்டேன். அதன்பிறகு அவர்கள் எனக்குத் தொல்லைகள் தந்தனர். என் நண்பரே என்னை உளவு பார்த்தார். கட்சியோடு நான் ஏன் இல்லை என்பதற்கு உண்மையான காரணங்களை வெளியிடுவதற்குப் பதிலாகப் பொய்யான காரணங்கள் கூறினர். என்னையும், என் குடும்பத்தையும் அவதூறு செய்வதற்கும் அவர்கள் தயங்கவில்லை. பலவகையில் அவர்களோடு ஒத்துழைத்தவன் என்ற முறையில் எனக்குச் சிக்கல் நேர்ந்தபொழுது தோழமை உணர்வோடு எனக்கு ஒத்துழைப்புத் தரவில்லை. நாகராசனோடு நான் இருந்தேன். நாகராசனை கிறுக்கன் என்று அவர்கள் என்னிடமே மெய்ப்பிக்க முனைந்தனர்.

கட்சியில் முக்கியமான பொறுப்பிலிருந்த தலைவர் பற்றி இங்கு சிலவற்றைச் சொல்ல வேண்டும். கோவை வட்டாரத்தில் பொதுவுடைமைக் கட்சியை வளர்த்ததில் அவரது பங்கு மகத்தானது என்பதில் ஐயமில்லை. தலைமைக்கான போட்டி நடந்தபோது அதிலே இவர் வெற்றி பெற இயலவில்லை. நக்ஸல்பாரி இயக்கம் வெடித்தபோது, தமிழகத்தினுள்ளும் இத்தகைய அரசியலை நிறுவுவதில் அவர் ஈடுபட்டார். தான் சார்ந்த குழுவின் உள்ளேயே அவருக்கு கடுமையான எதிர்ப்புகள் இருந்தன. தன்னைத்தவிர பிறரை அவர் நம்பவில்லை. மறைமுகமாக அரசு உளவாளி எனக் கருதப்பட்ட சிலருடன் அவர் உறவு கொண்டிருந்ததற்காக குழுவினால் கடுமையாகக் கண்டிக்கப்பட்டார்.

"புதியதலைமுறை"க் காலத்தில் இதழுக்கு வெளியில் கட்சி மட்டத்தில் அவரோடு எங்களுக்கு உறவு ஏற்பட்டது. கட்சியின் செல்பாடுகளுக்கு எங்களில் சிலர் அவருக்கு முழு அளவில் ஒத்துழைப்புத் தந்தனர். நானும் ஒத்துழைத்தேன். தலைவர் தற்பெருமைக்காரர். தன்நிலைபாட்டைத் திறமையாக மெய்பிக்கக்கூடியவர். மாறுபட்ட கருத்துடையவர்களை மட்டம் செய்வதிலும் தேர்ந்தவர். புதிய தலைமுறையில் இரண்டொரு கட்டுரைகளை அவர் எழுதினார். மொழிச்சிக்கல் குறித்து அவர் எழுதிய கட்டுரையில் இந்திய வரலாறு குறித்த பிரிட்டன் வரலாற்று ஆசிரியரை உடன்பாடாக மேற்கோள் காட்டினார். இந்தியா முழுவதும் ஒரே பண்பாடு நிலவுகிறது என்ற அவரது கருத்தை மறுத்துரைப்பதற்கு நாங்கள் பெரிதும் சிரமப்பட்டோம் இந்தியத் தத்துவ நூல் ஆசிரியர் பெயரை ஒரு முறை கூடக் குறிப்பிடாமல் அவரிடமிருந்து ஒரு கட்டுரையைத் தமிழில் அவர் தன் கட்டுரையாகத் தந்தார். பிறகு உண்மை தெரிந்தபொழுது நாங்கள் அவமானப்பட்டோம்.

நக்ஸல்பாரி இயக்கம்போல இங்கும் ஆதிவாசிகளை திரட்டி நிலப்பரப்பு இயக்கம் நடத்துவதாக அவர் சொல்லிக் கொண்டார். ஆனால் எங்களுக்கு நிலம் வேண்டும் என்ற கோரிக்கை முழக்கத்தோடு ஒரு ஊர்வலத்தை மட்டும் அவர் நடத்தி முடித்தார். என் செயல்பாட்டில் புரட்சிகரமான செயல்பாடு என்று பெருமையாகப் பேசினார். போக்குவரத்துத் தொழிலாளிகளும் கல்லூரி மாணவர்களும் கடுமையாக மோதிக் கொண்டபொழுது இது வர்க்கப் போராட்டம் என்றார். பணவசதி படைத்த மாணவர்களைப் பாட்டாளி வர்க்கம் முறியடிக்க வேண்டும் என்றார். மாணவர்களுக்கு ஏது வர்க்கம் என்ற கேள்விக்கு அவரிடம் பதில் இல்லை. பல்கலைக் கழகம் ஒன்றில் தம் மாணவியோடு உறவு கொண்டிருந்த ஒரு பேராசிரியருக்கு எதிராக மாணவர்கள் நடத்திய போராட்டத்தை நிலவுடைமை ஆதிக்கத்திற்கு எதிரான போராட்டம் என்றும், இந்த போராட்டத்தை ஒரு கட்டத்திலேயே முடித்துவிட இயலாதென்றும், மாணவர்களுக்குச் சில சிரமங்கள்

ஏற்பட்ட போது போராட்டத்தை நிறுத்தி வைக்கவேண்டுமென்று அவர் அறிவுரை கூறியிருந்தார். ஆனால் போராட்டத்தில் மாணவிகளும் இணைந்த நிலையில் போராட்டம் பெரிதாக வெடித்தது. பேராசிரியர் தன் பதவியிலிருந்து விலகினார். தான் தந்த அறிவுரையின்பேரில்தான் இப்படிப் போராட்டம் வெற்றி பெற்றது என்று அவர் சொல்லிக் கொண்டார். இவரது தற்பெருமையே இவரது பலம் என்று போற்றக் கூடியவர்களாகவும் நண்பர்கள் இருந்தனர். நமக்கு உண்மை தெரிய வேண்டும். பொய் சொல்லி முரண்களைத் தூண்டி மக்களைத் திரட்ட முடியாது, திரட்டக்கூடாது. பிரம்மைகளால் தூண்டப்பட்டவர் புதிய நெருக்கடி நேர்ந்த நிலையில் மனம் தளர்ந்து போராட்டத்தைக் கைவிட நேரிடும். நான் குறிப்பிடும் தலைவருக்கு மட்டுமல்லாமல் மார்க்சியக் கட்சியோடு தொடர்புடைய பலருக்கும் இந்த குணம் இயல்பாக இருப்பதை என்னால் ஏற்க இயலவில்லை. யதார்த்தம் குறித்து ஓயாமல் ஆய்வு செய்ய வேண்டிய மார்க்சியர் யதார்த்தத்தை மறைக்கக்கூடிய தற்பெருமைக்கும், ஆணவத்திற்கும் பழி தூற்றலுக்கும் அடுத்தவரைக் கேவலப்படுத்துவதற்கும் எப்படி ஆளாக முடியும் என்பது எனக்குப் புரியவில்லை.

3. குறிப்பிட்ட ஒரு கட்சியோடு எனக்கு ஏற்பட்ட அனுபவம் என்பது அடுத்துவரும் காலங்களிலும் அதேபோல ஏற்பட்டது. இதில் என்னோடு நெருங்கிப் பழகியவரிடம் கூட இதே போக்குத்தான் செயல்பட்டது. கட்சித்தோழர்களுக்குள் இந்த குணம் எங்கிருந்து புகுந்தது என்பதை என்னால் விளங்கிக் கொள்ள இயலவில்லை. விவாதத்திறமையினால் தன் அதிகாரத்தை இவர்கள் நிலைநாட்ட விரும்புகின்றனர்.

இவர்கள் விவாதத்தில் இயல்பாகவே வன்முறை கலந்திருக்கிறது. போதிய அளவுக்குக் கூட மார்க்சிய ஆய்வு இவர்களிடமில்லை. மார்க்சியம் கற்றுக் கொள்வதற்காக சில முக்கியமான அடிப்படை நூல்களைக் கூட இவர்கள் ஆராய்ந்து கற்கவில்லை. அடுத்தநாளே புரட்சி வரும் என்பதைப் போன்ற மாயையில் இவர்களோடு நானும் சுகப்பட்டிருந்தேன், என்பதை நானும் ஏற்றுக் கொள்கிறேன். நிறைய நண்பர்களை நானும் தான் காயப்படுத்தியிருக்கிறேன். நண்பர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் குறைந்தது. இது எனக்கு பெரும் வேதனையைத் தந்தது. எனது நண்பர்கள் சிலருக்கு இத்தகைய வேதனை இருந்ததகாகத் தெரியவில்லை.

என்னைப் பொறுத்தவரை தொடர்ந்து மார்க்சியத்தையும், தமிழ் இலக்கியத்தையும் படித்துக் கொண்டிருந்தேன். வானம்பாடிச் சூழலில் தீவிரமாகச் செயல்பட்டேன். இலக்கிய ஆய்வரங்கம் என்ற அமைப்பை நண்பர்களோடு இணைந்து நடத்தினேன். வேள்வி இதழ்

வெளிவந்தது; தொடர்ந்து காவல்துறை உளவாளிகளின் தொல்லைகள் இருந்தன. பிற இயக்கங்களோடு இணைந்த நிலையிலும் முன்னைய அனுபவம்தான் பெரும்பகுதி தொடர்ந்தது. நெருக்கடி நிலைக் காலத்தில் எங்களுக்குத் தொல்லைகள் அதிகரித்தன. காங்கிரஸ் கட்சியோடு இணைந்து கொள்ளலாம் என்று சில நண்பர்கள் கூறியதை என்னால் ஏற்கமுடியவில்லை. பிறிதொரு சமயம் நண்பர்களோடு சேர்ந்து பரிமாணம் இதழ் தொடங்கினேன். மார்க்சியம், இலக்கியம் மற்றும் தத்துவம் குறித்து விரிவான கட்டுரை வெளியிட்டோம்.

4. மார்க்சியம் லெனினியம் சார்ந்த பிற இயக்கங்களோடு எனக்கு ஏற்பட்ட உறவைப் பற்றி இங்கு சிறிது சொல்ல வேண்டும். நெருக்கடி நிலைக் காலத்தில் செயலற்று இருந்ததைப் போல இனிநாம் இருந்துவிடக்கூடாது என்ற நோக்கத்தோடு லோகாயன் என்ற அமைப்பு ஏற்பட்டது. இதன் கிளை தமிழ்நாட்டிலும் தோன்றியது. லோகாயன் சார்பில் எங்களுக்கு ஒரு உறுதி தரப்பட்டது. தமிழ்நாட்டுச் சூழலில் நாங்கள் என்ன செய்ய விரும்புகிறோமோ அதை எவ்வித மறுப்பும் இன்றி லோகாயன் சார்பில் செய்யலாம் என்பதுதான் அந்த உறுதி. சில கருத்தரங்குகள் நடத்தினோம். தமிழ்நாட்டில் சில முக்கிய தலைப்புக்களோடு உறவு கொண்டோம் இதில் எனது பங்கு சிறிதெனினும் எனது நண்பர்கள் பங்கு மிகப்பெரிது. லோகாயன் செயல்பாட்டைத் தொடங்குவதற்கு முன்பு கட்சிக்குள் இருந்த பெரியவரின் சம்மதம் பெற்றுத்தான் தொடங்கினோம். உருப்படியான சில காரியங்களும் செய்தோம். ஆனால் கட்சிக்குள் ஏற்பட்ட முரண்பாட்டின் போது தலைவர் என் நண்பரைக் கைவிட்டார். என் நண்பர்க்கு மட்டுமல்லாமல் எனக்கும், இதுபெரும் வேதனையாக இருந்தது. பெரியாரின் ஆலோசனைப்படி எனது நண்பர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, சீன நிலைமைகள் குறித்து பரிமாணத்தில் சிறப்பிதழ் ஒன்று வெளியிட்டோம். மூலக்கட்டுரையை அதே வடிவில் மொழிபெயர்த்து வெளியிட எங்களுக்கு பொருள் வசதி போதவில்லை. ஆகவே மூலகட்டுரையின் முக்கியக் கருத்துக்களை விடாமல் தொகுத்து சிறப்பிதழ் வெளியிட்டோம். நண்பர் என்னைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டார். விரிவான கடிதம் ஒன்றை எழுதினார். உளவுத் துறையின் கையில் அந்தக் கடிதம் மாட்டிக் கொண்டது. கடுமையான விசாரணைக்கு நானும் பிறரும் உள்ளானோம். பெரியவருக்கு இந்த வடிவில் கட்டுரை உடன்பாடில்லை என்று என் நண்பர் காய்ந்து கொண்டார். எனக்குப் புரியவில்லை, என்ன தவறு செய்தேன் என்பது எனக்கு விளங்கவில்லை. கடிதத்தில் என் நண்பர் குறிப்பிட்டிருந்த சில விவரங்களைக் கூட அவர் மறுத்தார். காவல்துறை விசாரணை தந்த வேதனையைக் காட்டிலும் இதுதான் எனக்குப் பெரிய வேதனை.

"மார்க்சியம் இன்று" என்று நண்பர்கள் ஒரு இதழ் தொடங்கினார்கள். என்னையும் அதில் இணைத்துக் கொண்டதாகச்

சொன்னார்கள். அது ஒரு குறிப்பிட்ட கட்சியின் கட்டுப்பாட்டில் வெளிவரும் இதழ் என்ற உண்மை எனக்குச் சொல்லப்படவில்லை. சில இதழ்கள் வெளிவந்தபிறகு அவர்களுக்குள் ஏற்பட்ட முரண்பாடு காரணமாக இதிலிருந்து வெளியேறிய நண்பர் எனக்கு உண்மை சொன்னார். கட்சிக்கு ஒரு இதழ் தேவை என்பதில் எனக்கு கருத்து வேறுபாடு எதுவும் இல்லை. என்னிடம் உண்மையை மறைத்துவிட்டு இப்படி ஒரு இதழ் வெளியிடுவது குறித்து என்னால் சிந்திக்க முடியவில்லை. இதழின் முக்கிய பொறுப்பில் இருந்த ஒருவரோடு இதுபற்றி நான் கேட்டபொழுது அவர் தந்த பதில் எனக்கு அதிர்ச்சி தந்தது. நீ அனுதாபி மட்டும்தான். நீதரும் தொகைக்காக நாங்கள் உண்மை சொல்ல வேண்டியதில்லை.

5. இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளை நான் பார்த்திக்கிறேன். கட்சிக்குள் இப்படி ஒரு இறுக்கம், அதிகாரதோரணை எப்படி ஏற்பட்டது என்பது புரியவில்லை. தொடக்கத்தில் இதை ஸ்டாலினிய தாக்கம் என்று நான் கருதினேன். தன் கட்சிக்குள் ஸ்டாலின் இப்படி நடந்து கொண்டார். ஆனால் இங்கு இருப்பவர் ஏன் அப்படி நடந்து கொள்ள வேண்டும். கட்சி வளர்ச்சிக்கு இந்தப் போக்கு எவ்வளவு பெரிய தடை. தோழமையை இந்தப் போக்கு அழித்துவிடும். நான் தலைவன் நீ ஊழியன் நான் சொன்னதைத்தான் நீ கேட்டு நடக்கவேண்டும். என்னைக் கேள்வி கேட்கக்கூடாது. நான் படித்திருக்கிறேன். நான் உனக்குச் சொல்வதை நீ கேட்டுக் கொண்டால் உனக்கு சுய சிந்தனை தேவையில்லை. மார்க்சியம் குறித்து நீயாக ஆராய வேண்டியதில்லை. நீ படிப்பாளி. உன்னிடம் இருப்பது குட்டி முதலாளியச் செருக்கு. கட்சிக்கு உன்னை ஒப்படைக்க வேண்டும். கட்சி சொல்கிறபடி ஊழியம் செய்தால் தான் பாட்டாளி வர்க்க குணம் உனக்கு வாய்க்கும். சுயசிந்தனை உனக்குத் தேவையில்லை. இப்படிச் சொல்கிறது கட்சி. கட்சி ஊழியர்களுக்கு ஒருவகையான விதண்டாவாதத்தைக் கற்றுத்தருகிறது கட்சி. இது அவர்களுக்குப் போதும், எதிரிகளை மட்டுமல்லாமல் நண்பர்களையும் அடக்கிக் காயப்படுத்தி அவர்களை மட்டம் தட்ட இந்தத் திறமை தங்களுக்குப் போதும். இப்படிதான் கட்சி அவர்களைப் பார்க்கிறது. மார்க்சியத்தை ஆழப் பயிலுதல் இவர்களுக்குள் இல்லை. நிதானமாக விவாதிப்பதில்லை. மார்க்சியம் இங்கு மக்களைப் பற்றிக் கொள்ளாததற்கு இந்தக் காரணங்கள் ஒருபுறம். புரட்சி இயக்கங்கள் மீது அரசு தொடுக்கும் கடுமையான அடக்குமுறை, மாற்றுக்கட்சிகளின் அவதூறுபடுத்தல் இவை இன்னொருபுறம். கட்சியை விட்டு இவர்கள் வெளியேறக்கூடிய சூழல் ஏற்படும்பொழுது இவர்களின் திகைப்பும் தடுமாற்றமும் சொல்ல முடியாது. இவர்களின் வேதனையை நம்மால் விவரிக்க இயலாது. நாளடைவில் என்ன நேருகிறது. இரண்டொருவர் பைத்தியமாகிறார்கள். மேலும் சிலர் குடும்ப வாழ்வுக்குள் செல்கிறார்கள். தொழில் முயற்சியில்

ஈடுபடுகிறார்கள். நிறைய பணம் திரட்டவும் கற்றுக் கொள்கிறார்கள். கட்சிக்குள் இருந்தபொழுது வெளியேறிய வகையில் செயல்பட்ட இவர்கள் தான் கட்சியில் இருந்து வெளியேறிய வெளியேற்றப்பட்ட நிலையில் இப்படி அடுத்த எல்லைக்கு செல்கிறார்கள். இவையெல்லாம் எப்படி இவர்களுக்கு சாத்தியமாகின்றன.

கட்சிக்குள் இப்படி குணக் கோளாறுகள் எப்படி ஏற்பட்டன என்பது குறித்துத் தொடர்ந்து சிந்திக்கிறேன். இவர்களில் பலருக்கு கல்விக்கான வாய்ப்பு பெருமளவில் இல்லை படிக்கிற காலத்திலும் கல்வியில் தீவிரம் கொள்ளாமல் இவர்கள் இருந்திருக்கக்கூடும். நல்ல ஆசிரியர்கள் கிடைத்திருக்க மாட்டார்கள். சமூக வாழ்வில் தேவையான வாய்ப்பும் வசதிகளும் இவர்களுக்குத் தருமளவுக்குக் குடும்ப சூழல் இல்லை கிராமச் சூழலில் அண்மைக் காலத்துப் போக்குகளின் காரணமாகக் குடும்பத்தில் சிதைவுகள் நேர்ந்திருக்கலாம். இதன் விளைவாக அமைதியான சூழலில்லை. உயர்க்கல்விக்கோ தொழில் முயற்சிக்கோ வாய்ப்பில்லை. மனக்கலவரங்கள் அதிகம் கோபதாபங்களும் அதிகம். மார்க்சியத்தோடு இவர்களுக்குத் தொடர்பு கிட்டும்பொழுது இவர்களது வாழ்நிலைக் காரணமாக இந்தச் சமூகத்தின் ஏற்றத் தாழ்வுகளுக்கு என்னக்காரணம் என்பதை இவர்கள் புரிந்து கொள்கிறார்கள். ஆவேசத்தோடு செயல்பட்டால் விரைவில் சமூகமாற்றத்தைக் காண முடியுமென்று நம்புகிறார்கள். இயக்கமும் இவர்களுக்குள் கோபதாபங்களைக் கூட்டுகிறது. மாற்றுக் கருத்துடையவர்களை இவர்கள் சந்தேகிக்கிறார்கள். இவர்கள் நம்புவதில்லை. குறைந்த அளவிற்கு படிப்பறிவு இருந்தால் போதும் செயல்படுவதுதான் முக்கியம் என்று கட்சி இவர்களுக்கு சொல்கிறது. இவர்களும் கிளம்புகிறார்கள். தலைவர்களை முற்றாக நம்புகிறார்கள். கட்சியில்லாமல் தமக்கு வாழ்வில்லை என்ற முறையில் செயல்படுகிறார்கள். கோபம் கொள்வதை நியாயம் என்கிறார்கள். கோபத்தில் குறையக்கூடாதுயென்பதும் இவர்கள் கொள்கை.

கலை இலக்கியங்கள் அரசியலுக்கு முக்கியமில்லை. நம் எதிரிகள் உலக அளவில் இருக்கிறார்கள். நம்மைத் தவிர நம் கட்சியைத் தவிர நம் மக்களுக்கு விடுதலை தருவதற்கு வேறு அமைப்பில்லை. நமக்குதான் உண்மை தெரிந்திருக்கிறது. தன்னலத்தைத் துறந்து நாம் தான் செயல்படுகிறோம். வேறு யாரைக் காட்டிலும் நாம் நேர்மையானவர்கள். அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டால் உலகத்தை மாற்றி விடமுடியும். எதிரிகளை நாம் விட்டு வைக்க முடியாது. எதிரிகளோடு ஒத்துழைப்பவர்களையும் நாம் அழித்தொழிக்க வேண்டும். நண்பர்களைப் போல நடிப்பவர்களுக்குள் எதிரிகள் பதுங்கியிருக்கிறார்கள். பழங்காலப் பெருமைகள் நமக்குத் தேவையில்லை. நாம் உருவாக்குவது பண்பாடு - கலாச்சாரம். நமக்கு யாரும் கற்றுத் தரவேண்டாம். பண்பாடு என்று சொல்லி நம் முன்னோர்கள் எதிரிகளுக்குத் தம்மை விட்டுக் கொடுத்தார்கள். ஆளும் வர்க்கத்தின் பண்பாடுகளை நமக்கு

அலங்காரமாக ஏற்றும் கொண்டார்கள். நமக்கான பண்பாட்டை நாம்தான் படைக்கிறோம். ஆயுதங்கள் இல்லாமல் எதையும் சாதிக்க முடியாது. வன்முறைதான் புதிய சமூகத்திற்கு வழி திறக்கும். நாம் கற்ற மார்க்சியம் நமக்குப் போதும். படிப்பாளிகள் என்போர் மார்க்சிய ஆய்வுகள் என்று எதையாவது சொல்லிக் கொண்டிருக்கட்டும். நான்கு சுவர்களுக்குள் அவர்கள் முடங்கியிருக்கட்டும் செயல்தான் முக்கியம். செயலில் ஈடுபடுபவன்தான் மார்க்சியத்திற்குத் தேவைப்படுகிறான்.

இப்படித்தான் கட்சிக்குள் மார்க்சியர் உருவாகின்றனர். இவர்கள் மீண்டும் மீண்டும் அதிகாரத்தையே நம்புகிறார்கள். இவர்கள் உருவாக்கும் சமுதாயம் மீண்டும் வன்முறையை ஆதாரமாகத்தான் கொண்டிருக்கும். ஏற்றத்தாழ்வுகள் வேறு வடிவங்களில் கட்டமைக்கப்படும் இவர்கள் பழைய சமுதாயத்தைத்தான் வேறுவடிவத்தில் படைக்க நினைக்கிறார்கள். இவர்களால் புதிய சமுதாயம் வளராது. இப்படித்தான் என் சிந்தனைகள் சொல்லுகின்றன. இவர்கள் சொல்லுகின்ற மார்க்சியம் எனக்கு உடன்பாடில்லை. என்னைக் கட்சிக்கோ, இன்னொன்றுக்கோ அடிமைப்படுத்துகின்ற மார்க்சியம் எனக்குத் தேவையில்லை. இதை மார்க்சியமென நம்பமாட்டேன். ஸ்டாலின் காலத்து ரஷ்யாவில் நடைபெற்ற கொடூரங்கள் இனியும் நமக்குத் தேவையில்லை. வர்க்கப் போராட்டம் இல்லாமல் சமூகமாற்றத்திற்கு வழியில்லையென்பது உண்மை. ஒற்றை வடிவத்தில் நடைபெறும் வர்க்கப்போராட்டம் மனிதனின் மாற்றத்திற்கு பயன்படாது. மனிதன் பன்முகப் பரிமாணங்கள் கொண்டவன். அடித்தளம்தான் எப்பொழுதும் மேற்கட்டை தீர்மானிக்கு மென்பது உண்மையில்லை. கலை, இலக்கியங்களின் உள்ளடக்கம் தான் அரசியல் என்பதும் உண்மையில்லை. குறிமுக்கியம் நெறி முக்கிய மில்லையென்பது உண்மையில்லை இப்படியெல்லாம் நான் சிந்திக்கிறேன். மார்க்சிய லெனினியக் கட்சிகளின் நடைமுறைதான் எதிர்மறை முறையில் எனக்கு இந்த உண்மைகளைக் கற்றுக் கொடுத்தன. இங்கு தான் மீண்டும் தமிழ் என்றும் பண்பாடுயென்றும் இலக்கியமென்றும் மெய்யியல் என்றும் பேசுகிறேன் கட்சிக்காரர்களோடு நான் தொடர்ந்து ஒத்துழைக்கிறேன். செயலில் ஈடுபட்டுள்ள அவர்களின் மூலந்தான் சமூக மாற்றம் சாத்தியம் அவர்கள் எத்தகைய குணக் கோளாறுகளை கொண்டிருந்தப்போதிலும் அவர்களோடு தோழமை கொள்வது எனக்குக் கடமை அவர்களை இகழ்ந்து உரைக்க மாட்டேன். அவமதிக்கமாட்டேன். அவர்கள் என்னை இகழ்ந்து உரைப்பதை சகித்துக் கொள்வேன். அவர்களுக்குள் மார்க்சியம் செறிவுபெற எனக்கு இயன்றதை தொடர்ந்து செய்வேன். மாவோ நெறியை நான் பெரிதும் மதிக்கிறேன். மார்க்சியத்துக்குள் புதிய வெளிச்சங்கள் திறந்து விடுகிறது மாவோ நெறி. மார்க்சியமென்று நான் எவற்றையெல்லாம் கருதிக் கொண்டிருக்கிறேனோ அவற்றையெல்லாம் மாவோ நெறியில் பயில்கிறேன். இந்த நெறியில் அன்றும் சரி இன்றும் சரி எனக்கு ஆசிரியர் எஸ்.என். நாகராசன்.

# 7. ஆசிரியப் பணி

கோவையிலுள்ள புகழ்பெற்ற ஒரு பள்ளியில் 28 ஆண்டுகள் நான் தமிழாசிரியராகப் பணிபுரிந்தேன். 50–களில் நான் கல்வி கற்றேன். 60–களின் தொடக்கத்தில் ஆசிரியர் பணி ஏற்றேன். 88–இல் விருப்ப ஓய்வு பெற்றேன். 50–களிலும் 60 களின் தொடக்கத்திலும் இருந்த நிலைமைகள் 88–இல் பெருமளவு மாறுபட்டிருந்தன. மேலும் பத்தாண்டுகள் கழிந்த நிலையில் திரும்பிச் செல்ல இயலாத அளவிற்கு எல்லாமே மாறுபட்டிருக்கின்றன. நம் சமூகத்திற்கு நேர்ந்த மிகப்பெரிய அவலம் என்று தான் இதைச் சொல்லமுடியும்.

50 களிலும் 60 களிலும் காந்தி, நேரு முதலியவர்களுக்கு மரியாதை இருந்தது. என்னதான் சிக்கல்கள் இருந்தபோதிலும் சமூகத்தில் அனைவரது வாழ்விற்குமான மாற்றங்களுக்கு வழியுண்டு என்ற நம்பிக்கை இருந்தது. அன்று தமிழுக்கும் தமிழ்ச் சான்றோர்களுக்கும் இருந்த மரியாதை சொல்லில் அடங்காது. வாழ்வில் அறப்பண்புகள் மதிக்கப்பட்டன. மனிதன் மகத்தானவன் தான் என்று பலரும் நம்பினர்.

30/40 ஆண்டுகள் கழித்து இன்று என்ன பார்க்கிறோம்? தமிழுக்கு மரியாதை இல்லை. காந்தியும் நேருவும் பிற்போக்காளர்கள். அறப்பண்புகள் என்று அலட்டிக்கொள்ள வேண்டியதில்லை. உலகம் ஒரு கிராமமாக மாறிக் கொண்டிருக்கிறது. எங்கும் எதிலும் அரசியலின் கை ஓங்கி இருக்கிறது. வாழ்வின் அனைத்துக் களங்களிலும் ஊழல் ஆட்சி செய்கிறது. பெருகிவரும் வாழ்க்கை வசதிகளை விரைந்து கைபற்றிக் கொள்ள வேண்டும். இலட்சங்களைக் கொட்டி உயர்க்கல்வி பெற வேண்டும். செல்வம், அதிகாரம் – இவற்றோடு இணைந்து கொள்ள வேண்டும். அனைவருக்குமான வாழ்க்கை இப்பொழுது சாத்தியமில்லை. கவிதை, இலக்கியம் என்று பேசுவதில் பொருளில்லை.

பள்ளியிலும் கல்லூரியிலும் தமிழை விரும்பிக் கற்றேன். தமிழாசிரியராக வேண்டுமென்பது என் பெருவிருப்பம். கல்லூரியில் பணியாற்ற வாய்ப்புக் கிட்டவில்லை. உயர்நிலை / மேல்நிலைப் பள்ளியிலேயே பணியாற்றி ஓய்வு பெற்றேன். இதற்காக நான் என்றும் வருத்தப்பட்டதில்லை. பதவிகள், பெருமைகள் தேடி நான் அலையவில்லை. தொடர்ந்து கற்பதில் நான் என் ஆர்வத்தைக் குறைத்துக் கொள்ளவில்லை. தமிழிலும்

ஆங்கிலத்திலும் நிறைய படித்தேன். தத்துவம், வரலாறு, அறிவியல், இலக்கியம் என விடாப்பிடியாகக் கற்றேன். நண்பர்களோடு இதழ் நடத்தினேன். நான் கற்ற மார்க்சியம், தமிழ்மீது பெரும் மரியாதை ஏற்படுத்தியது. தொடர்ந்து ஆய்வுகள் செய்தேன். நூல்கள் வெளியிட்டேன். தமிழ் என் வாழ்வுக்கு அர்த்தம் தந்தது. தமிழ் எனக்குச் சோறு போட்டது. தமிழை வைத்து நான் சம்பாதிக்கவில்லை. தமிழின் ஆக்கத்திற்கு என்னால் இயன்றதைச் செய்தேன். இன்னும் என்னால் செய்ய முடியும். தமிழோடு நான் வாழ்ந்ததற்காக மிகுந்த மனநிறைவு கொள்கிறேன்.

கோவையில் புகழ் பெற்ற தென்னிந்தியத் திருச்சபை உயர்நிலை / மேல்நிலைப் பள்ளியில் பணியாற்ற வாய்ப்புக் கிடைத்தது ஒரு பெரும்பேறு என்று கருதுகிறேன். 150 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழமையும் பெருமையும் உடையது எங்கள் பள்ளி. புகழ்பெற்ற ஆசிரியப் பெருமக்கள் மற்றும் தலைமையாசிரியர்கள் இப்பள்ளியில் பணியாற்றியுள்ளனர். பள்ளியில் நான் பணியாற்றிய சமகாலத்தில் பணியாற்றிய ஆசிரிய நண்பர்கள். பலரையும் நான் என்றும் மகிழ்ச்சியோடு நினைவு கொள்கிறேன். ஒரு பெரும் குடும்பத்தின் உறுப்பினர்கள் போல நாங்கள் வாழ்ந்தது ஒரு அற்புதமான காலம். அறிவாற்றலோடு பொறுப்புணர்வும் பள்ளி வளர்ச்சியில் அளவற்ற ஈடுபாடு கொண்ட ஆசிரியர்களை பெருமையோடு இப்பொழுதும் நினைத்துக் கொள்கிறேன். ஆசிரியப் பணிக்கு இலக்கியமாகவும் இலக்கணமாகவும் இவர்களில் ஒரு சிலரேனும் விளங்கினர். (இவர்களைப் பற்றியெல்லாம் இங்கு விரிவாக எழுத இடமில்லை. நண்பர்கள் மன்னிக்க வேண்டும்). இவர்களோடு நான் பணிபுரிந்தேன் என்பது எனக்கு மகிழ்ச்சியும் பெருமையும் தருகிறது.

அறுபதுகளில் இருந்த நிலைமை எண்பதுகளில் இல்லை. தொண்ணூறுகளில் அறவே இல்லை. மாணவர்களின் எண்ணிக்கை பெருகியது. வகுப்பறைகளில் 60/70/80/100 மாணவர்கள். ஆங்கில வகுப்புகள் எண்ணிக்கையில் அதிகரித்தன. பெற்றோர் ஆசிரிய சங்க உதவியோடு கட்டிட நிதி என்ற பெயர்களில் பலத்த வசூல் நடைபெறுகிறது. மாறிவரும் சமூக நிலவரங்களில் இருந்து பள்ளியை பிரித்து பார்க்க முடியாது. முன்பு இலக்கிய மன்றங்கள் இருந்தன. ஆசிரியர்களுக்கு மட்டுமல்லாமல் மாணவர்களுக்கும் சுதந்திரம் இருந்தது. மாணவர் மன்ற தேர்தல்கூடப் பள்ளியில் நடைபெற்றது. நாளுக்கு நாள் நெருக்கடி அதிகரித்தது. பள்ளியை நிர்வாகம் செய்ய வேண்டுமானால் அதற்கேற்ற நடைமுறைகளை கடைப்பிடித்தாக வேண்டும். ஆசிரியர்களைப் பிரித்தாள வேண்டும்.

உளவாளிகள் வைத்துக் கொள்ள வேண்டும். பள்ளி நிர்வாகத்தில் மேலிருப்பவர்களோடு பகிர்ந்து கொள்ள வேண்டும். ஆசிரியர்களுக்கு சுதந்திரம் தர முடியாது. எல்லோருக்குள்ளும் மனப்புழுக்கம். தனிப்பயிற்சி முறையில் பொருள் திரட்டுவதில் பேரார்வம். பணம் திரட்டுவதற்கும் பதவி பெறுவதற்குமான வாயில் தான் கல்வி பயிற்சி. அறம் முக்கியமில்லை. பண்பாடு முக்கியமில்லை. தமிழுக்கு முக்கியத்துவம் இல்லை. ஒரு 30/40 ஆண்டுகால வரலாற்றை இப்படித்தான் சுருக்கி சொல்ல முடியும் என்னதான் சமூகம் சீர்கெட்டாலும் கல்வித்துறை சீரழியக் கூடாது என்று நான் இன்னும் நம்புகிறேன்.

அறுபதுகளின் தொடக்கத்தில் நான் ஆசிரியராகப் பணியாற்றத் தொடங்கினேன். தமிழ்மீது எனக்கிருந்த ஆர்வத்தை மாணவர் நெஞ்சில் பதிய வைக்க முயன்றேன். இதுகுறித்து இப்பொழுது நான் சிலவற்றைச் சொல்ல வேண்டும்.

என் தமிழ் வகுப்புகள் சற்று கலகலப்பாக இருக்கும். மாணவர்களோடு நிறைய விவாதிப்பேன். மாணவர்களுக்கிடையிலும் விவாதங்களை ஊக்குவிப்பேன். வாரத்தில் ஒரு வகுப்பை கேள்வி – பதில் என ஒதுக்குவேன். வியட்நாம் சிக்கல் முதல் இலங்கைச் சிக்கல்வரை எல்லாவற்றையும் மாணவர்களுக்குச் சொல்வேன். செய்யுட் பகுதிகளில் இடம்பெறும் புராணக் கதைகளின் கற்பனைகள் குறித்து நிறையச் சொல்வேன். கடவுள் உண்டா? இல்லையா? என்ற கேள்விக்கும் இடமுண்டு. தமிழ்ப்பாடம் இதற்கெல்லாம் இடம் கொடுக்கும். எனது பலதுறைக் கல்வியறிவும் இதற்கெல்லாம் பயன்பட்டது. மாணவர்களுக்குள் அறிவு வெளிச்சத்தை ஆசிரியர் தூண்டத்தான் வேண்டும். இதில் நான் குறைவைத்துக் கொள்ளவில்லை.

பள்ளி நிர்வாகம் இந்தப் போக்கை ஆதரிக்க இயலாது. ஆசிரிய நண்பர்களில் சிலரும் இதை ஏற்கமாட்டார்கள். இதன் காரணமாகவும் பள்ளித் தலைவரோடு சிலசமயம் முரண்பாடு எழும். தலைவர் அறிவாற்றல் மிகுந்தவர். உரிமை தரும் உணர்வும் உள்ளவர். இருந்தபோதிலும் சிக்கல்கள் எழத்தான் செய்யும். (இது குறித்துப் பிறகு சொல்லலாம்)

சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய இலக்கியங்களிலிருந்து ஒரு பகுதி செய்யுள் பாடத்தில் இடம்பெறும். குறிப்பிட்ட பகுதியைக் கற்பிப்பதற்கு முன்னர், எடுத்துக்காட்டாக சிலப்பதிகாரக் கதை முழுவதும் சொல்வேன். இளங்கோவடிகள் குறித்த ஆய்வுகளையும் சொல்வேன். இப்படித்தான் தமிழ்

என்பதை மாணவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்பது என் எண்ணம். தமிழிலக்கிய வரலாற்றில் சில உயர் கட்டங்களையேனும் மாணவர் நெஞ்சில் பதிய வைக்க வேண்டும். கோனார் துணைநூலை வகுப்பறைக்குள் நான் அனுமதிப்பதில்லை. கவித்துவம், கற்பனை என்றெல்லாம் மாணவர்களுக்குச் சொல்ல முயன்றேன். கேள்வி – பதில் முதல் நோக்கமன்று.

உரைநடைப்பகுதி என்று வரும்பொழுது கூடியவரை அண்மைக் காலத்திற்கு / நிகழ் காலத்திற்கு வந்துவிடுகிறோம். கட்டுரையாசிரியர் என்ற முறையில் மறைமலையடிகள், உ.வே.சா., திரு.வி.க., மு.வ., அறிஞர் அண்ணா என்று தமிழறிஞர்களின் கட்டுரைகள் இடம்பெறும். இவர்களைப்பற்றி விரிவாகச் சொல்வேன். கட்டுரைப் பகுதியை தொடங்கும் முன் கட்டுரையில் அடங்கியுள்ள அனைத்து செய்திகளையும் விரிவாகத் தொகுத்துரைப்பேன். சிக்கலான கட்டுரைகளென்றால் உற்சாகத்தோடு எடுத்துச் சொல்வேன். அறிவியல் குறித்தும் பொருளியல் குறித்தும் சமயம் குறித்தும் சொல்லும் கட்டுரைகளின் கருத்துக்களை ஒன்றுக்கு இரண்டு அல்லது மூன்று முறை தொகுத்துச் சொல்வேன். பிறகுதான் கட்டுரையை மாணவர்களைப் படிக்கச் சொல்வேன்.

இலக்கணம் கற்பிப்பது மாணவர்களுக்குச் சற்று கவர்ச்சி குறைவான பகுதி. புணர்ச்சி இலக்கணத்தில் மாணவர்களுக்குத் தேவையில்லாத சில பகுதிகளும் உண்டு. மொழிப்பயிற்சிக்கு நாம் முக்கியத்துவம் தந்திருக்க வேண்டும். ஆங்கிலம் கற்பிப்பதில் மொழிப் பயிற்சிக்கு முதலிடம் தருவதைப் போல நாம் செய்திருக்க வேண்டும். (செய்யவில்லை என்பதன் விளைவை இன்று அனுபவிக்கிறோம்) என்னைப் பொறுத்தவரை பொருள்கோள், அணி இலக்கணம், யாப்பிலக்கணம், பொருள் இலக்கணம் ஆகியவற்றிற்கு அழுத்தம் தந்து கற்பித்தேன்.

மாணவர்கள் தாமாகக் கட்டுரை எழுதுவதில் ஆர்வம் கொள்வதில்லை. என்னதான் ஆசிரியர் முயன்றாலும் இறுதியில் மாணவர்களே ஆசிரியரைத் தம்வழிக்குக் கொண்டுவந்து விடுகின்றனர். அதாவது ஆசிரியரே எல்லாவற்றையும் சொல்லித் தரவேண்டும். கட்டுரையைத் திருத்துவதில் எப்பொழுதும் சிரமங்கள் அதிகம். தேர்வுத் தாள்களைத் திருத்துவதும் சிரமம் தரும் செயல். அக்கறையுடைய ஆசிரியர் மட்டுமே இக்கடமையைப் பொறுப்புணர்வோடுச் செய்யமுடியும். கூடியவரை சில சமயங்களிலேனும் பொறுப்புணர்வோடு இக்கடமையைச் செய்தேன். மாணவர்களின் சுயசிந்தனையைத் தூண்டும் முறையிலும் என்னால்

இயன்றஅளவு பணிபுரிந்தேன். என்னைக் காட்டிலும் சிறந்த முறையில் கற்பித்த ஆசிரிய நண்பர்களை நான் என்றும் நினைவு கொள்வேன். பழுதற்ற முறையில் இலக்கணம் கற்பித்த ஆசிரிய நண்பரையும் நான் அறிவேன். இறுதிப் பொதுத்தேர்வில் தேர்வுத்தாள்களைத் திருத்துவதற்காக சேலம் முதலிய இடங்களுக்குப் பலமுறை சென்றேன். திருவாரூர், மதுரை போன்ற நகரங்களில் சில பள்ளிகளின் தாள்களைத் திருத்தும் போது எனக்குள் பெரும் வியப்பு. பழுதற்ற முறையில் அழகாக இலக்கணக் கேள்விகள் உட்பட எல்லாக் கேள்விகளுக்கும் முழுமையான விடைகளை இந்த மாணவர்கள் / மாணவிகள் எழுதியிருந்தனர். இப்பள்ளியில் தமிழ் கற்பித்த ஆசிரியர்கள் நம் வணக்கத்திற்குரியவர்கள்.

பள்ளி நிர்வாகத்தோடு எனக்கு ஏற்பட்ட சிக்கல்களில் ஒரு சிலவற்றையேனும் இங்கு பதிவு செய்யவேண்டும். மார்க்சியத்தோடு எனக்கிருந்தத் தொடர்பை தலைவர் (தலைமையாசிரியர்) அறிவார். எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை எனினும் நாள்தோறும் காலையில் நடைபெறும் வழிபாட்டுக் கூட்டங்களுக்குத் தவறாமல் செல்வேன். ஆசிரியர் என்ற முறையில் அது என் கடமை. கிறித்தவப் பள்ளி என்பதனால் விவிலியத்திலிருந்து அறிவுரைப்பகுதி ஒன்றைப் படித்து அதை விளக்கும் முறையில் கதை சொல்வார் தலைவர். அறிஞர் வாழ்விலிருந்து சொல்லப்படும் கதைகள் எல்லோரையும் கவரத்தான் செய்யும். வழிபாட்டுக் கூட்டத்தில் நான் தவறாமல் கலந்து கொள்வது குறித்துத் தலைவருக்கு வியப்பாகவும் இருந்திருக்கும். அப்பொழுது 'புதிய தலைமுறை' இதழையும் நடத்திவந்தோம். இதுபற்றியும் தலைவர் அறிவார். இது குறித்தெல்லாம் தலைவர் என்னிடம் தொடக்கத்தில் விவாதிக்கவில்லை. நாளடைவில் சில சிக்கல்கள் ஏற்பட்டன. இந்நிலையில், தலைவருக்கும் எனக்கும் முரண்பாடுகள் தொடங்கின. (இவை குறித்து விரிவாக விவரங்கள் தருவது இங்கு தேவையில்லை)

ஒருமுறை என் மாணவர் கு. இராமகிருட்டிணனோடு சேலத்தில் நடைபெற்ற திராவிடர் கழக மாநில மாநாட்டிற்கு சென்று திரும்பினேன். கு. இராமகிருட்டிணன் என் வகுப்பு மாணவர் என்பது மட்டுமல்ல பள்ளி மாணவர் தலைவராகவும் இருந்தவர். என்னோடு நிறைய விவாதிப்பார். அந்த சேலம் மாநாட்டில் தான் இராமர் படத்திற்கு செருப்பு மாலை அணிவித்தார்கள். இது குறித்துப் பரபரப்பான செய்திகள் அப்பொழுது வந்து கொண்டிருந்தன. மாநாட்டிற்கு நான் சென்று திரும்பியது குறித்து தலைவருக்கு என் மேல் கோபம். உடல் நலக் குறைவு என்று நான் தந்திருந்த

விடுப்பிற்கான காரணத்தை மறுத்து இரண்டு நாள் விடுப்புக்கான ஊதியத்தை வெட்டுவது அவரது நோக்கமாக இருந்திருக்கக்கூடும். முதலில் இதை மெய்ப்பிக்க வேண்டும். அப்புறம் ஊதிய வெட்டு. இவற்றிற்கெல்லாம் சாத்தியம் குறைவுதான். நிர்வாகத்தின் சீர்கேடு குறித்து நான் வெளிப்படையாகப் பேசிவந்ததும் ஒரு காரணம்.

மாணவர் தலைவராக கு. இராமகிருட்டிணன் செயலாற்றிய காலத்தில் பள்ளியில் நடந்த மிக முக்கியமான நிகழ்ச்சி ஒன்று. மேற்கத்திய நாட்டிலிருந்து வந்த ஒரு கிறித்துவ பாடற் குழுவினரை வைத்து பள்ளியில் கிறித்துவமதக் கூட்டங்கள் நடத்தினார்கள். கலையரங்கில் நடைபெற்ற இந்த நிகழ்ச்சிக்கு மாணவர்கள் வகுப்பறைவாரியாக அனுப்பப்பட்டனர். வெளிப்படையான மதப்பிரச்சாரமாக இது இருந்தது. இதை மாணவர்கள் விரும்பவில்லை. இதை வெளிப்படுத்தும் முறையில் அந்த ஆண்டு பொங்கல் விழாவை பள்ளியில் கொண்டாட வேண்டுமென்று மாணவர் தலைவர் வேண்டுகோள் விடுத்தார். இந்துமத விழாவிற்குப் பள்ளியில் இடமில்லை என்று தலைவர் கூறினார். பொங்கல், மதவிழா அல்ல. தமிழர் திருநாள் என்று மாணவர்கள் கூறியதைத் தலைவர் ஏற்கவில்லை. மாணவர்கள் கருத்தை நானும் சில ஆசிரியர்களும் வரவேற்றோம். தலைவருக்கு கடும்சினம். மாணவர்கள் வேலைநிறுத்தம் தொடங்கினர். தொடர்ந்து மூன்று நாட்கள் பள்ளி வளாகத்திற்குள் கிறித்துவ மாணவர் உட்பட எவரும் இல்லை. மாவட்ட கல்வி அலுவலர் வந்தார். பொங்கல் விழா நடத்தத் தலைவர் ஒப்புக்கொண்டார். மறுநாள் காலையில் வழக்கம் போல் வழிபாட்டுக் கூட்டம். பொங்கல் விழா குறித்து தலைவரே "நாலு வார்த்தைகள்" பேசி இனி வகுப்பறைக்குச் செல்லுங்கள் என்று கூறினார். உடனடியாக மாணவர்களால் எதையும் செய்ய இயலவில்லை. ஆனால் அடுத்த ஆண்டு முதல் பொங்கல் விழாவை சிறப்பாகக் கொண்டாடத் தலைவரே ஏற்பாடு செய்தார். மாணவர்களோடு நானும் சில ஆசிரியர்களும் ஒத்துழைத்தோம் என்பது தலைவருக்குத் தெரியும். தலைவரின் சினத்தை தாங்கிக் கொள்வதைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை.

அறுபதுகளின் தொடக்கத்தில் இந்திய – சீனப்போர் வெடித்தது. மாணவர்கள் ஊர்வலம் சென்றனர். சிக்கல் உடனடியாகத் தீரவில்லை. பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்தது. காலை வழிபாட்டுக் கூட்டத்தில் சில சமயங்களில் தலைவர் இந்தப் போர் குறித்து பேசுவார். சீனாவைக் குறை சொல்வார். அப்பொழுதெல்லாம் "பிளிட்ஜ்" இதழைத் தவறாமல் நான் படித்து வந்தேன். போருக்குச் சீனா காரணமில்லை. போரை சீனா

தொடங்கவுமில்லை. இப்படிச் சொல்வதற்காகக் காரணங்கள் "பிளிட்ஜ்" இதழில் இருந்தன. நேருவிற்கு, ரசல் அனுப்பிய கடிதம் பற்றியும் நான் அறிவேன். நியாயமான அமைதி உடன்படிக்கைக்கு சீனா முயன்றது. காங்கிரஸ்கட்சி நேருவிற்குத் தந்த நெருக்கடி காரணமாக நேருவால் உடன்பாடு எதுவும் செய்துகொள்ள இயலவில்லை. மக்மோகன் கோடு பற்றி இவர்கள் பேசினார்கள். இந்தியா குறிப்பிடும் மக்மோகன் கோட்டை நான் வரையவில்லை என்று மக்மோகனே கூறினார்.

காலை வழிபாட்டுக் கூட்டத்தில் தலைவர் பேசிய பிறகு, அவர் அறையில் தலைவரைச் சந்தித்து இந்த விவரங்களை எடுத்துரைத்தேன். தலைவருக்கு சங்கடம்தான். எனினும் என் கருத்துக்களை அவர் மறுக்கவில்லை. சங்கடத்தோடுதான் நானும் தலைவரும் இருந்தோம்.

பிறிதொரு சமயம், தலைவர் உச்ச அளவில் சினத்தோடு இருந்தார். என்னை அழைத்துப் பேசினார். "இது கிறித்துவப் பள்ளி, உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை, தவிர நீங்கள் ஒரு கம்யூனிஸ்டு. கிறித்துவப் பள்ளியில் நீங்கள் பணிபுரிகிறீர்கள். இதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்". இப்படி மிரட்டுகிற தொனியில் தலைவர் பேசினார். என்னுடைய வேலைக்கு ஊறு நேரலாம் என்று எனக்குள் ஒரு உணர்வு. இப்பொழுது விட்டுக் கொடுக்கமுடியாது என்ற முறையில் நான் பதில் சொன்னேன். "இது கிறித்துவப் பள்ளி என்பதை நான் மறக்கவில்லை. இயேசுவைப் பற்றி எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. இயேசு ஒரு புரட்சிக்காரர். இயேசு ஒரு கம்யூனிஸ்டு என்பது என் கருத்து. கம்யூனிசத்தின் பாட்டி, கிறித்துவம் என்று ஒரு பழமொழி ஆங்கிலத்தில் உண்டு. இயேசு மக்கள் நலத்திற்காக வாழ்ந்தார். மக்களுக்காக உயிர் கொடுத்தார். இப்படி வாழ்பவர்தான் உண்மையான கிறித்துவராக இருக்க முடியும்" இப்படி நான் விவாதித்தேன். என் பதில் தலைவருக்குள் ஊடுருவி பல சிந்தனைகளை எழுப்பியிருக்க வேண்டும். நீங்கள் உண்மையான கிறித்தவர்தானா? என்று நான் அவரைக் கேட்பதாக அவர் உணர்ந்திருக்க வேண்டும். பள்ளி நிர்வாகத்தில் அவர் பங்கு குறித்து சிந்தித்திருக்க வேண்டும். தலைவர் சினம் தணிந்தது. என்னோடு விவாதிக்க அவரிடம் எதுவும் இல்லை. வகுப்பறைக்குச் செல்லுங்கள் என என்னை அனுப்பி வைத்தார்.

இவை சில நிகழ்ச்சிகள். இவை குறித்து எனது பார்வைக் கோணத்தை இங்கு குறிப்பிட்டுள்ளேன். நிர்வாகத்தின் மையத்தில்

இருக்கிறவர் தலைவர். என்னதான் என் பார்வை சரியானதென்று நான் கருதினாலும் தலைவர் என்னிடமிருந்து முரண்படுவதற்கான நியாயத்தை நான் புரிந்து கொள்கிறேன். மதம் என்பதை என்னைப்போல தலைவர் மறுக்க முடியாது. நிர்வாகம் குறித்து நான் கேள்வியெழுப்புவதை தலைவர் ஏற்க முடியாது. பள்ளி நிர்வாகத்தில் சனநாயகம் இல்லை. கல்விச்சட்டம் என இருந்ததை, தாங்கள் சிறுபான்மை இனத்தவர் என கிறித்துவ சபையினர் உரிமை கொண்டாடுவது அதிகரித்து வந்தது. சிறுபான்மை இனத்தவர் பள்ளி நிர்வாகத்தைப் பொருத்தவரை கல்விச்சட்டம் பின்வாங்கியது. இப்பொழுது கிறித்தவர் அல்லாத ஆசிரியர்களை வேண்டாதவரைப் போல நடத்த முடியும். அதிகாரத்தோடு ஆணவப்போக்கும் சேர்ந்து கொண்டால் நிலைமை எப்படி இருக்கும்? எண்பதுகளில் இப்போக்கு அதிகரித்தது. ஆசிரியர்களாகிய நாங்கள் பெரும் சிரமங்களுக்குள்ளானோம். இது பெரிய கதை. தனியார் பள்ளிகள் எல்லாவற்றிலும் இது நடந்த கதை. பெருமைக்குரிய பள்ளிகளில் அதிக அழுத்தத்தோடு இந்தக்கதை நடைபெற்றது. கல்வித்துறையின் சீர்கேடுகள் இப்படித்தான் வலுப்பெற்றன. தமிழுக்கு மட்டும் இங்கு என்ன மரியாதை எஞ்சியிருக்கும்? தமிழாசிரியர் என்பவர் சாயல்களோடுதான் வாழவேண்டும். 88–இல் பணியிலிருந்து நான் விலகியது என்னைப் பொறுத்தவரை பெரும் நிம்மதி.

# பின்னுரை
# வாழ்வியல் விவரங்கள்

1. என் பிறந்த நாள் பற்றிச் சரியான குறிப்புக்கள் இல்லை. 1–7–35 என்று பள்ளியில் பதிவு செய்திருக்கிறார்கள். நான் பிறந்த ஊர் சோமனூர். கோவை மாவட்டத்தில் பல்லடம் வட்டத்தில் உள்ளது இந்த ஊர். என் தந்தையார் பெயர் கிருஷ்ணசாமி, தாயார் பாப்பம்மாள். என் பாட்டனார் காலம் முதலே எங்கள் குடும்பத்திற்குள் பல சாதிகள் கலந்திருக்கின்றன. என் தாய்மொழி தமிழ். எங்கள் குடும்பத்தில் வந்து இணைந்தவர்கள் பல சாதியினர். தெலுங்கையும் மலையாளத்தையும் தாய்மொழியாகக் கொண்டவர்களும் உள்ளனர். என் பாட்டனார் கருப்பஞ் செட்டியார். என் பாட்டி, கோவில் பூசைசெய்யும் பண்டாரத்தார் குடும்பத்தைச் சார்ந்தவர். இருவரும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டு சிங்கப்பூரில் சிலகாலம் வாழ்ந்து திரும்பியவர்கள். பாட்டனாரின் வீரத்தையும் பாட்டியின் பேரன்பையும் நான் அறிவேன். சாதி உணர்வு எங்களுக்குள் தங்கவில்லை.

2. எனது மூன்று அல்லது நான்காவது வயதில் எங்கள் குடும்பம் அவிநாசி / கோபி வட்டத்தின் மையப் புள்ளியிலிருந்த சுள்ளிப்பாளையத்தில் குடியேறியது. உழவர்கள் வாழ்ந்த சிற்றூர். அருகில் சாவக்கட்டுப் பாளையம். பெரும்பகுதி கன்னட மொழி பேசும் நெசவாளர்கள் வாழும் பகுதி. இங்குதான் என் தொடக்கப்பள்ளி வாழ்க்கை. கிராமத்து இயற்கையோடும் மக்களோடும் குறிப்பாக உழவர் மற்றும் நெசவாளிகள் குடும்பத்தோடு தான் எங்கள் உறவு. நாற்பதுகளில் வறுமை. விடுதலைக்கான போராட்டம். இன்றும் இந்த கிராமம் எனக்குள் தங்கியிருக்கிறது. இயற்கை நேசம். சமதரும உணர்வோடு கூடிய என் சமூக உணர்வு – இவற்றிற்கான வேர்கள் என் கிராமத்திலிருந்துதான் எனக்குள் வந்தன. கலையுணர்வு மிக்கவர்கள் நெசவாளர்கள். எனக்குள் கலையுணர்வைப் பதித்தவர் இம்மக்கள்.

3. சோமனூர் திரும்பி வந்தேன். சிற்றப்பா மளிகைக்கடை வைத்திருந்தார். ஊரில் பெரிய மளிகைக்கடை. ஊருக்கருகில் நொய்யலாறு. சோமனூரைச் சுற்றிலும் சுமார் 20–30 கிராமங்களில் சுமார் 30–40 ஆண்டுகளுக்கு மேலாக நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் விவரித்து எழுத கல்கியைப் போன்ற கற்பனைவளம் மிக்க ஒரு நாவலாசிரியர் தேவை. இந்த வட்டாரத்தில் தலைமையைக் கைப்பற்றுவதற்கான கடுமையான போட்டி. வேளாளர்களுக்கு இடையிலும் வேளாளர் மற்றும் செட்டிமார்களுக் கிடையிலும் எத்தனை கொலைகள்! எத்தனை வீரச்செயல்கள்.

கருமத்தம்பட்டிக்கருகிலுள்ள சென்னியாண்டவர் கோயில் இந்த வரலாற்றில் ஒரு சிறுபுள்ளி. இந்த வரலாற்றின் வீச்சுக்குள் அகப்படாத குடும்பம் என்று எதுவுமில்லை. எங்கள் குடும்பமும் ஒன்று. ஐம்பதுகளில் பஞ்சாயத்து தேர்தல். மீண்டும் ஆதிக்கத்திற்கான போட்டி, கொலை மற்றும் கலவரங்கள். கம்யூனிஸ்டுகள் எங்கள் ஊருக்குள் வந்தனர். கம்யூனிஸ்டுகளோடு என் சிற்றப்பா. பெருமிதமான வாழ்வு வாழ்ந்தார். கருமத்தம்பட்டியில் R.C. நடுநிலைப்பள்ளியில் கல்வி. என் தந்தையாரும் சோமனூருக்கு வந்து சேர்ந்தார். தொழில் உணவுக்கடை நெருக்கடி மிகுந்தது எங்கள் ஊர்ச் சூழல்.

4. எங்கள் குடும்பம் பெரியது. தந்தையோடு பிறந்தவர்கள் மூவர். இருவர் பெண்மக்கள். பெரிய அத்தை, சுள்ளிப்பாளையத்தில் வாழ்க்கைப்பட்டார். அவரும் என் மாமாவும் ஆற்றல்மிக்கவர்கள். அன்பின் ஊற்றுகள். சிறிய அத்தை கோவையில் வாழ்க்கை. கணவர் பஞ்சாலையில் வேலை. என் அத்தைகள் இருவரும் பாட்டியின் பேரன்பைக் காலமெல்லாம் ஓடவிட்டவர்கள். இவர்களில்லாமல் எங்களுக்கு வாழ்வின் அர்த்தமில்லை. என் தந்தையாரும் மாமாவும் போர்க்காலத்தில் பங்கீட்டுக் கடை நடத்தினார்கள். ஊருக்குள் பெரும் மரியாதைக்குரியவர்கள். நேர்மையானவர்கள். இவர்களின் பெருமிதம் எங்களை இன்னும் வாழ்விக்கிறது.

5. கோவைக்கு ரயிலில் சென்று படித்தேன். மைக்கேல் பள்ளியில் படிப்பு. தொடர்ந்து அரசு கலைக்கல்லூரியில் படிப்பு. எனக்குள் இன்னும் நட்புணர்வோடு ஊறிக்கிடக்கிற நண்பர்கள் சிலர். பெரியசாமி, நடராசன், சின்னச்சாமி, அரங்கசாமி, இராமசாமி, காளிமுத்து, சோமசுந்தரம். சிலர் இன்று உயிரோடு இல்லை. இருப்பவர்கள் அவரவர் வழியில் சாதனையாளர்கள். பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கல்வி. பெரிய நூலகம். அற்புதமான சூழல். என் வாழ்வில் மறக்க முடியாத காலம். "கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை" என்ற என் நூலின் இறுதி இயலில் நான் குறிப்பிட்டிருக்கிற சமய அனுபவங்கள் நிகழ்ந்த காலம். நெஞ்சோடு இன்னும் நிழலாடும் நண்பர்கள். பஞ்சாங்கம், பஞ்சநதன், தனசிங், பழனியப்பன், அரவிந்தன், கணபதி, சகுந்தலா, காத்தையன், அழகப்பன் இவர்களில் சிலரேனும் கல்லூரியில் பேராசிரியர்கள் மற்றும் முதல்வர்கள். கல்லூரியில் படிக்கும்பொழுதே என்னைப் பற்றிக் கொண்டது காசநோய். பெருந்துறையில் 8 மாதம் மருத்துவம். கல்லூரிக் கல்விக்கு இரண்டாண்டு தடை. பிறகு படித்து முடித்தேன். நான் கல்வி கற்பதற்காக தம் கல்வியை இழந்தனர் என் உடன் பிறந்தவர்கள். கற்பதில் எனக்கிருந்த ஈடுபாடு

சொல்லில் அடங்காது. எனக்கு வாய்த்த நல்லாசிரியர்கள். யாரை என்னால் மறக்கமுடியும்?

கோவைக்கருகிலுள்ள குறிச்சி – சுந்தராபுரத்தில் செங்கோட்டையா பள்ளியில் இரண்டாண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றினேன். இங்குதான் என்னைக் காதலித்து கரம் பற்றினாள் என் மனைவி இந்திராணி. கலப்புத் திருமணம். மனைவியின் பெற்றோருக்கு உடன்பாடில்லை. நீதிமன்றத்திற்குச் சென்று திரும்பினோம். கோவையிலுள்ள புகழ்பெற்ற தென்னிந்திய திருச்சபை மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணி. 28 ஆண்டுகள். புகழ்பெற்ற தலைமையாசிரியர்கள். திரு.மைக்கேல் பொன்னுசாமி, திரு. சாமுவேல் ஞான கடாட்சம். அன்பும் அறிவும் மிக்க ஆசிரியப் பெருமக்கள். பள்ளி வாழ்க்கையில் எத்தனையோ அனுபவங்கள். நல்லதும் கெட்டதும் என. 88–இல் விருப்ப ஓய்வு. கண் பார்வை பாதிப்பு.

6. அறுபதுகளின் தொடக்கத்தில் மார்க்சியத்தோடு எனக்கு உறவு. எனக்கு மார்க்சியத்தை அறிமுகப்படுத்தியவர் நண்பர். புலவர் ஆதி. கலை, இலக்கியப் பெருமன்றத்தோடும் உறவு. எஸ்.என். நாகராசன் அவர்களைச் சந்தித்த பிறகு என் சிந்தனையில் பெரும் மாற்றம். கோவையில் சிந்தனைமன்றம். எஸ்.வி.ஆர். முதலியவர்களோடு தொடர்பு. "புதிய தலைமுறை" தொடங்கினோம். காவல்துறையின் கெடுபிடிகள். ஆசிரியர் குழுவிற்குள் கட்சியின் தலையீடு "புதிய தலைமுறை"யிலிருந்து வெளியேறினேன். நிறைய அனுபவங்கள். எழுபதுகளின் தொடக்கத்தில் வானம்பாடி இயக்கம். கவிதையோடும் திறனாய்வோடும் என் உறவு செறிவு பெற்றது. வானம்பாடி இயக்கத்தில் பிளவு. அக்னிபுத்திரன், சுந்தரம், ஜீவஒளியோடு நானும் தனிக்குழுவாகச் செயல்பட்டோம். 'வேள்வி' – இரண்டு இதழ்கள் வெளிவந்தன. தொடர்ந்து மார்க்சியம் கற்றேன். 76 –இல் முதல் 'பரிமாணம்' இதழ் தொடங்கினோம். நண்பர்கள் அறிவன், ஆறுமுகம், அமரநாதன், ரத்தினம், குறிஞ்சி ஆகியவர்களோடு உறவு. 'இலக்கு' இயக்கத்தோடும் படிகள், இலக்கிய வட்டம் நண்பர்களோடும் நெருக்கமான தொடர்பு. சிலகாலம் கட்சிக்குள். பலகாலம் ஓரத்தில். நண்பர்கள், பிரிவுகள், நூல் வெளியீடு முதலியவை.

கம்யூனிஸ்ட் கட்சி வட்டாரத்தோடு எனக்கெப்போதும் உறவோடு முரண்களும் இருந்தன. ஜீவா, ரகுநாதன் ஆகியவர்களோடு என் உறவை நெருக்கம் என்று சொல்ல முடியாது. தி.க.சி. யோடு முரண்களும் அதிகம் என்றாலும் எல்லோரையும் போலவே நானும் அவர் அன்பிற்குரியவன்.

80களின் தொடக்கத்தில் கைலாசபதி அவர்கள் என்னோடு மனம் திறந்து உரையாடியதை நான் என்றும் மறக்கமாட்டேன். சிவத்தம்பி அவர்களின் நேசத்திற்குரியவனாக நான் இருப்பது பற்றி எனக்குப் பெருமை. பொன்னீலனோடும், முத்துமோகனோடும் உள்ள உறவில் ஈரம் அதிகம் என்று சொல்ல முடியும். சிலரிடம்தான் மனம் விட்டு பேசமுடிகிறது. கட்சி எங்களுக்குச் சுதந்திரம் வழங்கியுள்ளது என்று என்னதான் கூறிக் கொண்டாலும் கட்சி சார்ந்தக் கலை இலக்கியவாதிகள் மார்க்சியம் மற்றும் இலக்கியத்தைக் காட்டிலும் கட்சி அதிகாரத்திற்கே கட்டுப்பட்டிருக்கிறார்கள். செல்லப்பா, சிற்பி ஆகியவர்களோடு நான் மிக நெருக்கமாக இருந்திருக்கிறேன். என் தேவையறிந்து உதவி செய்தமைக்காக சிற்பி என் வணக்கத்திற்குரியவர். ல.ச.ரா. வின் நேசத்திற்கு இணை சொல்ல முடியாது. இலக்கியம் குறித்த என் அறிவைக் கூர்மைப்படுத்தியதில் "கசடதபற" நண்பர்களுக்கு முக்கியமான இடம் உண்டு. வானம்பாடி நண்பர்களுடன் என் உறவைக் குடும்ப உறவு என்று சொல்வதில் எனக்குத் தயக்கமில்லை. அசோகமித்ரன் முதற்கொண்டு கடைசியாக சு.வேணுகோபால் வரை யாரிடத்தும் பகை உணர்வு இல்லாமல் பழகி இருக்கிறேன். இவர்களோடு பழகுவதற்கு மார்க்சியம் எனக்குத் தடையாக இல்லை. இவர்களில் எவரையும் வர்க்கப் பகைவர்கள் என்று என்னால் கருத முடியதில்லை. இவர்களில் சிலர் பார்ப்பனர் என்பதால் தமிழ் இலக்கியத்திற்கு இவர்களின் பங்களிப்பை என்னால் குறைத்துச் சொல்லமுடியாது.

தமிழில் அமைப்பியல் முதலான புதிய அணுகுமுறைகள் நுழைந்தபோது ஆர்வமுடன் கற்றிருக்கிறேன். தமிழவன் மட்டுமல்லாமல் அ. மார்க்ஸ் வரை பலரும் என் பார்வையை விரிவு செய்திருக்கிறார்கள். சிலர் என்னோடு முரண்பட்டு விலகிச் சென்றாலும் இவர்களிடமிருந்து மனத்தளவிலேனும் நான் விலகவில்லை. மார்க்சியம் மட்டுமல்லாமல் பின் நவீனத்துவம் வரையிலான எத்தகைய புதிய பார்வைகளையும் உள்வாங்கிச் செரித்துக் கொள்வதோடு தன்னை வளப்படுத்திக் கொள்வதற்கான வேர்கள் நெடுங்கால தமிழிலக்கிய மரபில் இருக்கவே செய்கின்றன. தமிழ் மரபோடு எனது இடையறாத உறவு கருதியே 'விளக்கு' அமைப்பினர் எனக்குப் பரிசளித்தார்கள். மாறுவது மரபு. இல்லாவிட்டால் மாற்றுவது மரபு என்ற டி.எஸ். இலியட்டின் இலக்கியக் கொள்கை எனக்கு உடன்பாடு. யாரோடும் எத்தகைய உறவு கொண்டிருந்தாலும் மார்க்சியத்தை எந்த இடத்திலும் நான் விட்டுக் கொடுப்பதில்லை. மார்க்சியத்தைப் புறக்கணித்துவிட்டுத் தமிழாய்வைச் செய்வது சாத்தியமில்லை. தமிழறிஞர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களில் பலர் மார்க்சியத்தை ஏற்றுக்கொள்ளாதது தமிழின்

ஆக்கத்திற்கு உதவாது. தமிழிலக்கியத் திறனாய்வில் பிரமிள், வெங்கட் சுவாமிநாதன் முதலியவர்களின் பார்வையையும் தமிழறிஞர்கள் கற்பதில் அக்கறை கொள்வதில்லை. இந்நிலையில் 21ம் நூற்றாண்டுக்கு தமிழை எவ்வாறு எடுத்துச் செல்ல முடியும்.

7. பெரியாரியமும் மார்க்சியமும் தமிழ்த்தேசியமென்ற அரசியலில்தான் முனைப்பு கொள்ள வேண்டுமென்பது என் கருத்து. இந்த நோக்கத்தை முன்னிறுத்தி இப்பொழுது செயல்படுகிறேன். "தமிழ்நேயம்" இதழ் இதற்கான ஒரு கருவி. இயற்கை வேளாண்மை, தாய்த்தமிழ்ப் பள்ளி போன்ற முயற்சிகளை நான் பெரிதும் ஆதரிக்கிறேன். பி.ஆர். குப்புசாமி, கு.ச. ஆனந்தன், வே. ஆனைமுத்து, மு.க. சுப்பிரமணியம், தியாகு முதலியவர்களின் ஆக்க முறையிலான செயல்பாட்டோடு ஒத்துழைப்பதில் நிறைவு காண்கிறேன். தமிழ்த்தேசியம் என்ற அரசியலின் ஆக்கத்திற்கு தமிழ் மெய்யியலை தமிழ் இலக்கியத்திலிருந்து தமிழ் வரலாறு மற்றும் வாழ்வியலில் இருந்தும் தொகுக்கும் முயற்சியில் நண்பர்களோடு ஈடுபட்டிருக்கிறேன்.

8. எங்கள் குடும்பம் பற்றி சில குறிப்புகளையேனும் இங்கு தரவேண்டும். என்னோடு உடன்பிறந்தவர்கள் எண்மர். என்னை ஆளாக்கியதில் பெரும் பங்கு வகித்த என் அண்ணனும், அண்ணியும் தற்போது இல்லை. எங்கள் குடும்பத்திற்குப் பேராதரவாக இருந்த பெரிய மாமாவும், அத்தையும் கடந்த சில ஆண்டுகளுக்குள் காலமானார்கள். என் தாயார் இன்னும் உயிரோடு இருக்கிறார். அவர் 90 வயதை நெருக்கிக் கொண்டிருக்கிறார். எனக்காகத் தங்கள் கல்வி வாய்ப்புகளை இழந்தவர்கள் என் உடன்பிறந்தார். என் தம்பியர், தங்கைகள், சிற்றப்பா மக்கள் பெரிய அத்தை, சிறிய அத்தை ஆகியவர்களின் மக்கள் அவர்களின் குழந்தைகள் என இப்பொழுது பார்த்தால் சுமார் 200 பேர்களுக்கு மேல் இருப்பார்கள். திருமணம் அல்லது வேறு சிறப்பு நிகழ்வின்போது இத்தனை பேரோடு உறவாடுவதில் உள்ள பேரின்பத்தை என்னவென்று சொல்வது? எத்தனை இழப்புகள், துயரங்கள், சிரமங்கள் தாங்கி இவர்கள் இந்த நிலைக்கு வந்திருக்கிறார்கள். எனக்கு மக்கள் இருவர். பாரியும், மாதவனும். இவர்கள் கலை உணர்வும், நேர்மையும் மிக்கவர்கள் என்ற முறையில் என் வாரிசுகள். குடும்ப நிர்வாகம் முழுவதையும் தாங்கி நிறைவேற்றும் ஆளுமை மிக்கவர் என் மனைவி. இதன் காரணமாக மார்க்சியம், இலக்கியம், நண்பர்கள் என்று என்னால் வாழ முடிகிறது. 88 – முதல் கண் பார்வை இல்லாத நிலையிலும் என்னால் தொடர்ந்து படிக்கவும் எழுதவும் நூல்கள் வெளியிடவும் உதவியாளரும் நண்பர்களும் என்னோடு ஒத்துழைக்கின்றனர். இவர்களில் சிலரையேனும்

இங்கு குறிப்பிட வேண்டும். அறிவன், குறிஞ்சி, மு. வேலாயுதன், ஜெயராமன், நாராயண சாமி, மதுசூதனன், கோபி முதலியவர்கள்.

9. புதிய தலைமுறையில் ஓராண்டு மட்டுமே நான் இருந்தாலும் என் பங்களிப்பு கூடுதலாகவே இருந்தது, எஸ்.என். நாகராசனுக்கு அடுத்தபடி. வானம்பாடி இயக்கத்தில் தொடக்கத்தில் நான் ஓரத்திலிருந்து பிறகு மையத்திற்குச் சென்றேன். வானம்பாடி இயக்கத்தில் பிளவு நேர்ந்தபோது நான் மார்க்சியத்தின் சார்பிலிருந்தேன். இயக்கம் பிளவுபட்டதற்குத் தத்துவம் தான் காரணமேயன்றி குழு மனப்பான்மை அன்று. குழு மனப்பான்மையை நான் என்றும் சார்ந்திருக்கவில்லை. மார்க்சியத்தின் புதிய பரிமாணங்களைக் கண்டறிய வேண்டும் என்ற முறையில் எஸ்.வி.ஆரும் நானும் பரிமாணம் இதழைத் தொடங்கினோம். அச்சகப்பொறுப்பை நண்பர் இரத்தினம் ஏற்றுக் கொண்டார். மார்க்சியத்தின் தத்துவத்திற்கானத் தனி இதழ் என்ற முறையில் பரிமாணத்திற்கு முன்பு வேறு இதழ் எதுவுமில்லை. கட்சி வட்டாரத்தின் மார்க்ஸியம் எங்களுக்குப் போதுமானதாகயில்லை. ஆரோக்கியமான கலாச்சார இயக்கத்தை வளர்ப்பதற்கென்று 'இலக்கு' இயக்கத்தை பெங்களூர் நண்பர்கள் முனைப்போடு தோற்றுவித்தபோது அவர்களோடு நானும் இருந்தேன். கட்சிக்காரர்களின் தலையீடு ஒரு புறம். தூய இலக்கியவாதிகள் இன்னொருபுறம். இலக்கிய இயக்கம் நின்று போனது. கலாச்சாரம் குறித்து என் பார்வை விரிவு பெற்றது. தமிழவனுக்கு மார்க்சியம் போதவில்லை. அமைப்பியலுக்குள் ஆழ்ந்து சென்றார். மார்க்சியத்திற்கும் அமைப்பியலுக்கும் எனக்குள் முரண்பாடு இல்லை. எஸ்.என். நாகராசன் நிறையப் பேசுவார். எழுத்துவடிவத்தில் அவரிடம் கட்டுரை பெறுவதற்கு நான் பட்ட சிரமங்கள் சொல்லி முடியாது. மார்க்சியத்தின் ஆழம் தெரிந்தவர் என்ற முறையில் அவரோடு நிறைய விவாதித்தேன். கட்டுரைகள் பெற்று இதழில் வெளியிட்டேன். அவரது கட்டுரைகள் இதுவரை நான்கு நூல்களாக வெளிவந்துள்ளன. எனக்கு ஆசான் என்ற முறையில் எனக்குரிய கடமையை நான் முழு நிறைவோடு செய்தேன். நண்பர்களோடு இணைந்து 'நிகழ்' தொடங்கினாலும் நாளடைவில் நானே முழுப்பொறுப்பையும் ஏற்க வேண்டியிருந்தது. அறிவன், குறிஞ்சி முதலிய நண்பர்கள் எப்போதும் என்னுடன் இருந்தனர். நிறையப் பொருட்செலவு. இதைப் பொருள்இழப்பு என்று நான் ஒருபோதும் கருதியதில்லை. என்னைப் பொறுத்தவரை இது வரவுதான். என்னளவில் எடுத்துக்கொண்ட எந்தப் பொறுப்பையும் முழு அளவில் உறுதியாக நிறைவேற்றி வந்துள்ளேன். மாவோவின் நெறியில் எனக்குள் செறிவுபெற்ற மார்க்சியத்தை எந்த மேற்காற்றும்

அசைத்துவிடவில்லை. ஏன் மனக்கதவு, சன்னல்களை எப்போதும் திறந்து வைத்துள்ளேன். தமிழகத்தில் பெரும்பாலான இலக்கியவாதிகள், மார்க்சியப் பற்றாளர்கள் முதலியவர்களிடம் ஆரோக்கியமான பற்றுக் கொள்வதில் நான் என்றும் பின்வாங்கியதில்லை. நம்மாழ்வார் அவர்களைத் தேடிப்பிடித்து நண்பர் குமரவேலும், நானும் அவரது கட்டுரைகளை நூல்களாக வெளியிட்டு வருகிறோம். தமிழ்த்தேசியத்திற்கு ஆக்கம் தரும் முறையில் நூல்/இதழ் வெளியிடுகிறோம். புதிய உலகச் சூழலில் மார்க்சியம் எதிர்கொள்ள வேண்டிய சிக்கல்கள் குறித்துக் கட்சிக்காரர்கள் கவலைப்படவில்லை. இத்தகைய சிக்கல்கள் குறித்த கட்டுரைகளைத் தொகுத்து வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோம். கட்சிக்கு வெளியில் மார்க்சியம் தழைத்துவிடக் கூடாது என்பதில் வெறித்தனமாகச் செயற்படுவதன் மூலம் மார்க்சியத்தின் மரியாதையைக் கெடுக்கிற கட்சிக்காரர்களோடு நல்லுறவு என்றும் இருந்ததில்லை. கட்சிவட்டங்களிலிருந்து நான் பெற்ற காயங்கள் இன்றும் ஆறவில்லை. என்னதான் வேறுபாடு இருந்தாலும் மார்க்சிய – லெனினிய இயக்கத்தோடுதான் நான் என்றும் இருப்பேன்.

10. தமிழ்நாட்டின் வரலாற்றுச் சூழலில் நான் எங்கிருக்கிறேன்? என்று அடிக்கடி எனக்குள் தேடுகிறேன். 65 ஆண்டுகள் என்பவை வரலாற்றில் மிகமிகச் சிறிய காலம்தான். உலகமும், நெடுங்கால வரலாறும் நமக்குள் கலவாமல் இல்லை. இந்தியச்சூழல் நம்மைக் கடுமையாகப் பாதிக்கத்தான் செய்கிறது. தமிழ்ச் சூழலில் இன்னும் நெருக்கடிகள் அதிகம். தத்துவ மோதல்கள் இலக்கியத்தில் புதியவகைப் போக்குகள், புதிய அணுகுமுறைகள் பலரோடு இன்றும் நெருக்கமாகப் பழகியிருக்க வேண்டும். வாழ்ந்தது போதவில்லை. நண்பர்களும் பிரிந்து செல்கிறார்கள். குற்றச்சாட்டுகளும் மனவருத்தங்களும் ஏற்படத்தான் செய்கின்றன. வகைவகையான இலக்கியவாதிகளுடன், அறிஞர்களுடன் நான் நல்லுறவு கொண்டிருந்தேன்.

நான் மனிதர்களை நேசித்தேன். நண்பர்களுக்கு நெருக்கமாயிருந்தேன். எனக்கு அன்பைக் கற்றுக் கொடுத்த சில அற்புதமான மனிதர்கள் என் நெஞ்சுக்கு மிக நெருக்கமானவர்கள். எவ்வளவோ எழுதினேன். இன்னும் எனக்குள்ளும் வெளியிலும் தேடுகிறேன். நான் நிறைவோடுதான் வாழ்கிறேன். எனக்கு கிடைத்த வாய்ப்பிற்காக எல்லாரிடத்திலும் நன்றியோடு இருக்கிறேன். என்னைக் குற்றம் சொல்பவர்களிடமிருந்தும் நான் நிறையக் கற்றுக் கொண்டேன். முதலாளிய குணமுடையவர்களிடம் என்னால் நெருக்கமாக உறவு கொள்ள இயலவில்லை. எனக்குக் கற்றுத் தந்த ஆசான்களென நான் பலரை இங்கு

குறிப்பிட முடியும். எஸ்.என். நாகராசன், எஸ்.வி.ராசதுரை என்று தொடங்கிப் பலரைக் குறிப்பிட வேண்டும். எத்தனை பேரைக் குறிப்பிட்டாலும் சில பெயர்கள் விடுபட்டுப் போகும். நான் ஏதோ ஓரிடத்தில் இந்தக் குறிப்புகளை முடித்துக் கொள்ள வேண்டும். எவ்வளவுதான் குறைவுடையனவாக இந்தக் குறிப்புகள் இருந்தபோதும் இந்த இடத்தில் நிறுத்திக் கொள்கிறேன். என்னை ஆளாக்கியவர்கள் என் மூதாதையர்கள் மட்டுமல்ல. என் உறவினர்களும் நண்பர்களும் என் உருவாக்கத்தில் கலந்துள்ளனர் / கரைந்துள்ளனர். சாந்தாராம், உலகநாதன் என்ற என் உதவியாளர்களையும் இப்பொழுது நினைத்துக் கொள்கிறேன்.

21–ம் நூற்றாண்டு நமக்கு நெருக்கடியான நூற்றாண்டு. அந்த நூற்றாண்டுக்குள் செல்ல நான் விரும்பவில்லை. அந்த நூற்றாண்டிற்குள்ளும் நான் வாழ்வதென்றால் அது பெரிய தண்டனை. தமிழ்த்தேசியமென்ற அரசியல் நமக்குள் திடமாக உருவாகுமென்றால் உயிரைக் கொடுத்தேனும் நம்மால் சில பத்தாண்டுகள் வாழ இயலும். தமிழைவிட்டுப் பிரிய எனக்கு அணுவளவும் மனமில்லை. தமிழோடு நான் வாழ்ந்தேன் என்பதுதான் எனக்கு பெருத்த மனநிறைவு. என் கிராமமும் என் உறவுகளும் என் தமிழும் மார்க்சியமும் எனக்குள் ஒரே முனையில் இணைந்துள்ளன. இந்த முனைக்குப் பெயர் சமதருமம்.

# நண்பர்கள், பிரச்னைகள் - நான், நீங்கள்

## நிகழ் 11

மே மாத இறுதியில் ஈரோட்டில் 'பார்வை' சார்பில் குறிஞ்சி ஏற்பாடு செய்திருந்த கருத்தரங்கில் நண்பர் பழமலையின் கவிதைகள் விரிவாக ஆய்வுக்குட்படுத்தப்பட்டன. இவை தொகுக்கப்பட்டு சிறுநூலாக வெளிவந்தால் நன்றாக இருக்கும். 'நான் மூன்றாம் உலகத்துக் கவிஞன். வஞ்சிக்கப்பட்ட நாட்டின் சார்பில் நான் பேசுகிறேன்' என்று அக்கினி ஆவேசமாக முழங்கினார். "மக்களின் வறுமையைப் பற்றி பிரச்னைகள் பற்றிப் பேசினால் அது கவிதையல்ல என்பது பிராமணீயம். மனத்தின் குரலாக கவிதை வெளிப்படுவதை நான் ஏற்கிறேன். ஆனால் மனத்தின் குரல் என்று சொல்லி படிமங்களுக்குள் கவிதையை மறைத்து வைப்பது பிராமணீயம்" என்று விளக்கினார் அக்கினி. பிராமணியத்தின் செல்வாக்கை எங்கும் எதிலும் கண்டுபிடித்து அக்கினி பேசுவதில் உண்மை இருக்கிறது. இதுபற்றி விரிவாகப் பேசுகிற அக்கினியை எழுதச்சொன்னால் எழுதுவதில்லை. கோப்பெருஞ்சோழன் மாதிரி இடமொதுக்கி வைத்துக் காத்திருக்கச் சொல்லுகிறார். ●

பழமலை என் இனிய நண்பர். எங்கு சென்றாலும் அவர் தான் வீட்டில் வளர்க்கும் குரோட்டன்சுகளை மனத்தில் தாங்கியவாறு செல்கிறார். எதற்காக குரோட்டன்சு வளர்க்கிறீர்கள் என்று ஒருமுறை நான் கேட்டபொழுது அவர் சொன்னார். 'பையன் நிறைய மதிப்பெண் வாங்கிப் பொறியியல் படிப்புக்குச் செல்வானென்று எதிர்பார்த்தேன். நடக்கவில்லை. ஆகவே குரோட்டன்சு வளர்க்கத் தொடங்கினேன். அருமையான பதில். ●

இச்சமயத்தில் தேவதேவனையும் தமிழ்ச்செல்வனையும் நினைத்துக் கொள்கிறேன். 'சில நேரங்களில் சில மனிதர்களில்' கல்யாணி–ரங்கன் விவாதத்தையும் நினைத்துக் கொள்கிறேன். தாகூருக்கும் காந்திக்கும் நடந்த விவாதமும் சிலர் நினைவுக்கு வரலாம்.

பெண்நிலை வாதம் பற்றி ஆவேசமாகப் பேசும் ஒருவரோடு சென்னையில் பேசிக்கொண்டிருந்தேன். குழந்தை வளர்ப்பில் தன்னைப் போலவே தன் கணவனுக்கும் சமபங்கு வேண்டும் என்று அவர் விவாதித்தார். இவர் விவாதத்தில் உள்ள கடுமை இவரிடம் மேலும் சில கேள்விகளைத் துருவிக் கேட்கவைத்தது. குழந்தை பெறுவது எதற்கு அவசியம்?

இல்லாவிட்டால் பெண்மை நிறைவடையாதா? ஒரு பெண்ணுக்குத் தாய்மை தேவை தானா, பாலுணர்வு என்ற இயல்பூக்கத்தைக் கணவனைக் கொண்டு தான் தீர்த்துக் கொள்ள வேண்டுமா, சமூகம் தொடர்ந்து நிலை பெற வேண்டும் என்று நீங்கள் நினைத்தால் உங்களுக்கு ஏன் இந்த அக்கறை? அவரிடம் பதில் இல்லை. இப்படி அவர் சிந்திக்கவில்லை. என்னிடமும் தான் பதில் இல்லை. தெரிந்தவர் சொல்லலாம். ●

எஸ்.என் நாகராசன் இம்முறையும் மின்னல்வேகத்தில் வந்து பேசி விவாதித்து விட்டுச் சென்றார். எவ்வளவு வற்புறுத்தினாலும் அவர் எழுதித் தருவதில்லை. மக்கள் அறிவியல் பற்றி நிறையப் பேசும்பொழுது பெண்ணிய அணுகுமுறையை மையப்படுத்திப் பேசுகிறார். உற்பத்திக் கருவிகளுக்கு முதன்மை தருவது ஆண்நிலைவாதம். உறவுகளுக்கு முதன்மை தருவது பெண்ணியல். இயற்கையை வெற்றிகொள்வது ஆண்நிலை. இயற்கையைப் போற்றுவது பெண்ணியம். நவீன அறிவியல் தொழில் நுட்பத்தைப் போற்றுவது ஆண்நிலை. மாற்று வாழ்க்கைமுறை தேடுவது பெண்ணியம். பெண்ணியம் அணுகுமுறைதான் இனி உலகில் அமைதியையும் சோசலிசத்தையும் கொண்டு வரும் என்கிறார். தமிழ் நாட்டில் வளர்ந்த பக்தி இயக்கத்தில், முக்கியமாக வைணவத்தில் பெண்ணியம் போக்கை முழு அளவில் காண்கிறார். இது பற்றி ஆராய்ச்சி செய்யாமலிருப்பதற்காக என்னையும் மற்றவர்களையும் சாடுகிறார். தேவைதான் இந்தச் சாடுதல். ●

ஈரோடு கருத்தரங்கில் எனது புத்தகத்தை மார்க்ஸ் திறனாய்வு செய்தார். நிதானமாக, நிரல்பட, முறையாக அவர் தன் கருத்துக்களைச் சொல்வதைக் கேட்பது ஒரு இனிய அனுபவம் எனது ஆய்வின் மையமாக 'அந்நியமாதலைக்' காண்கிறார் மார்க்ஸ். நான் இதை மறுக்கவில்லை. இக்கோட்பாடு 'அறிவியல் நோக்கில் கறாரானதல்ல' என்று கூறினார் மார்க்ஸ். கருத்தியலை முன்வைத்துப் பேசும் அமைப்பியல் அணுகுமுறையில் 'கறார்த்தன்மை' என் ஆய்வில் சில தவறுகளைக் களைந்திருக்கும் என்கிறார். அமைப்பியலின் அறிவியல் பற்றியும் கறார்த் தன்மை பற்றியும் எனக்கு நம்பிக்கையில்லை. அமைப்பியலோடு தொடர்ந்த விவாதத்தில் இருக்கிறேன். ஆயினும் என்னைக் கடந்து விமர்சனம் செல்வதை நான் பெரிதாக விரும்புகிறேன். 'உண்மைதான் நம்மைக் காப்பாற்றும்'. மார்க்ஸ் கட்டுரை கிடைத்தால் வெளியிடலாம். ●

தினமணி கட்டுரையில் அசோகமித்திரன் எழுதியிருந்ததற்கு நீல. பத்மநாபன் இப்பொழுது பதில் கொடுத்திருக்கிறார். பள்ளிகொண்டபுரம்

கையெழுத்துப் படிகளில் ராஜ குடும்பத்தைப் பற்றி நீல. பத்மநாபன் எழுதியிருந்த சில விவரங்கள் 'எழுத்து வடிவில் அவதூறு' என்ற குற்றச்சாட்டுக்கு உள்ளாகலாம் என்று இந்த நாவல் வெளியீட்டாளர் எழுதியபோது, பவ்வியமாக தேவையான மாற்றங்கள் செய்து கொடுத்தார் நீல. பத்மநாபன். இதைத் 'தேரோடும் வீதியில்' அவரே எழுதியிருக்கிறார். இவர்தான் இப்பொழுது அசோகமித்திரன் நாவலிலும் அதேவகை அவதூறுகளைக் கண்டுபிடித்திருக்கிறார். நிகழில் நான் எழுதிய விமரிசனத்தைப் படித்த நண்பரொருவர், 'தேரோடும் வீதியில்' என்னைப் பற்றியும் எழுதியிருப்பதால் தான் நான் திருப்பித் தாக்கியிருக்கிறேன் என்று எனக்கு எழுதினார். என் விமரிசன நோக்கை இவர் புரிந்து கொள்ளவில்லை. நீல. பத்மநாபன் இலக்கியமாகச் செய்யவில்லை என்பதுதான் என் கருத்து. ஒருவனைத் திருடன் என்று சாடி எழுதுவது இலக்கியமல்ல. அப்படி ஒருவன் ஆவதற்கான அவனது பின்னணி, வளர்ப்பு, அவன் மனதிற்குள் நடைபெறும் போராட்டங்கள் ஆகியவற்றோடு எழுதினால் அந்தத் திருடன்கூட நினைத்துப் பார்த்துத் தன்னை புரிந்து கொள்வான் இப்படி எழுதவில்லையென்றால் திருடன் உங்களைத் தேடி வருவான். உதைப்பதை நான் நியாயப்படுத்தவில்லை; யார் யாரோ நம் சமூகத்தில் வதைபடும் பொழுதெல்லாம் கவலைப்படாத எழுத்தாளர்கள் தம்மைப்போன்ற ஒருவர் அடிபடும்பொழுது வரிந்து கட்டிக்கொண்டு வருவது கும்பல் உணர்வைத் தான் காட்டுகிறது. இதில் வெளிப்படும் பரிவுணர்வு உண்மையானதல்ல. 'இலக்கிய உறவு' நிகழ்ச்சியில், 'உன் கட்டுரையின் முதல் பாராவைப் படித்துவிட்டு உட்கார்ந்துவிட வேண்டுமென்று' 'பார்த்திபன்' (மாலன்) அதிகாரம் செய்ததை நீல. பத்மநாபன் அமைதியாக ஏற்றுக் கொண்டார். அப்புறம் மனம் புழுங்கி எழுதுவது படிக்கும்போது வருத்தமாக இருக்கிறது. பார்த்திபனின் திமிர் வெறுக்கத்தக்கது. எழுத்தாளன் தன்மான உணர்வு இல்லாமலிருப்பது அருவருப்பாக இருக்கிறது. ●

அரசியல் இயக்கம் ஒன்றிலிருந்து வெளியேற்றப்பட்ட ஒரு பெரியவரைப் பற்றி அண்மையில் நான் கேள்விப்பட்ட செய்தி எனக்கு வருத்தம் அளிக்கிறது. அமைப்பின் உள்ளே நடைபெற்ற பிரச்னைகள் பற்றி நான் பேசவில்லை. நண்பர்கள் தெரிவித்த செய்திபற்றியே என் கவனம். இருபதாண்டுகளுக்கு முன் குடும்பத்தை விட்டு வெளியேறி இயக்கத்தோடு தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்ட ஒருவர் பாலுணர்வு வசப்பட்டு எளிமைப்பட்டது எப்படி என்பது எனக்குப் பிரச்சனை. இப்பிரச்னை வேறுபல வடிவங்களிலும் இயக்கத்தைப் பாதிக்கத்தான் செய்கிறது. இது

பற்றி மார்க்சிய நோக்கில் தெளிவு பெறுவதற்கு ஏதேனும் வழி இருக்கிறதா? இயக்கத்திற்குள் தோழமை உறவு போற்றப்படாமல், தம்மைத் தொடர்ந்து புதுப்பித்துக் கொள்ளும் சமூகச் . செயல்பாடுகள் சீர்குலைந்து இயக்கத்திற்குள் முடக்கம் ஏற்படுகிற போதும், புதியது தேடித் தொகுப்பில் அக்கறை இல்லாத போதும், முன்னர் வேண்டாமென ஒதுங்கிய பாலுணர்வு மெல்லப் போதும். முன்னர் வேண்டாமென ஒதுங்கிய பாலுணர்வு மெல்லப் புகுந்து உடம்பை இனிது என வசப்படுத்தி ஒருவரை நாசமாக்குகிறதா? களைந்து கொள்ளத் தக்கதா இந்த உணர்வு? பழையது போற்றும் நம் சமூகச் சூழல் இத்தகைய ஒருவரைப் பலி கொள்கிறதா? பெரிதாக விளம்பரப்படுத்தியும் அழகுபடுத்தியும் காமத்தை வலுவான ஒரு கருவியாக்கி முதலாளியம் நம்மை அடித்து வீழ்த்துகிறதா? மனித ஆளுமையைப் பக்குவப்படுத்தவும் வளர்க்கவும் காதல் பயன்படுவதில்லையா? இவைபற்றிய மார்க்சிய ஆய்வுகள் என்ன சொல்கின்றன? வில்ஹெம் ரெய்ச்சை பைத்தியகாரனாக்கியது அக்காலக் கட்சி. இனி அப்படி நேராது என்பதற்கும் உறுதியில்லை. அசுவகோஷ் எழுதிய ‘சிறகுகள் முளைத்து’ நாவலின் பின்னுரை பற்றி இப்போது நினைத்துக் கொள்கிறேன்.

வாழ்க்கை நாளுக்கு நாள் சிக்கலாகி வருகிறது. வாழ்க்கை ஆரோக்கியமானதாக நடைபெறுவதற்கு இடமில்லாமல் வாழ்க்கைக்கு அழகையும் அர்த்தத்தையும் ஆற்றலையும் தரும் எல்லா அம்சங்களும் அரசியல் முதலிய சக்திகளால் தொடர்ந்து முடக்கப்படுவது தெரிகிறது. நமக்கென மிஞ்சியிருப்பவை கைகால்கள், என்பதுகூட இன்று உண்மையில்லை. நம் கல்வி, நாம் பார்க்கும் தொழில், நாம் போற்றும் அறிவு, நாம் அனுபவிக்கும் கலைகள் நம் வளர்ப்புமுறை முதலிய பலவும் நாம் செய்வன போலத் தோன்றினாலும் ஆழ்ந்து சிந்திக்கும் பொழுது இவற்றின்மூலம் வேறுஅசுர சக்திகள் தமக்கான உருவில் நம்மை உருவாக்கிப் பயன்படுத்திக் கொள்வதாகப் புரிகிறது. இன்னொருவருக்காகவே நம் அறிவு. இன்னொருவர் அதிகாரத்திற்குட்பட்டது. நம் கல்வியும் தொழிலும் வாழ்க்கையும் சுதந்திரம் என்று சொல்லிக் கொள்வதற்கு நிலமில்லை. இனி எதைக்கொண்டு நம்மை மீட்டுக் கொள்ளப் போகிறோம். நாம் செய்ய வேண்டியது ‘நம்மை மீட்டுக் கொள்வதற்கான போராட்டம்’. நம்மைக் கொண்டுதான் நம்மை அடிமைப்படுத்துகிறார்கள். அடிமைப்படுத்துவதை நாம் அங்கீகரித்துக் கொண்டால் விடுதலைக்கு வழியில்லை. ஆகவே அடிமைப்படுத்தலை ஒப்புக் கொள்ளாததில்தான் நம் போராட்டம் தொடங்குகிறது. நம் உடலையும் நம் மனத்தையும் நம் உறவுகளையும் சுற்றுப் புறத்தையும் இயற்கையையும் நாம் நமக்கென மீட்டுக் கொள்ள

வேண்டும். இலக்கியம், கலை, கலாச்சாரம், அப்புறம் இயக்கம், அரசியல் என்பனவெல்லாம் மார்க்ஸ். இன்பத்திற்கு, பொழுதுபோக்கிற்கு, களியாட்டங்களுக்கு, தற்பெருமைக்கு, சதிக்கு, பதவிவெறிக்கு நாம் இடம் கொடுக்கும்போது நம்மை நாமே பலியிட்டுக் கொள்கிறோம். இவ்வளவு உயரம், இவ்வளவு எடை, இவ்வளவு ஆயுட்காலம், இத்தனை படிப்பு என்று மனிதனை அளவிட்டுக் குறுக்கி நாசப்படுத்தக் கூடாது. மனிதனை இயற்கைக்குள்ளும் வரலாற்றுக்குள்ளும், சமூகத்துக்குள்ளும் கண்டறிந்து தொகுத்து உயிர்ப்பிக்க வேண்டும். இதுதான் விடுதலைக்கான முன் முயற்சி. அப்புறம் இயற்கையிலும், சமூகத்திலும் வரலாற்றிலும் இவனை நீக்கமற நினைக்க முடியும். (மூச்சைப் பிடித்துக்கொண்டு ஞானி மாதிரி நான் பேசிவிட்டேன். மன்னியுங்கள். எனக்குள் இன்னொரு குரல் அஞ்ஞானம் அகலாதோ?!) ●

'சமுதாயம் பிரசுராலயம்' அழைப்பின் பேரில் கோவைக்கு வந்திருந்த திரு. பிரேமிள் அவர்களை சந்தித்து உரையாடினோம். அவரைப்பற்றி என் மனத்தில் ஏற்கனவே பதிந்திருந்த குரூரமான சித்திரத்திற்கும் இப்பொழுது சந்தித்துப் பழகிய அவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. எனக்கு இது ஒரு ஆறுதல். இளமைக்காலம் முதல் தன்னைப் பாதித்த அல்லது பழகிய மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிய அவரது சித்தரிப்புகளெல்லாம் அழகிய துல்லியமான சிறுகதைகள்; ஜே.ஜே.வில் தன்னைப்பற்றி சுந்தரராமசாமி எழுதியதற்கு எதிர்வினைதான் லங்காபுரி ராஜாவின் குறுநாவலில் வரும் 'பிரசன்னம்' என்கிறார். உடனே 'இதெல்லாம் விளையாட்டு' என்கிறார். நமக்குள் இருக்கும் கலைஞனை உயிர்ப்பித்துக் கொண்டால், வன்மத்தோடு அவர் எழுதியதாகத் தோன்றும் விமரிசனங்களும் கூட 'இவரது விளையாட்டுகள்' என்றே புரிந்து இரசிக்க முடியும். ஒருபுறம் எண் கணிதம், சோதிடம் பற்றிய ஆழ்ந்த ஆய்வும் மற்றொருபுறம் இலக்கியமும், விமர்சனமும், இன்னொருபுறம் ஜே.ஜே. வகையிலான 'ஆன்மீகமும்' இணைந்தும் முரண்பட்டும் இவரிடம் தன் முதன்மைக்காகப் போராடுவதுபோலத் தெரிகிறது. சற்றே எட்டிப் பார்க்கும்பொழுது இவரிடம் தென்படும் ஆழம், அச்சம் தரும் ஒரு இன்ப அனுபவம். ●

**- ஆகஸ்டு 1989**

# தமிழில் சிறுகதை : வரலாறும் வளர்ச்சியும்

முதுபெரும் எழுத்தர்ளர்களான சிட்டி அவர்களும் சிவபாத சுந்தரம் அவர்களும் எழுதிய இந்த நூலை வாசித்து முடிக்கும் போது ஒன்று தெரிகிறது. 1945–வரையிலான சிறுகதைகளில் இவர்கள் தோய்ந்து எழுதும் அளவுக்கு 45–க்குப் பிறகு வரும் சிறுகதைகளில் இவர்களுக்குத் தோய்வு இல்லை. வாழ்க்கை, கலை அனுபவங்களை எதிர்கொள்வதற்கான மனநெகிழ்வு ஏதோ ஒரு கட்டத்தில் குறைந்து, பிறகு அற்றுப் போய்விடுவது காரணமாக இருக்கலாம். 1925–க்கு முன்னரே தமிழில் வெளிவந்த பத்திரிகைகள், கதைத் தொகுதிகள் என இவர்கள் பலவற்றைக் கண்டு தொகுத்திருப்பதைப் படிக்கும்போது நமக்கு மலைப்பு ஏற்படுகிறது. இவர்களாவது இவற்றைப் பார்த்தார்களே என்ற மகிழ்ச்சியும், நமக்குக் கிடைக்கவில்லையே என்ற வருத்தமும் நமக்குள் எழுகிறது. மணிக்கொடிக்கு முந்திய பத்தாண்டுகளை இருண்ட காலம் என்று சிலர் குறிப்பிட்டதை இவர்கள் ஆதாரங்களுடன் மறுத்திருப்பது ஆறுதலாக இருக்கிறது, வ.வே.சு–வின் 'குளத்தங்கரை அரசமரம்', தாகூரின் ஒருகதைதான் என்பதை நிரூபிக்கின்றனர். பாரதியாரில் சில நல்ல சிறுகதை அம்சங்களைக் கண்டறிந்துள்ளனர். மாப்பசானிடமிருந்து சில கதைகளைப் புதுமைப்பித்தன்' எடுத்திருக்கிறார் என்பதைச் சில ஆய்வாளர்களின் ஆதாரத்தோடு எடுத்துச் சொல்லுகிறார்கள். கல்கி, இராஜாஜி, ஆனந்தவிகடன் – இவர்களின் இலக்கியத் தகுதி கடந்த இருபதாண்டுகளில் கேள்விக்குட்படுத்தப்பட்டதை இவர்கள் மாற்றி யிருக்கிறார்கள். புதுமைப்பித்தனின் பாரம்பரியம், கு.ப.ரா.வின் பாரம்பரியம் என 45க்குப் பின்னர் வந்தவர்களில் பலரை இவர்களும் கண்டு சொல்கின்றனர். நம் காலத்தில் அசோகமித்திரன் பாரம்பரியம் என்று சொல்லத்தக்க ஒருபோக்கு பரவலாகி வருவதை இவர்கள் காணவில்லை. ஈழத்திலும் மலேசியாவிலும் வளர்ந்த சிறுகதை இலக்கியம் பற்றி விரிவாக எழுதியிருப்பது இந்த நூலுக்கு ஒரு தனி அழகு.

சிறுகதையின் வடிவ அமைதிக்கே முதன்மை கொடுத்து இவர்கள் ஆராய்ந்திருப்பதை நாம் ஏற்க இயலவில்லை. மௌனி இவர்களின் அளவுகோலில் அடிபட்டுப் போகிறார். சமுதாயத்திற்கும் தனிமனிதனுக்கும் ஆன உறவுச் சிக்கலில் இவர்கள் தனிமனிதச் சார்புநிலை எடுத்துக் கொள்வதானாலும் சிலபழுதுகள் நேர்கின்றன. வ.ரா.வை ஒருசமயம் சமூகப் பிரச்னையின் சார்பிலும் இன்னொரு சமயம் தனிமனிதப் பிரச்னையின் சார்பிலும் பயன்படுத்திக் கொள்ளலாம் போலத் தோன்றுகிறது. செல்லப்பா

அவர்களைச் சிலசமயம் இவர்கள் சீண்டுகிறார்கள். எல்லா சிறு கதையாசிரியர்களையும் இவர்கள் முழுமையாக மதிப்பிடவில்லை. ஒரு சிலரின் அனைத்துச் சிறுகதைகளையும் பார்த்து மதிப்பிடும் இவர்கள், இன்னும் பலரின் தோற்றகாலச் சிறுகதைகளோடு நிறுத்திக் கொள்கின்றனர். சிறுகதையின் இலக்கணம் பற்றித் தமிழில் எழுதிய பலரின் கருத்துக்களை இவர்கள் கவனத்தோடு குறிப்பிடுகின்றனர். ஆனால் வடிவ அமைதியையும் கட்டறுத்துக் கொண்டு சிறந்த சிறுகதைகள் படைக்கப்பட்டிருப்பதை இவர்கள் பிரச்னையாக்கவில்லை. இலக்கியம் அல்லது கலை என்று வரும்போது இவற்றுக்குள் வரலாறு என எதைக் கொண்டு நிர்ணயிப்பது, வளர்ச்சி என எதைக் கொண்டு நிர்ணயிப்பது, வளர்ச்சி என எதைச் சொல்வது என்பது தீராத சிக்கல். தமிழ்ச் சிறுகதைகளில் தொடர்ச்சியான வரலாறு அல்லது வளர்ச்சி எனக் காண்பது அல்லது தேடுவது சரியான ஆய்வாகத் தோன்றவில்லை. இவர்கள் இப்படி ஒன்றை நிரூபித்திருப்பதாகவும் சொல்ல இயலவில்லை. தவிர இலக்கிய ஆய்வு என்பது இறுதியில் விவரத்தொகுப்பு பிரச்னையல்ல. விவரத் தொகுப்பைக் கடந்து, இவற்றின் வழியே நமக்குள் இயங்கும் வரலாற்றையும், சமூகத்தையும் கலையையும் கண்டு செரித்து இவற்றின் மூலம் நமக்கான வாழ்வுக்கு அர்த்தம் கண்டு வாழ்வை உயிர்ப்பித்துக் கொள்வது என்பதுதான் பிரச்னை. இதற்காகத்தான் இலக்கிய ஆய்வு. இதை இவர்கள் செய்யவில்லை.

தமிழ்ச் சிறுகதைகளின் வரலாறு பற்றிய விரிவான முதற் பெரும்நூல் இது. இந்த முயற்சியில் பல்லாண்டுகள் அக்கறையோடு ஈடுபட்ட சிட்டி அவர்களும் சிவபாதசுந்தரம் அவர்களும், இந்நூலை வெளியிட்ட கிரியா நிறுவனத்தாரும் நம் மரியாதைக்குரியவர்கள். ●

# நிகழ் - 12

ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன்பு நண்பர் ராதாவுடன் அவரது நண்பர் நாகராசனைத் தேடிச் சென்றோம். சாராயக் கடையில் அவரைக் கண்டுபிடித்து பின்பு அவரோடு அவர் வேலை செய்யும் தொழிற்கூடத்திற்கு வந்து சேர்ந்தோம். அநேகமாக எந்நேரமும் 'தண்ணி'யில் மிதந்தபடி தீப்பிழம்பில் கண்ணாடிக் குழாயை ஊதிக்கொண்டே அவர் கைவிரல்கள்பட்டு மயிலும் மானும் உருவாகிய திறத்தைக் கண்டு வியந்து நின்றோம். பின்னர் மணல்மேட்டில் அமர்ந்தபடி அவரோடு பேசிக் கொண்டிருந்தோம். எந்த அறிஞர் பேரவையிலும் மின்னலைப் பாயவிடும் அறிவுக்கூர்மை இவரது பேச்சில் அலைகளென மோதியது. இராமாயணம் பற்றிப் பேச்சு வந்தபோது ஆவேசத்தோடு அவர் சொன்னார். 'நாங்கள் தொழிலாளிகள். அவதூறு சொல்லிச் சீதையை காட்டுக்கு அனுப்பும் இழிசெயலை நாங்கள் தூண்டமாட்டோம். இலக்கிய மேதைகள் இப்படி எழுதி வைத்துள்ளதை நாங்கள் ஏற்கமாட்டோம்'. அன்று அவரோடு பேசியதில் அவர் கூறிய இன்னொன்றும் என் நினைவில் இருக்கிறது. நாம் எதிர்பார்த்தே இராத ஒரு கோணத்திலிருந்து 'கற்றது கைம்மண்ணளவு' என்ற கூற்றை விளக்கினார். "உண்மைதான். கையளவு மண்ணில் அடங்கியுள்ளது கோடிக்கணக்கான மண்துகள்கள். இப்படிச் சொல்பவரைக் குறைத்து எண்ணிவிடக் கூடாது. நாகராசன் என்ற பெயர் கொண்டவர்கள் இப்படித்தான் இருப்பார்களோ என்று அச்சமாக இருக்கிறது. அப்புறம் அவர் என்ன ஆனாரோ தெரியவில்லை. அறிவாற்றல் மிக்க இந்தத் தொழிலாளியை என்னால் என்றும் மறக்க இயலாது. ●

பெரியாரியம் மார்க்சியம் ஆகிய இருவட்டாரத்திலும் பலராலும் அறியப்பட்டவர் கரூர் பி.ஆர்.குப்புசாமி அவர்கள். தோழர் ஜீவா அவர்களுடன் பல்லாண்டுகள் நெருங்கிப் பழகியவர். ஜீவா பற்றிய அவர் நினைவுகளை ஒரு பேட்டி என்ற முறையில் நண்பர் இரணியன் பதிவு செய்த நாடாக்களை அண்மையில் கேட்க நேர்ந்தது. பகுத்தறிவு இயக்கத்திலிருந்து மார்க்சியத்திற்கு வந்தவர் ஜீவா. தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் தேசீய உணர்வு ஆகியவற்றில் இறுதிவரை ஊறித் திளைத்தவர். பல்லாயிரம் தோழர்களின் அன்பையும் மரியாதையையும் பெற்றவர், இக்காரணங்களால், கட்சிக்குள் ஆதிக்கம் வகித்த பார்ப்பனத் தலைமையினால் ஜீவா அமுக்கப்பட்டார். கொடுமைக்கும் அவதூறுகளுக்குள்ளும் உள்ளானார். அவர் நினைவை நிரந்தரப்படுத்துவதற்குரிய நினைவுச்சின்னம் ஒன்றை அமைப்பதற்கு கட்சித் தலைமை உடன்படவில்லை. திராவிட இயக்கம் மக்கள்

மத்தியில் பெற்றுள்ள செல்வாக்கைத் தகர்ப்பதற்காகவும் அரசு அதிகாரத்தில் பங்கு பெறுவதற்காகவும் தமிழ்த் தேசிய உணர்வை அழிக்கும் போக்கில் கட்சித் தலைமை தீவிரம் கொண்டதன் ஒரு விளைவு, ஜீவாவுக்கு நேர்ந்த கதி. கட்சியையும், மார்க்சியத்தையும் இவற்றின் மூலம் மக்கள் வாழ்க்கையையும் நாசமாக்கியவர்களை நாம் புரிந்து கொள்கிறோம். பதிவு நாடாக்களிலுள்ள விவரங்கள் சிறு நூலாகத் தொகுக்கப்பட்டு வரவேண்டும். நம்மை மீட்டுக்கொள்ள இதுவும் உதவும். ●

ஈரோட்டில் 'பார்வை' நண்பர்களால் நடத்தப்பட்ட திராவிட இயக்கம் பற்றிய கருத்தரங்கில் விவாதிக்கப்பட்டவற்றில் இரண்டு கருத்துக்கள் என் நினைவில் முன்நிற்கின்றன. ஒன்று தமிழ்த் தேசியம்தான் திராவிட இயக்கத்தின் மையம்; இதைப் பின்னுக்குத் தள்ளிவைத்துவிட்டு கடவுள் எதிர்ப்பையும், மத எதிர்ப்பையும் சில சக்திகள் முன்னுக்குக் கொண்டு வந்ததன் விளைவாக தமிழ்நாட்டில் தமிழ்த்தேசிய உணர்வு மங்கியது. இப்படிச் சென்றது குணா அவர்களது கட்டுரை. இன்னொன்று; இட ஒதுக்கல் தேவைதான் என்பதில் மறுப்பில்லை. ஆனால் இட ஒதுக்கலால் சாதி ஒழியாது. வேலை இல்லாப் பிரச்னை தீர்ந்துவிடாது. மையத்தில் செல்வம் குவிகிறது. அதிகாரமும் ஒரு மையத்தில் குவிகிறது, இந்த மையங்களைத் தகர்ப்பதுதான் விடுதலைக்கு வழி. இப்படி விவாதித்தார் சேலம் துரைசாமி அவர்கள். சிந்தனை ரீதியாகப் பெறும் விடுதலையில் செயலுக்கு நேர்வழி கிடைக்கும். ●

திருச்சியில் நடைபெற்ற பாதல் சர்க்கார் நாடக விழாவில் பார்க்க நேர்ந்த ஆறு நாடகங்களில் நிச்சயமாக ஐந்து நாடகங்கள் நம்மோடு பல மாதங்கள் கூடவரும். நமக்குள் புகுந்து நம் வாழ்க்கையைக் கிளறி நம் நிம்மதியைக் குலைத்து வாழ்வியல் பிரச்னைகளை நமக்குள் தீவிரமாக எழுப்பும் முறையில் சில நாடகங்கள் நம்மை வெற்றி கொள்கின்றன. தொலைத்துவிட்ட என் வீடெங்கே? செல்லும் திசை எங்கே? நான் எங்கே? என்று 'ஊர்வலங்கள்' நாடகத்தில் ஓயாது ஒலிக்கும் உரத்த குரல் நம் குரலாகிறது. மனிதன் இரத்தம் உறைந்துவிட்டது, உறைந்து விட்டது என்று 'போமா' நாடகத்தில் ஒங்கிஒலிக்கும் குரலில் நாம் அதிர்வை அடைகிறோம். 'போமா' என்றால் காடு, பூமி, மக்கள், போமாவை அழித்துவிட்டார்கள். இதுதான் சூழல். இந்தச் சூழலில் மனித இரத்தம், நம் இரத்தமும் தான். உறைந்திருக்கிறது. இரத்தம் உறைந்த நிலையில் நம் வாழ்க்கை என் ஆகியிருக்கிறது! 'ஸ்பார்டகஸ், நீ எங்கிருக்கிறாய்' என்று நம்மைச் சுற்றி ஒவ்வொரு திசையிலும் மாறிமாறி ஒங்கிஒலிக்கும் குரலுக்கும் பதில்,

மையத்திலிருந்து வருகிறது. நான் எங்குமிருக்கிறேன். எல்லாக் காலத்திலுமிருக்கிறேன். இரண்டுமுறை மூன்றுமுறை, கேள்வியும் பதிலும். இந்தக் குரலோடு கலந்து வரலாற்றிற்குள் நாம் கரைந்து விடுகிறோம். இப்பொழுது ஸ்பார்டகஸ் எங்கிருக்கிறான்? நமக்குள் இருக்கிறானா இருந்தால் அவனை உங்களுக்குள்ளிருந்து விடுதலை செய்யுங்கள்.

காலமெல்லாம் ஒரே வளையத்திற்குள் சுற்றிச் சுற்றி வருவதற்கென வாழ்க்கை இங்கே தேவைதானா? வேறு எப்படித்தான் நம் வாழ்க்கை இருக்கிறது. பள்ளியில், அலுவலகத்திற்குள், குடும்பத்திற்குள் இப்படி எல்லா நிறுவனங்களுக்குள்ளும் நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம். பிறகொரு இந்திரஜித் மூலம் வாழ்க்கையின் அபத்தம் நம்மை முகத்தில் அறைகிறது.

நாடகங்களைப் பார்த்து ரசித்தாயிற்று. உயர் அளவில் இயங்கும் கலை நம்மைத் தகர்த்துத் தூளாக்குவது உண்மைதான் இனி என்ன செய்வது இந்த வாழ்க்கையை!

பாதல் சர்க்கார் நாடகவிழாவில் படிக்கப்பட்ட கட்டுரைகள் தீவிரமாக விவாதிக்கப்பட்டபோது மதுரையிலிருந்து வந்த நண்பர் ஒருவர், வீதி நாடகமென்பதை இப்படிப் புரிந்து கொள்ளலாமா என்று கேட்டு ஓர் உதாரணம் கூறினார். செப்டம்பரில் நடந்த 'பந்த்' தின்போது மதுரை மேம்பாலத்தில் சைக்கிளில் வந்து கொண்டிருந்த ஒரு சிறுவனை ஒரு காவலர் எட்டி உதைத்தாராம். சைக்கிளோடு விழுந்த சிறுவன் நடுச்சாலையில் புரண்டபடியே போலீஸ் அராஜகம் ஒழிக! அடக்குமுறை ஒழிக' என்று விடாமல் கத்திக் கொண்டிருந்தானாம். சட்டக்கல்லூரி மாணவர்கள் உட்பட அங்கு பெருங்கூட்டம் கூடிவிட்டது. கூட்டத்தினரின் கேள்வியில், காவலர் திணறினாராம். பையன் எவ்வளவு சொல்லியும் தரையிலிருந்து எழவுமில்லை; முழக்கத்தை நிறுத்தவுமில்லை. அப்புறம், பெரிய அதிகாரிகள் வந்து பலபடியாக 'சமாதானம்' சொன்னபிறகு பையன் எழுந்தானாம். இலக்கணம் எப்படியோ! வீதியில் நடக்கும், நடக்க வேண்டிய நிஜ நாடகம், இது. ●

## நண்பர் ஜெயமோகன் எழுதிய ஒரு கடிதத்திலிருந்து . . .

"Maniya என்று ஒரு திரைப்படம் சமீபத்தில் பார்த்தேன். ஒரு கம்ப்யூட்டர் எஞ்சினீயரான பெண் தன் மகளுடன் பூங்காவுக்குப் போகிறாள் தனிமையில் அங்கிருக்கையில் குழந்தைகளுக்கு தோட்டக்காரன்.

இயற்கையின் வல்லமை / மரங்களின் வாழ்வு பற்றிக் கதை சொல்வதைக் கேட்கிறாள். கொஞ்சம் கொஞ்சமாய் அவள் மனநிலை மாறுபடுகிறது. நகரவாழ்வில் உள்ளூர அழுத்தி, ஒடுக்கப்பட்டுக் கிடந்த காடு விழித்துக் கொள்கிறது. கடைசியில் அசல் காட்டு மிருகம் போல மாறிவிட்ட அவளையும், அவளால் மிருக அம்சங்கள் விழிப்புற்று வெறிகொண்ட குழந்தைகளையும், போலீஸ் மீட்கிறது. உலுக்கிவிட்டது இந்தப் படம். உள்ளூர உறங்கும் காடு மிகவலுவானது என்று எனக்கு எப்போதுமே தோன்றி வந்திருக்கிறது. பழைய கலாச்சாரத்தில் இதற்கு சில வடிகால்கள் உண்டு. நவீனவாழ்வு அவற்றைப் புதைத்து மேலே மேலே கண்ணாடி கோபுரங்களை எழுப்பியபடி போகிறது. வெளிநாட்டினரிடையே பெருகிவரும் முரட்டுத்தனமான வாழ்விற்கும், இயற்கைக்குமான தாகம் இதைத்தான் காட்டுகிறது. நாம் கட்டி எழுப்பிக் கொண்டிருப்பது மிகப் போலியான ஒரு கலாச்சாரம் என்று தோன்றுகிறது.

மலையிலிருந்து ரொம்ப தூரம்
எங்கள் வீடு
நதியிலிருந்து ரொம்பதூரம் எங்கள்வீடு
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
வீடு விலக விலக
உறங்கிக் கிடக்கிறது காடு
கனவும் நனவுமாய் வெளிப்பட . . . (விக்ரமாதித்யன்)

என்ற கவிதையை நினைத்துக் கொண்டேன். சமீபத்தில் கண்ட நல்ல படங்களில் ஒன்று இது".

## நண்பர் அக்னிபுத்திரன் ஒரு கடிதத்தில் எழுதுகிறார்

கூத்துப் பட்டறையின் அண்மைக்கால நிகழ்வுகளில் நிரபராதிகளின் காலம் குறிப்பிட்ட சூழலில் வெளிவருவதும்கூட ஒரு சமூகத் தேவையாகிறது. அரசு தனது 'தர்மத்தை' மக்கள் தர்மமாக மாற்றும் உத்தியைக் கையாண்டு வருகிறது. தனது வன்முறைப் பண்பாட்டை மக்கள் பண்பாடாக மாற்றுவதில் எப்படிக் குரூரமான வெற்றியைப் பெறுகிறது என்பதை இந்த நாடகம் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. நாடுகள் வேறு வேறாயினும் முதலாளித்துவ அரசுகளின் நடைமுறை தர்மம் ஒன்றே என்பதை இந்த நாடகமும் அறிவுறுத்தத் தவறவில்லை. பேராசிரியர் பாத்திரமும், எஞ்சினீயர் பாத்திரமும் சிறப்பாக உள்ளன. லாரி டிரைவர் விவசாயி பாத்திரங்களும் மனதில் நிற்கக் காரணம் அவரவர்களின் மொழிப்பாடுகள் தாம் என்பது

முக்கியம். மூல நாடகத்தில் கான்சல் என்பதை 'பேராசிரியர்' என்று மாற்றக் காரணம் என்னவெனப் புரியவில்லை. ஏனெனில் 'விதுரன்' போலச் செயல்படும் இந்தப் பாத்திரம்தான் 'ஒரு கொலை – ஒரு தற்கொலை' மூலம் நாடகத்தை இரண்டு முறையும் ஒரு முடிவுக்கு வரக் காரணமான பாத்திரமாகும். அரசின் உள்ளடக்கத்தை அவ்வப்போது மக்களுக்குப் புரிய வைக்கிற பாத்திரம். அதேநேரத்தில் மக்களின் மனசாட்சியாகவும் மாறும்படி படைக்கப்பட்டுள்ளது. முதலில் சாசோனைக் கொல்வதன் மூலம், 'நிரபராதிகளை'யும் காப்பாற்றுகிறான்; இரண்டாவது தடவை, விவசாயியைக் காப்பாற்றத் தற்கொலை புரிந்து கொள்கிறான். அவையினரை மாற்றி அமர வைத்த உத்தி அசத்திவிட்டது. 'அரசு' மாறி, அரசாங்கமும் மாறியதும் புதிய சூழல். ஆனால் பழைய உள்ளடக்கம் என்பதை சூசகமாக உணர்த்தியது.

நண்பர் ரவி சீனிவாஸின் கடிதத்திலிருந்து . . . .

இந்திய சமூகத்தில் குற்றவாளிகள்கூட புனிதர்களாக மாறுவது, அவர்கள் மதிக்கப்படுவது நடந்திராத ஒன்றல்ல. அருணகிரிநாதர், திருமங்கை ஆழ்வார். வால்மீகி, அதுபோல் முற்றும் துறந்த முனிவர்கள் தங்களை மறந்து காமவலையில் வீழ்ந்ததும் புதிதல்ல. இவற்றுக்காக இவர்களைத் தூக்கி எறியவில்லை. தவறை நியாயப்படுத்தவும் இல்லை. மாறாக முனிவர்கள்கூடத் தடுமாறக்கூடும் என்பதைக் காட்டுகின்றன. விசுவாமித்திரர் மேனகையிடம் மயங்கியது பெருங்குற்றமாகக் கொள்ளப்பட்டும் அவரது தவத்தன்மை முற்றிலுமாக மறுக்கப்படவில்லை. புராணங்கள், இலக்கியங்கள் நமக்குக் காட்டுவது தவறு செய்தவன் திருந்தக்கூடும். மகானாக மாறலாம், தண்டிக்கப்படலாம் என்பதையே. மரபு பற்றிய பார்வை இருந்தால் இது இவ்வளவு பெரிய பிரச்னையாகத் தோன்றியிராது. இந்த மரபில் புதிய ஜெனேக்கள் என்று யாரும் இல்லை. அருணகிரிநாதரின் வாழ்வு, அவரது இளமைக் காலத்தையும் உள்ளடக்கியே பேசப்படுகிறது. புறக்கணித்து அல்ல. இதுதான் மரபிற்கும் வறட்டுத்தனமான பார்வை கொண்ட குழுக்களுக்கும் இடையே உள்ள மனிதர்கள் குறித்த பார்வை வேறுபாடு. மார்க்சியத்தில் மனித ஆளுமை குறித்து உளவியல் ரீதியான போதுமான கருத்தாக்கங்கள் இல்லை.

**நண்பர் எஸ்.பி. தங்கவேலு (டெல்லி) எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி . . .**

உளவியல் படித்த நண்பர் ஒருவர் இங்கு வந்துள்ளார். Conditioning

Psychology –ஐ ஜப்பானியர்கள் எப்படி உபயோகித்துள்ளனர் என சில தகவல்கள் தந்தார். சமீபத்தில் ஜப்பானியர் மீன்சாகுபடியை, மீன்பண்ணைகளில் செய்து வந்தனர். ஆனால் ஆய்வின்போது கடலில் வளரும் மீனுக்கும் பண்ணையில் வளரும் மீனுக்கும் சுவையில் மாறுதல் இருந்தது. கடலில் வளரும் மீனின் சுவை பண்ணையில் வளரும் மீனில் இல்லை. இதன் பின்னர் பண்ணையில் வளரும் மீன்களுக்கு உணவு அளிக்கும்போது ஒரு குறிப்பிட்ட மின் அலைகளை தண்ணீரில் கலந்தார்கள். இவ்வாறு தொடர்ந்து செய்ததில் மீன்கள் உணவையும் மின் அலைகளையும் தொடர்புபடுத்திக் கொண்டன. இவ்வாறு ஒரு குறிப்பிட்ட காலம் சென்ற பின்னர் இம்மீன்களைக் கடலில் விட்டுவிட்டனர். அடிக்கடி கடலிலும் இவ்வலைகளைப் பரப்பி உணவு அளித்து வந்தனர். இதன்மூலம் மின்அலை – உணவுத் தொடர்பு புதுப்பிக்கப்பட்டு வந்தது. மீன்கள் கடலில் அலைந்து இரைதேடிக் கொள்வதுடன் மின்அலையை உணரும் போதெல்லாம் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கிடைக்கும் உணவைச் சாப்பிட்டன. மீன்கள் நன்றாக வளர்ந்த பின்னர் இதே மின் அலையை மீண்டும் தண்ணீரில் கலந்தால் எல்லா மீன்களும் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வரும்போது பிடித்துவிட்டனர். எனவே பிடிக்கும் செலவும் குறைகிறது. மீனும் சுவையாக இருக்கிறது.

அண்மையில் கேரளாவில் இருந்து ஒரு நண்பர் வந்திருந்தார். கையில் 'மாத்ரு பூமி' வார இதழ். பேச்சைவிட இதழிலே கவனம் இருந்தது. 'சயின்ஸ் ரிப்போர்ட்டரில்' முன்பு பணி புரிந்த இராதாகிருஷ்ணன் எழுதிய கதை; முழுக்க முழுக்க போலி நெருக்கடி நிலைக் காலத்தை ஒட்டியது. ஓரளவு அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றவர்கள் தலைநகரில் நடந்த அந்தக் கதையை, கதாபாத்திரங்களை உடனே புரிந்து கொள்வர். வேறுபட்ட உத்திகள்மூலம், ஓர் இதழாசிரியர் கதையை நடத்திச் செல்கிறார். கடந்த கால தவறுகளிலிருந்து எப்படிப் பாடம் பெற்றுக் கொள்வது? என்பதே கதையின் சாரம். தமிழில் சமகால வரலாறு எப்போது வருமோ?

- நவம்பர் 1989

# நிகழ் - 14

1. நண்பர் விளவை ராமசாமியின் மார்க்சிய ஈடுபாட்டைக் குறை சொல்ல முடியாது. சில மாதங்களுக்கு முன்பு அவரது ஜாதகத்தைப் பார்த்த சோதிடர் கூறிய விவரங்கள் நண்பரைக் கடும் திகைப்புக்கு ஆளாக்கின. இராமசாமி கேட்கிறார் : "என்னைப்பற்றிய இவ்வளவு விவரங்கள் சோதிடர் எப்படிக் கூறமுடியும்? சமூகச் சூழல், பொருளாதாரம்தான் எல்லாவற்றையும் நிர்ணயிக்கிறது என்ற நம் மார்க்சீயத்தை சோதிடம் குறுக்கும் நெடுக்குமாகப் பிளந்து விடுகிறது; என்ன செய்வது?" என்று விடாப்பிடியாக கேட்கிறார். நண்பர்களின் சில அனுபவங்களும் கூடியவரை இதேபோல உள்ளன. தி.க. மாதிரி இவற்றை ஒதுக்கிக் கேவலப்படுத்த இயலாது. நமக்கென நாம் தொகுத்துக் கொண்ட அறிவியல், மார்க்சீயம் இயங்கும் தளமும், திசையும் வேறு. நம் மரபில் வந்த கைரேகை, சோதிடம் இயங்கும் தளமும் திசையும் வேறு. இரண்டையும் இப்பொழுதைக்கு குழப்ப வேண்டாம். எவ்வளவு சொன்னாலும் நண்பரின் திகைப்பு நீங்குவதாக இல்லை. ●

2. 'உங்களுக்கு உண்ணத் தெரியாது, உறங்கத் தெரியாது, நீர் பருகத் தெரியாது, உட்காரத் தெரியாது' என்று ஆவேசமாக முழங்கினார், டாக்டர் சுப்பிரமணியம். மார்ச் தொடக்கத்தில் மக்கள் அறிவியல் இயக்கத்தின் சார்பில் நடைபெற்ற கருத்தரங்கில் இவர் இப்படி பேசினார். மருதமலையில் இயற்கை மருத்துவமனை நடத்துபவர் இவர். நான்கு அடிக்கு ஒன்று வீதம் பப்பாளி மரம் வளர்க்க முடியும். நம் உணவிற்கு இது போதும். வீட்டைச் சுற்றிலும் பப்பாளி பயிரிட வேண்டும். உணவு, நோய், உலகப் போர் போன்ற பிரச்சனைகள் இதனால் தீரும்' என்றார். பட்டினி போட்டும் பழங்களைக் கொடுத்தும் கடுமையான நோய்களைத் தான் தீர்ப்பதாகச் சொல்கிறார். இரத்தபுற்றுநோய் உட்பட பல தீர்க்க இயலாததெனச் சொல்லப்படும் நோய்களைத் தீர்த்ததற்கான மருத்துவக் குறிப்புகள் உட்பட அனைத்தையும் நீங்கள் பார்வையிடலாம் என்கிறார். ஆய்வுத் திறமுடையவர். அணுகிப் பார்க்க வேண்டும். இயற்கை மருத்துவம் மட்டுமல்லாமல் பழங்களை மட்டும் உண்டு எளிய வாழ்க்கை நடத்தும் வாழ்வு முறை ஒன்றும் தமிழகத்தில் பலரால் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. இவர்களின் தீவிர நிலைபாடு நமக்கு மருட்கை தருகிறது. இன்றைய உலகநிலையில் இத்தகைய வாழ்வியல் சோதனைகள் வரவேற்கத்தக்கவை – சுற்றுச்சூழல் பிரச்சனை, அலோபதி மருத்துவம் இவையெல்லாம் நமக்கு ஏற்படுத்தும் பாதிப்புகளுக்கு எதிர்நிலையில் இயங்க வேண்டுவதன் தேவைபற்றி இப்பொழுது நாம் அதிகம் சிந்திக்கிறோம்.

3. என் இளமைக்காலத்து கிராமத்து மனிதர்களில் ஒரு பெரியவர் முகம் அடிக்கடி எனக்குள் தென்படுகிறது. ஊரின் தெற்குப் பகுதியில் இருந்த கருப்பராயன் கோவில் பூசாரியாகவும் உழவராகவும் இருந்த பெரியவர். ஊரின் கிழக்குப் பகுதியில் இன்றும் என் நினைவில் வரிசையாக உயர்ந்து நிற்கும் தென்னை மரங்களோடு அவரது தோட்டம், கிணறு வெட்ட உள் இறங்கிய அவரது மகன், மண்மேடு சரிந்து இறந்தார். மகனது நெடிதுயர்ந்த சிவந்த மேனியும், அழகான குடுமியும் மறக்கக்கூடியன அல்ல. அண்மையில் திருமணமான மகன். இன்னும் குழந்தைப் பேறு இல்லை. பெரியவர் மேற்கொண்ட சபதம் கருப்பராயனை நோக்கி "உனக்கு இனி பூசை இல்லை, எனக்கு அவன் ஒரே மகன், எனக்குப் பின் அவன்தான் உனக்குப் பூசை செய்ய வேண்டும். அவனைக் கொன்று விட்டாய்" – தம் குலதெய்வத்திற்கு பூசை செய்ய வேண்டிய அவரை எத்தனையோ முறை ஊர்க்காரர்கள் கேட்டனர். அவர் உறுதியாக மறுத்து விட்டார். பனிரெண்டாண்டுகள் கழித்து அவர் இறந்த பிறகு ஊர்க்காரர்கள் அவரது உறவினர்களில் ஒருவரை பூசாரியாக நியமித்தனர். இடைக்காலத்தில் சுற்றிலும் அடர்ந்திருந்த அச்சம் தரும் மரங்கள். முனீஸ்வரன் பேருருவம், சுற்றிலும் குதிரை வரிசைகளாக. எல்லாப் பெருமைகளும் அற்றுப் போன எளிய கோவில். மீண்டும் கோவிலில் வழிபாடு தொடங்கியது.

இந்தப் பெரியவரைப் புரிந்து கொள்ள எனக்கு நாற்பது ஆண்டுகள் தேவைப்பட்டன. கடுமையான உழைப்பும் தன்மானமும் இவரது ஆளுமையை உருவாக்கின. 'நான் உழைக்கிறேன். எனக்கு கடவுள் அருள்புரிய வேண்டும். கெஞ்சுவது என் குணம் அல்ல – இத்தகையது பெரியவர் ஆளுமை. என்னை மதிக்காத கடவுள் எனக்கு வேண்டாம். மதுராபதி தெய்வம் கண்ணகியின் பின் சென்று இழந்த கதை நினைவுக்கு வருகிறது. கோயில் வழிபாட்டுக்குச் செல்லாமல் 'பீடு அன்று' என்று இருந்தவள் கண்ணகி. நம் மரபுக்குள் இத்தகைய வளம் இருப்பதை பெரியவர் மூலம் புரிந்து கொண்டேன். மனிதர்க்குள்ளிருந்து தான் தெய்வங்கள். சமணம், பௌத்தம் இரண்டிற்குள்ளும் இழையோடிய இந்தப் போக்கு நம் ஆதிமரபு. ●

4. நண்பர் தீபானந்தா கொண்டுவந்த உண்மைக் கதைகள் இரண்டு. காவல் துறையில் பணியாற்றிய ஒருவரின் துப்பாக்கியிலிருந்து ரவைகளை, விளையாட்டுக்காக நண்பர்கள் அகற்றி மறைத்து வைத்தனர். ரவை காணாத நிலையில் அவர் அதிர்ச்சியுற்று அஞ்சி ஒடி வீட்டுக்குள் தாளிட்டுக் கொண்டார். பல நாள் வெளிவரவில்லை. அதிகாரிகள் வந்து கதவைத் தட்டி ஆறுதல் மொழிகள் கூறி அழைத்துச் சென்றனர். திரும்பவும் அஞ்சிஒடித் தன் மனைவியையும் கல்லூரியில் படித்த மகனையும் இழுத்து

வீட்டில் பூட்டிக்கொண்டார். பல நாள், மாதங்கள் சென்றன. ஜன்னல் வழியாக அண்டை வீட்டாரிடம் அந்த அம்மா உணவும் பிறவும் பெற்று உயிர் வாழ்ந்தனர். ஒருநாள் அப்பா உறங்கிய நிலையில் சாவியை எடுத்து கதவைத் திறந்த மகன் ஓடி எதிரில் உள்ள கிணற்றில் விழுந்து உயிரை விட்டான். இப்பொழுது அந்த அம்மா பஞ்சையாய் பரதேசியாய் உறவினர் வீட்டில் ஒருவேளை உண்டு வாழ்கிறாள். இவர் நெற்றி நிறைய திருநீரு பூசிக்கொண்டு ஊர்கள் தோறும் அலைந்து தெரிந்தவர் வீட்டில் ஒருவேளை உண்டு மறுவேளை உணவை மறுத்து திரிகிறார். இன்னொருவர் கதை:

வீட்டைப்பூட்டி ஐம்பது அடி செல்வதற்குள் ஐந்து முறை வந்து சரியாக பூட்டப்பட்டிருக்கிறதா என்று பூட்டை இழுத்துப் பார்த்து விட்டு அலுவலகம் செல்லும் ஒருவர். இந்த சந்தேகம் எல்லை மீறி அப்புறம் வீட்டைப்பூட்டி சாவியை இறுகப்பிடித்துக் கொண்டு கதவுக்கு முன்னாலேயே உட்கார்ந்துவிட்டாராம். இந்தக் கதைகளில் உள்ள சோகம் மனத்தைச் சுண்டி இழுக்கிறது. இவை இருவர் பிரச்னை மட்டுமா? இன்று எத்தனையோபேர் இப்படித்தான் தம் சாவியை தம்மை இழந்துவிட்டு, இனித் திறக்க முடியாத வீட்டோடு மனத்தோடு வாழ்க்கையோடு திரிகிறார்கள். சாவியை வேறு யாரோ பறித்து வைத்திருக்கிறார்கள். நம் சமூகச் சூழலின் கொடுமைகள் குரூரமானவை. நீங்களும் நானும் எந்தப் பூட்டுக்கடியில் உட்கார்ந்திருக்கிறோம்? ●

5. நீதிக் கட்சியைத் தோற்றுவித்த முதல்வர்களில் ஒருவரான தியாகராயர் பற்றிய முனைவர் பட்டத்திற்கான ஆய்வு ஒன்றை அண்மையில் படித்தேன். எழுதியவர் பேராசிரியர் சரசு அவர்கள் (பேரூர் தமிழ்க் கல்லூரி). இந்த ஆய்வுக்குத் தேவையான அனைத்து விவரங்களையும் தொகுப்பதற்கும் சரிபார்ப்பதற்கும் சென்னையிலும் ஆந்திராவிலும், தியாகராயர் பற்றித் தெரிந்தவர், அவர் தொடர்பு கொண்டிருந்த அமைப்புகளில் இருந்தவர், அவர்கள் வழியினர் எனத் தேடி அலைந்திருக்கிறார். கல்கத்தா, டெல்லி நூலகங்களில், அப்புறம் லண்டன், பாரிசு நூலகங்களில் விவரங்கள் தேடித் தொகுத்திருக்கிறார். ஒரு சிறு விவரத்தைக் கூட சரிபார்க்காமல் விடுபட்ட மாதிரி தெரியவில்லை. தியாகராயரின் பெருமிதம் பலரும் அறிந்தது.

யாரிடமும் தலை வணங்காதவர், சர் பட்டம் பெறுவதற்காக அரசப் பிரதிநிதியிடம் இவர் மண்டியிட்டாரா? இருக்க முடியாது என்கிறார் ஆய்வாளர். நேரில் இவர் விருதைப் பெற்றிருக்க மாட்டாராம். நீதிக்கட்சி பற்றியும், தியாகராயர் பற்றியும் எதிர்க்கட்சியினர் என்ற முறையில் காங்கிரஸ்காரர்களும், இர்சிக், சுந்தரலிங்கம் போன்ற ஆய்வாளர்கள் கூறிய

தவறான விவரங்களைச் சுட்டிச் செல்கிறார். சென்னை நகரமன்றத்தில் உறுப்பினராகவும் மேயராகவும் பணியாற்றிய காலங்களில் ஆங்கிலேய அதிகாரிகளைக் கறாராக கட்டுபடுத்தியதைக் குறிப்பிடுகிறார். காந்தி அனுப்பிய தொண்டர்கள் இவர் நெசவாலையிலிருந்து கைத்தறி நெசவு நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டதைக் குறிப்பிடுகிறார்.

பார்ப்பனர் அல்லாத சமூகத்தினர் கல்வி, தொழில் வாய்ப்புகளுக்காக சுயாட்சியில் தமிழர்களைப் பயிற்றுவிப்பதற்காக தியாகராயர் மேற்கொண்ட சீரிய பணிகளை விவரிக்கிறார். தமிழ்நாட்டில் இருபதாம் நூற்றாண்டின் முதல் சில பத்தாண்டுகளில் அநேகமாக எல்லாக் களங்களிலும் 'ஜாம்பவான்கள்' என்று சொல்லத்தக்க பலரை தமிழக வரலாற்றுச் சூழல் தோற்றுவித்திருக்கிறது. இந்தியாவில் வட இந்தியத் தலைவர்கள் எவருக்கும் குறைவில்லாத ஆளுமை கொண்ட மேதைகள் பலரின் செயலாற்றலை இக்கால வரலாற்றரங்கில் பார்க்கிறோம். தியாகராயரும் இவர்களில் ஒருவர். இந்திய யூனியன் இறுகி மையம் வலுப்பெறப்பெற, தமிழினத் தலைவர்கள் ஆற்றல் அழிந்து சேவகர்களாக மாறிவிட்டனர். தியாகராயரின் வரலாறு சொல்லும் நூல் விரிவான அளவில் தமிழுக்குத் தேவை. சரசு அவர்கள் நம் பாராட்டுக்குரியவர். இன்றைய அரசியலில் நீங்கள் யார் பக்கம் என்று கேட்டால் அவர் பதில் : இன்று அரசியலா நடைபெறுகிறது? ●

6. மதுரை – மார்ச்சில் நிஜ நாடக இயக்கச் சார்பில் நடைபெற்ற நாடக விழாவிற்கு சென்று வந்த நண்பர் முருகன் இவ்வாறு தெரிவிக்கிறார்.

நம் நாடக குழுக்கள் நாடகத்தை எவ்வாறு கலை அழகு தோன்ற நிகழ்த்துவது என்பதை நன்றாக கற்று வருகிறார்கள். நம் வரலாற்றுச் சூழலுக்கு ஏற்றதாகப் பல நாடகங்கள் இல்லை. நாற்பதாண்டுகளுக்கு முந்தைய வரலாற்றுச் சூழலைக் கொண்டது இந்திய சரித்திரம். ஸ்பார்டகஸ் நமக்குள் ஆவேசத்தை ஏற்படுத்தினாலும் இன்றைய சமூகச் சூழலில் நம்மை எங்கே நிறுத்துகிறது என்பது புரியவில்லை. கருப்பர் – வெள்ளையர் நிற வேற்றுமைக் கொடுமை தென்னாப்பிரிக்கச் சூழலில் இருப்பது போல் நமக்கு இல்லை. இங்கிருப்பது சாதி வேற்றுமை. 'யாசகம்' நாடகத்தில் நம்மை எங்கே வைக்கிறோம்? 'நாற்காலிக்காரர்' நமக்கு நெருக்கமாக இருக்கிறது. 'நிகழ்த்து கலை' பயிற்சியில் நாம் கொள்ளும் ஈடுபாட்டுக்கு நிகராக நம் சமூகத்தை நாம் பயிலவில்லை. மொழி பெயர்ப்புகளை நம்பியிருப்பது நம்மை முடமாக்கும். சமூக ஆய்வில் நமக்கு ஏன் ஈடுபாடு ஏற்படவில்லை? அரசியல் கெடுபிடி தரும் அச்சம் நம்மைப் பாதித்திருக்கிறதா? ●

- மே 1990

# நிகழ் - 15

ஜூன் 28–ல் என் அண்ணார் காலமானார். நீரிழிவுநோயால் பெரிதும் துன்புற்ற அவருக்கு மரணம் ஒரு விடுதலை. இறுதிச் சடங்குகள் முடிந்தபோது, எனக்குத் தெரிய, என் பாட்டனாரிடமிருந்து என் தந்தை வழியாக எனக்குள் பதிந்துள்ள பாரம்பரியத்தின் வலுவான கண்ணி அறுபட்டதாக உணர்ந்தபோது அதிர்ச்சியடைந்தேன். 40–களின் தொடக்கத்தில் பிளேக்நோய் ஊர்களைக் கொள்ளையிட்ட சமயத்தில் என்னை இந்த நோய் என்ன செய்யும்? என்ற மன உறுதியோடு ஊர்காலியான பிறகும் தன் வீட்டிலேயே இருந்தார். பிளேக்கால் இறந்த தனது சில நண்பர்களை தானே தோளில் தூக்கிச் சென்று சுடுகாட்டில் குழிவெட்டி புதைத்தார். பின்னர் பிளேக்நோய் கண்டு இறந்தார். என் பாட்டி, அன்பின் ஊற்று, ஆறு. என் தந்தையாரின் அதிகாரக்குரல் கேட்டு கோழிக் குஞ்சுகளைப் போல நாங்கள் ஒதுங்கியிருந்தோம். நீதித் தராசைத் தன் கைகளில் உறுதியாகப் பிடித்திருந்தார். என் தந்தை போலவே எங்களை வாழவைத்தவர் என் அண்ணார். எங்கள் குடும்பப் பாரம்பரியத்தில் ஊறி நிறைந்தவர்கள் என் இரு அத்தைமார். எங்கள் பாரம்பரியச் செழிப்பை அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லும் வலிமை எனக்குண்டா? இக்கேள்வி என்னை மீண்டும் அதிர்ச்சிக்குள்ளாக்குகிறது. இத்தகைய பாரம்பரியம் மிக்க எத்தனையோ குடும்பங்களை நான் பார்த்திருக்கிறேன். 'உண்டால் அம்ம இவ்வுலகம்' என்று போற்றிய கவிஞரை நான் நினைத்துக் கொள்கிறேன். இந்திய / தமிழ்ப் பாரம்பரியம் என்ற பேராறு இன்னும் எத்தனை காலத்திற்குள் நமக்குள் பெருகும்? ●

என் அரிய, இனிய நண்பர் ஜீவஒளி எழுபதுகளின் தொடக்கத்தில் கோவையில் வானம்பாடி இயக்கம் தோன்றி விரிவடைந்தபோது எங்களோடு சேர்ந்து கொண்டார். மார்க்சிய கட்சியின் அரசியல், நாடகத்துறை அனுபவங்களோடு அவரை நான் கண்டேன் அவரது அன்பும் அறிவும் இனிய பண்புகளும் என்னைப் பெரிதும் கவர்ந்தன. கொஞ்சம் கவிதைகள் எழுதினார். அப்புறம் ஒரு நாவல் எழுதத் திட்டமிட்டு தன் இளமைக்கால, (உற்றார் உறவினர் ஊர் மக்கள்) அனுபவங்களில் தொடங்கினார். குறிப்பேடுகளில் பல நூறு பக்கங்கள் ஓர் ஆலமரம் போல் நிகழ்ச்சிகள் விரிந்தன. பின்னர் ஒருசமயம் தொடக்க அளவிலே இருந்த இந்த நாவல் கவனமின்மையால் கரையானுக்கு இரையாயிற்று. இவர் அன்புத் துணைவியார் ஜீவா; மார்க்சிய ஆசான் ஜீவா அவர்களின் பாதிப்பு கொண்ட

குடும்பம். மார்க்சியம், இலக்கியம் ஆகியவற்றில் எங்களோடு நெருங்கி இருந்த ஜீவ ஒளி, தாமே முனைந்து இயற்பியல், கணிதம் ஆகியவற்றைக் கற்கத் தொடங்கினார். பிரபஞ்சத்திற்கும் மனிதனுக்குமுள்ள, உறவை புதிய அறிவொளியோடு தேடும் நெடுவழிப் பயணத்தை துணையின்றி மேற்கொண்டார். எனக்குள் அடைத்துக் கொண்டிருந்த மார்க்சியம் / இலக்கிய ஆய்வுகள் ஆகியவற்றை உதறிக்கொண்டு, அவரோடு பயணம் செய்ய எனக்கு இயலவில்லை. பல்லாண்டுகள் ஆய்வில் மூழ்கியிருந்தார் ஜீவஒளி. பலநாள் பல இரவுகள் சுற்றுப்புற நினைவு இழந்து கணித வரிசைகளில் அவர் வாழ்ந்து கொண்டிருந்தார். அவரை கரைக்கு / தரைக்கு இழுத்துவரும் முயற்சியில் ஜீவா சோர்ந்து போனார். சில சமயம் மின்சாரம் ஆட்கொண்டது போன்ற அதிர்ச்சிகள் ஜீவஒளியை பாதித்தன. விடுமுறைக் காலத்தில் சந்திக்கும்பொழுது, தான் தொடர்ந்து தேடும் பிரபஞ்சத்தின் புதிய பரிமாணங்கள் பற்றி, புதியது கண்ட ஒளி தன் முகத்தில் பரவ அழகுபட எடுத்துச் சொன்னார். அவர் பறக்கும் உயரத்திற்கு, அவரைத் தொடர எனக்கு சிறகுகள் இல்லை. நான் கேட்டுக் கொண்டதற்கு இணங்க நண்பர்களும் ஆய்வாளர்களும் தன் ஆய்வில் பங்குபெற வைக்கும் நோக்கில் 83–ல் ஒரு கட்டுரை எழுதினார். இக்கட்டுரை நூலாக வெளிவர ஏழு ஆண்டுகள் ஆயிற்று. 3000 பக்கங்களில் குறிப்புகளாக அவர் கொட்டி வைத்திருக்கும் கருத்துக்களை அவர்தான் தொடர்ந்து எழுதவேண்டும். 'இறுதி' உண்மைகள் இன்னும் அவர் கைவசப்படவில்லை. கிடைத்திருக்கும் உண்மைகள், தொலைதூர / மனவெளியிலிருந்து சேகரித்தவை. இன்பம், அதிகாரம், சொத்து, என பலரும் அலைந்து திரியும் இந்தக் கேவலமான சமூகச் சூழலில் ஜீவனையும், ஒளியையும் யார் தேடுகிறார்கள்? இராமானுஜரைப் புரிந்து கொள்ள, ஏற்றுக்கொள்ள உலகத்திற்கு பல பத்தாண்டுகள் தேவைப்பட்டன. பல நூற்றாண்டுகளாக / ஆயிரம் ஆண்டுகளாக அறிவின் ஆதாரங்களென நாம் நம்பிக்கொண்டிருக்கும் தரவுகள் பலவற்றை உடைத்தெறிகிறார் ஜீவஒளி. பற்றிக்கொள்ள ஏதுமில்லாத வெற்றிடத்தில் நம்மைத் தூக்கி எறிகிறார். ஜீவ ஒளியின் சிறுநூல் வழியாக பயணம் புறப்பட்டால் நம்மை இந்த அனுபவம் தொற்றிக் கொள்ளும். தயவு செய்து முயற்சி செய்யுங்கள். ●

நண்பர்களோடு நிகழ் அனுபவங்கள் சிலவற்றை இங்கு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன். புதிய நண்பர்கள் பலர் தொடர்ந்து சேர்வது உற்சாகம் தருகிறது. பழைய நண்பர்கள் சிலர் நிகழைப் புறக்கணிக்கின்றனர். சிலரிடம் கட்டுரை வாங்கவே முடியவில்லை. வேலைப் பளுவைக் காரணமாகச் சொல்கின்றனர். சமூக கடமையுணர்வை, வேலைப்பளு

அழித்துவிடுமா என்பது புரியவில்லை. இரண்டொரு நண்பர் நிகழில் என்ன வரவேண்டும், யார் எழுத வேண்டும் என்பதைத் தீர்மானிக்கும் உரிமையைத் தமக்குத் தந்தால் தான் எழுதுவோம் என்கின்றனர். இவை ஒருபுறம். நிகழ் விற்பனை, நன்கொடை, சந்தா மூலம் செலவுத் தொகையில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பாலும் கிடைக்கிறது. தொடர்ந்து ஏற்படும் பொருளிழப்பின் சுமை அதிக காலத்திற்கு தாங்க இயலாது. நண்பர்கள்தம் நன்கொடை சேர்க்க உதவினால் தான் நிகழ் தொடரும். சந்தாக்களை வைத்து சிற்றிதழ் நடத்த முடியாது. கறாராக கணக்கு வைத்துக் கொள் என்று சிலர் எழுதும் பொழுது வேதனை ஏற்படுகிறது. இதுதவிர, நிகழுக்கு புதிய அம்சங்கள் தொடர்ந்து தேவை. புதிய திசைகளில் நிகழ் விரிவடைய வேண்டும். இலக்கியத் தேக்கத்தை உடைக்கும் நோக்கம் நிகழுக்கு இல்லை. மக்களுக்கான அறிவியல் மார்க்சியத்தின் புதிய பரிமாணங்கள் அமைப்பியல் ஆய்வின் நுணுக்கங்கள் – இவற்றில் தான் நிகழுக்கு முதலில் கவனம். கதைக்கென, கவிதைக்கென நூல்மதிப்புரைக்கென தனி இதழ்கள் தேவை. கதை / கவிதை மட்டும் படிப்பவர் நிகழில் முக்கிய பகுதிகளை வீணாக்குகின்றனர். புதிய பார்வையைத் தமக்குள் வாங்கிக் கொள்ளாதவர் கதை / கவிதைப் படைப்பில் என்ன சாதனை செய்துவிட இயலும்? மேலும் ஒன்று நிகழுக்கான வேலைகளில் என்னை அதிகம் ஆக்கிரமித்துக் கொள்வதால் நான் படிக்க இயலவில்லை. எழுத இயலவில்லை. இந்த வேதனை எனக்குச் சகிக்கவில்லை. உதவிக்கு நண்பர் அதிகமில்லை. என் கண்பார்வை பாதிக்கப்பட்டதையும் நண்பர் அறிவர். நிகழ் வெளியீடுகள் சில தொடர்ந்து வெளிவரும் இவை பற்றியெல்லாம் நண்பர்கள் சற்று எண்ணிப் பார்க்க வேண்டும். நம் கால கடமைக்கு நாம் முதுகு காட்ட இயலாது. ஒருவரே பலவற்றைச் சுமக்கவும் இயலாது. இப்பொழுதைக்கு, இவ்வளவு நண்பர்களின் ஆலோசனைகள் உதவி எனக்குப் பெரிதும் தேவை.●

வ.ரா. ஆய்வரங்குக்காக கோவை வந்திருந்த திரு. சி. செல்லப்பா அவர்கள் வயது 79. உடம்பில் கொஞ்சம் தளர்ச்சி. உள்ளத்தில் அதே உறுதி. சில ஆண்டுகளுக்கு முன்பு நான் பார்த்துப் பழகிய செல்லப்பா அவர்கள், இப்பொழுது அறிவாற்றலிலும் இலக்கியப் பார்வையிலும் கொண்டுள்ள தெளிவு எனக்கு பிரமிப்புத் தருகிறது. இன்று உலகளவிலும் இந்தியாவிலும் உள்ள அரசியல் நிலவரங்கள் பற்றிக் கூர்மையான பார்வை கொண்டிருக்கிறார். காந்திக்கு அடுத்தபடி கோர்ப்பச்சேவ் என புகழ்கிறார். சில பத்தாண்டுகளில் ரஷ்யாவிலும் அதே போல இந்தியாவிலும் பல தேசியங்களிலும் உண்மையான கூட்டமைப்பு ஏற்படும் என்கிறார்.

ந. பிச்சமூர்த்தியின் இறுதிநாளை நினைவு கூர்கிறார். இரவில் விழித்தெழுந்த ந.பி. ஏன் இரண்டு விளக்குகள்? என்றாராம். பிராமணனாக நான் வாழ்ந்திருக்கவில்லை என்று வருத்தத்தோடு கூறினாராம். மாப்பசான் கதைகளைப் பலமுறை ஆய்ந்து படித்த அனுபவத்தோடு சொல்லுகிறார். இராமையாவை இவர்களுக்கு நிகர் என உறுதியாகச் சொல்கிறார். இவருக்கு அடுத்தபடிதான் புதுமைப்பித்தன். இடைவெளி தராமல் தன் தாத்தா காலம்முதல், தான் பார்த்த அனுபவித்த கேட்ட பல்லாயிரம் நிகழ்ச்சிகளை நினைவுப் பெட்டகத்திலிருந்து எடுத்துக் கொட்டுகிறார். தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் மையம், வ.ரா. என மதிப்பீடு செய்கிறார். வ.ரா. செய்து கொண்ட கலப்புமணம், கிரகப்பிரவேசம் பற்றிச் சொல்கிறார். வ.ரா.வின் அடக்கத்தின்போது அண்ணாவும், கருணாநிதியும் வந்ததாகச் சொல்வதை மறுக்கிறார். சடங்குகளோடு தான் வ.ரா. அடக்கம் செய்யப்பட்டார் என்கிறார். தம் எழுத்துக்கால அனுபவங்களையும் தன் வாழ்க்கை வரலாற்றையும் ஆயிரக்கணக்கான பக்கங்களில் எழுதிக் கொண்டிருப்பது பற்றி சொல்கிறார். புதுக்கவிதையில் சாதனை படைத்தவர்களென ந.பி., சி.மணி, ராஜகோபால் ஆகிய மூவரைக் குறிப்பிடுகிறார். 'பசப்பல்' தொகுப்புபற்றி தான் எழுதிவரும் தனிநூல்பற்றி குறிப்பிடுகிறார். தமிழ்சிறுகதையாளர்களை இவ்வாறு வரிசைப்படுத்துகிறார். 1. இராமையா, புதுமைப்பித்தன் 2. புதுமைப்பித்தன், கு.ப.ரா 3. சிட்டி, சிதம்பரசுப்ரமணியம், செல்லப்பா 4. மௌனி, லா.ச.ரா. இம்முறை அவரிடம் தத்துவம்பற்றி செரிவான கருத்துக்களைக் கேட்டபொழுது செல்லப்பா அவர்களின் வளமும் நிறைவும் கண்டு வியந்தேன். இனி மதுரையில் இருப்பார். மதுரையில் உள்ள இலக்கிய ஆய்வாளர்கள் இந்த ஆலமரத்தின் நிழலில் அமர்ந்து பாடம் கேட்கலாம். ●

- ஆகஸ்ட் 1990

# நிகழ் - 16

புதுமைப்பித்தன் இலக்கியத் திருட்டில் ஈடுபட்டார் என்று திரு. சிட்டி அவர்களும் திரு. சிவபாத சுந்தரமும் சேர்ந்து எழுதிய நூல் புதுமைப்பித்தனை அவதூறு செய்கிறதென்ற முறையில் சில நண்பர்கள் கோபம் கொண்டிருக்கின்றனர். திரு. சிட்டி அவர்களின் சாதி பற்றியும் ஆத்திரத்தோடு குறிப்பிடுகின்றனர். பெரியவர்களை மனம் நோகச் செய்வது முறையல்ல என்றாலும், திரு. சிட்டி அவர்களிடம் இதுபற்றி நான் உடைத்து பேசினேன். புத்தகத்தில் இருந்து தேவையான பகுதிகளை மீண்டும் படித்து பல விளக்கங்களை தந்தார். ஆனந்த விகடனில் மூல ஆசிரியர் பெயரை மறைத்து வெளிவந்த தழுவல் அல்லது திருட்டுக் கதைகளை புதுமைப்பித்தன் சாடினார். தழுவலை எந்த வடிவிலும் புதுமைப்பித்தன் ஏற்கவில்லை. ஆசிரியர் பெயரோடு நம் சூழலுக்கு ஏற்றதாக சில விவரங்களை மாற்றி எழுதும் தழுவலையும் அவர் ஏற்கவில்லை. இப்படி, தம் கருத்தில் பிடிவாதமாயிருக்கும் ஒருவர் மாப்பசான் கதைகளை ஏன் தழுவி எழுதவேண்டும் என்று கேள்வி எழுகிறது. இந்த விவாதம் எழுந்த காலத்திற்கு முன்போ அல்லது பின்போ இக்கதைகளை அவர் எழுதியிருக்கலாம் என்று இந்த நூல் குறிப்பிடுகிறது. இந்த யூகத்தில் அதிக வலு இல்லை. அகிலன், தேசிகன் போன்றோர் புதுமைப்பித்தன் கதைகளில் மாப்பஸான் முதலியோர் தாக்கம் உண்டு என்று கூறியதற்கு அவர்கள் ஆதாரம் காட்டவில்லை என்று கூறுகின்றனர் இரட்டையர். கிருஷ்ணமூர்த்தியும் மதனகோபாலனும் ஆதாரம் கொடுத்துள்ளனரா என்று விளக்குகின்றனர். இப்பொழுது புதுமைப்பித்தன் இலக்கியத் திருட்டு செய்தார் என்பது ஆதாரத்தோடு நிரூபணமாகிவிட்டது போன்ற தோற்றம் நமக்கு ஏற்படுகிறது. திரு. சிட்டி அவர்களை நண்பர்கள் கோபிப்பது இதற்காகத்தான். இதற்கு மேலும் வரும் சில கூற்றுகள் ஆழ்ந்த கவனத்துக்குரியவை. புதுமைப்பித்தன் இறந்த பிறகு 'புதிய ஒளி' தொகுப்பில் இக்கதைகள் வெளிவந்தது. ஆகவே இக்கதைகள் அத்தொகுப்பில் இடம் பெற்றதற்கு அவர் காரணமாக முடியாது. மீ.ப. சோமு அவர்களிடம் புதுமைப்பித்தன் படைப்புகள் பல ஒரு கட்டாக போய் சேர்ந்தது பற்றியும் அந்த கட்டில் இந்த கதைகள் இருந்திருக்கலாம் என்பது பற்றியும் ஏற்கனவே நாம் அறிந்துள்ளோம். இப்பொழுது புதுமைப்பித்தன் மீது 'எந்தக் குற்றம்' எஞ்சுகிறது? மாப்பசானின் ஐந்து கதைகளை பெயர், இடம் மாற்றிப் புதுமைப்பித்தன் எழுதி வைத்தார். கதை எழுதிய இந்த தாள்களில் மூல ஆசிரியர் பெயர் குறிப்பிட்டாரா இல்லையா என்ற விவரம் யாரிடமும் இல்லை.

இனித் தெரிய வரும் என்பதும் சாத்தியமில்லை. இந்த விவாதத்தின்போது இரட்டையரின் கூற்று கவனிக்கத்தக்கது. புதுமைப்பித்தனின் கதைகள் சில 'இலக்கியத் திருட்டு என்ற அவப்பெயரைப் பெறுகின்றன' (பக் 161). சிலகதைகளுக்கு அவப்பெயர். புதுமைப்பித்தனுக்கு அவப்பெயர் சேரும், சேராது என்றும் நண்பர்கள் அடித்துக் கொள்ளலாம். தழுவல் என்பதை அறவே செய்யக்கூடாது என்ற அவரின் கருத்தை நாமும் ஏற்பதற்கில்லை. புதுமைப்பித்தன் பிடிவாதக்காரர் என்பதைப் புரிந்து கொள்கிறோம். செக்காவ் தாஸ்தாவோஸ்கி ஆகியோரின் பாதிப்பு இவரிடம் உண்டு என்கிறார்கள். இந்த வேட்டையில் இனி யார் ஈடுபடுவார்களோ?

இனி சிட்டி அவர்களின் பார்ப்பனச் சார்பு பற்றி அவரே சில விவரங்களை தருகிறார். 'பார்ப்பன எதிர்ப்புணர்வு இன்றைக்காட்டிலும் முப்பதுகளில் அதிகம் இருந்தது' அன்றும் இன்றும் பார்ப்பன எதிர்ப்பிற்கான காரணங்கள் இருந்தன இருக்கின்றன என்று கூறுகிறார். எதிர்ப்பு நியாயம்தான் என்கிறார். முப்பதுகளில் பார்ப்பனரின் உணவு விடுதிகளில் தானும் அவமானப்பட்டதை நினைவு கூர்கிறார். வருவாய்த் துறையில் பணியாற்றியபோது மேலிடத்திலிருந்து வந்த கேள்விக்குப் பதில் எழுதும் பொழுது இந்த ஊரில் அரிஜனங்களுக்குக் கோயில்களைத் திறந்து விடுவதை ஊர் மக்கள் ஆதரிக்கின்றனர் என்று தான் குறிப்பெழுதியதைச் சொல்கிறார். பார்ப்பனர்களின் சங்கீத சபாவில் பார்ப்பனரல்லாதார் பாராட்டப்படுவதில்லை என்பதாலந்த சங்கீதசபாவைப் பார்ப்பன ஆணவத்தின் கோட்டை என்றுதான் வர்ணித்ததுபற்றி சொல்கிறார். நகைச்சுவை உணர்வு குறையாத முறையில் மேலும் பல விவரங்களை திரு. சிட்டி கூறினாலும், அவரை எங்கோ ஓரிடத்தில் புண்படுத்தி விட்டோமா என்ற வருத்தம் எனக்குள் ஏற்படுகிறது. ●

மதுரையில் ஓர் இரவு நண்பர்கள் அமர்ந்து அமைப்பியல்பற்றி விவாதித்தோம். இறுதியில் நண்பர் சுந்தர் கூறிய கதைகளில் ஒன்று, சென்ற நூற்றாண்டில் எழுதப்பட்ட கலிபுராணம், கூறும் கதை. படைத்துப் படைத்து சோர்வுற்ற பிரம்மா, கொஞ்சகாலம் படைப்பை நிறுத்தினார். படைப்பை முருகன் எடுத்து கொண்டு படைப்புக்கான சில கூறுகளைக் குறைத்தும் அதிகப்படுத்தியும் படைக்கப்பட்டவர்கள் வெள்ளையர். வெள்ளையரின் அக்கிரமங்களை கண்டு, விழிப்புற்ற பிரம்மா, கட்டபொம்மனைப் படைத்தார். வேடிக்கையான கதை. அர்த்தச் செறிவுள்ள கதை. நம் பாரம்பரியத்திலேயே அமைப்பியல் அணுகுமுறையின் மையத்தை அழிக்கும் படைப்புகளும் உள்ளன என்பதை நமக்கு உணர்த்தும் கதை.

உண்மைதான். இந்த நோக்கில் நம் பழங்கதைகளைப் பார்த்தால் கதைகளுக்கு புதிய அர்த்தங்கள் உருவாகும். வாலி வதைக்கு அழுத்தம் கொடுத்தால், ராமாயணக் கதை முழுவதும் ராமனுக்குள் ஒரு வில்லனை காணலாம். சந்தேகம் கொண்டு சீதையை காட்டுக்கு அனுப்பிய பகுதிக்கு அழுத்தம் தந்தால், ராமாயணம் முழுவதுள்ளும் ராமரை ஜோக்கராகக் காணலாம். ஜோக்கர் உருவம் வெறும் வேடிக்கை அல்ல, நெருக்கடி மிக்க சூழலில் ஏதாவது ஒரு முடிவு எடுக்க வேண்டி, முரணில் வைத்துப் பார்க்கும்போது ஒருவன் கதாநாயகன்; அதே சமயம் வில்லன். இரண்டோடும் சேர்ந்ததுதான் ஜோக்கர். ●

சிலப்பதிகாரத்தில் கண்ணகி கற்பின் தெய்வம். மணிமேகலையில் சாத்தனார் மையத்தை அழித்தெழுதுகிறார். கண்ணகியின் கோபம் மதுரையை எரித்த செயல் காரணமாக கண்ணகிக்குப் பல பிறப்புகள் தொடரும் என்று கதை அமைக்கிறார். உப வனத்திற்குச் செல்லும் மணிமேகலையை குடிகாரன் வழி மறித்து கிண்டலடிக்கிறான். பக்தி என்ற மையத்தை இந்த கிண்டல் அழித்து பார்க்கிறது. சிலம்பு கதைக்குள்ளும் மையமழிக்கும் கூறை காணலாம். நீடாமங்கலம் அலமேலு நிகழ்த்திய 'கஜேந்திர மோட்சம், கதாகாலட்சேபத்தை வானொலியில் கேட்டேன். கதையில் சில புதுச்சேர்க்கைகள், கஜேந்திரன் (யானை), முதல்வனை (முதலை என்ற சொல்லுக்குள் உள்ள முதல்வனை) கூவி அழைத்த போது அவசரமாக புறப்பட்ட திருமால் சங்கு, சக்கரத்தை மறந்து சென்றாராம். நினைவு வந்து உடனே திரும்பி சங்கு, சங்கரத்தைத் தரித்து கொண்டு சென்றதால் தாமதம் ஏற்பட்டதாம். முதல்வனுக்கும் மறதி! திருமால் இங்கு கோமாளியாகிறார். திருமால், கஜேந்திரனை விடுதலை செய்து வந்தபோது அவர் கால் செருப்பு அழுது கொண்டிருந்ததாம் சங்கு முதலியவற்றை மறந்து புறப்பட்டு பின் திரும்பிய இடைவெளி நேரத்தில் சங்கு முதலியவை செருப்பை பார்த்து, சிரித்து 'நீ எப்படி உள்ளே கிடக்கலாம்; வெளியே போ' என்றனவாம். (செருப்பு – தாழ்த்தப்பட்ட சாதி) திரும்பி வந்த திருமால் என் அடுத்த அவதாரத்தில் உனக்கு சிம்மாசன பதவி தருவேன் என்றாராம். இக்கதைகள் வியப்பைத் தருகின்றன. பக்தியை நாசுக்காக இவை கேள்விக்குட்படுத்துகின்றன. மையத்தை உடைத்தால் நமக்கு நிறைய கதைகள் புதிய அர்த்தங்களில் கிடைக்கின்றன. இறுகப் பூட்டி வைத்தவர்கள் நோக்கமும் புலப்படும். ●

## காந்தி, மார்க்ஸ் -
## உற்பத்தி உறவினை இருவருமே மையப்படுத்தினார்கள்

இருவருமே இயந்திரத்தின் பண்பினைச் சரியாகப் புரிந்தவர்கள். பாட்டாளி மக்களை அடிமைப்படுத்தும் தொழில் முறையினை வெறுத்தனர். அவர்களுக்கு சுதந்திரம் கொடுக்கும் – ஓய்வும் – நிம்மதியையும் – திருப்தினையும் – தன்னம்பிக்கையும் செயல்திறனையும் – வளர்க்கும் தொழில் முறையினையும் வலியுறுத்தியவர்கள். பொருளின் ஆதிக்கம் அடிமைத்தன்மையின் அடித்தளமென்பதை இருவரும் தெளிவுபடுத்துகின்றனர். இருவருமே வன்முறையை முழுமையானது என ஏற்கவில்லை. இறுதியில் அரசு அற்ற விடுபட்ட மாந்தர் சமுதாயத்தையே இருவரும் உளமார விரும்பியவர்கள் – இந்த அளவு ஒற்றுமை இருவரிடையே உண்டு – எந்த இடத்தில் மாறுபடுகின்றனர்? இதில் எவர் கூறுவது பொதுவான இலட்சியத்துக்கு இட்டுச் செல்லும் என்பது இன்று தெளிவாகவே நம் முன் எழுந்துள்ள கேள்வி. (அடுத்து ஒன்றையும் கூற விரும்புகின்றேன் – இன்று காந்தியவாதிகள்தான் புரட்சியாளருடன் இசைவாக இருந்து வாதாடுகின்றனர். இதனை வாய் சவடால் பேசும் – புரட்சிவாதிகள் புரிந்து கொள்ளட்டும்)

அடுத்து வைணவத்தின் தத்துவ அடிப்படை. அது எத்தகைய சமுதாய இயக்கத்துக்கு வழிகாட்டியது? இரண்டையும் தெளிவுபடுத்துவது முதல் அவசியம். மார்க்சியம் மேற்கத்திய தத்துவங்களின் தொடர்ச்சி என்பதை முதலில் புரிய வேண்டும். அது பண்டைய தத்துவத்தின் மறுமலர்ச்சி என்பதே உண்மை. இதனைக் குறித்து எங்கல்ஸ், இயற்கையின் இயங்கியலில் என்ன கூறியுள்ளார் என்பதையும் நாம் தெளிவுபடுத்தியாக வேண்டும். இயங்கியல் அடிப்படையாகக் கொண்ட மார்க்சியத்தை எத்தகைய தத்துவம் என்று இனம் பிரிக்க முடியும் என்பதும் தெளிவுபடுத்தியாக வேண்டும். இது முற்றான அத்வைதம் அல்ல, துவைதமும் அல்ல. இரண்டும் இணைந்த ஒன்று என்ற தத்துவம் – இது வைணவத்தின் அடிப்படையன்றோ? ஆக்கலும் அழித்தலும் ஒன்று என்பதை நம்மாழ்வார் கூறவில்லையா? விண்டவர் கண்டிலர் – இரண்டையும் தெட்டத் தெளிவாகப் பிரிக்கஇயலாது. கருத்தில் கவனம் செய்யலாம். ஆனால் இயற்கையில் இயலாது. எதிர்மறைகளின் ஐக்கியம், ஒருமை என்ற இயங்கியலின் சாரம்தான் விசிஸ்டா துவைதத்தின் அடிப்படை.

**(எஸ்.என். நாகராசன் 7-12-90 கடிதத்திலிருந்து)**
**- டிசம்பர் 1990**

# நிகழ் - 17

நண்பர் அக்கினி புத்திரனின் தந்தையார் பிப்ரவரி 25ம் நாள் காலமானார். புற்று நோயால் பாதிக்கப்பட்டிருந்த அவரைச் சென்று பார்த்தபொழுது மரணம் பற்றிச் சிறிதும் அச்சமில்லாமல் இருந்தார். இப்பொழுதெல்லாம் 50 வயதில் பலர் இறக்கிறார்கள் எனக்கு வயது 75. நான் உயிரோடு இருக்கும் ஒவ்வொரு நாளும் எனக்கு லாபம்தான் என்று தெளிவாகக் கூறினார். புற்றுநோய்க்கான குரூரமான மருத்துவம் என்ற சித்திரவதைக்கு இவர் ஆளாக்கப்படவில்லை. உள்ளூரிலும் வெளி மாவட்டங்களிலும் பேரளவில் நண்பர்களையும் உறவுகளையும் இவர் பெற்றிருந்தார். நூற்றுக் கணக்கில் மாலைகள் குவிந்ததைக் கண்டு அக்கினியின் தாயார் வியப்புற்றுக் கூறினார். எந்த நேரத்திலும் உதவிக்கு யார் வந்தாலும் அவரோடு போய் வருவார். அப்பொழுதெல்லாம் நான் சஞ்சலப்படுவேன். இப்பொழுதுதான் இவர் பெருமை எனக்குத் தெரிகிறது. அக்கினி கூறுகிறபடி உடமைப்பற்று ஒட்டாமல் அவர் வாழ்ந்தார். மக்களுக்கும் உறவினர்க்கும் செய்யவேண்டிய அனைத்தையும் செய்துமுடித்தார். எல்லாவற்றையும் குறைவரச் செய்து முடித்து மரணப் படுக்கையிலும் நிம்மதியாக அவர் படுத்திருந்ததை உணர்ந்த போது, இந்திய பாரம்பரியத்தில் இன்றுவரை தொடர்ந்துவரும் பீஷ்மர், ஆலமரம் என்ற உருவகங்கள் தான் என் நினைவில் நிறைகின்றன. ●

எழுத்தாளர் சு. சமுத்திரம், பரிசு பெற்றது பற்றி சென்ற நிகழ் இதழில் நான் எழுதிய குறிப்பை நண்பர்கள் படித்திருப்பார்கள். ஒரு இலக்கிய நண்பர் ஆதங்கத்தோடு கடிதம் எழுதியிருந்தார் எனது வருத்தம் அல்லது ஆதங்கம் வேறுவகையில். தமிழ் எழுத்தாளர் ஒருவர் சாகித்ய அகாதமி பரிசு பெறுவதை முன்னிட்டு, அவர் தரம் எத்தகையதாக இருந்தபோதிலும் கல்கி, குமுதம் விகடன் முதலிய இலக்கிய 'இதழ்களின் எழுத்தாளரோடு பேட்டி, அவரது வாழ்க்கைக் குறிப்புகள், அவரது படைப்புகள் பற்றிய அறிமுகம் என்ற முறையில் கட்டுரைகளை எதிர்பார்த்தேன். சில இதழ்களில் விரசமான சில விவாதங்கள் இடம் பெற்றிருந்தனவே தவிர இலக்கியத்திற்கென உரிமை கொண்டாடும் பல இதழ்கள் சமுத்திரம் அவர்களைக் கண்டு கொள்ளவே இல்லை. தமிழ் வாசகர்களுக்கு எழுத்தாளரை அறிமுகப்படுத்தும் பெருமைப்படுத்தும் ஒரு அரிய வாய்ப்பை இந்த இதழ்கள் ஏன் தவிர்த்தன? தவிர்த்தது ஒரு கொடுமை. இலக்கியத்திற்கு, அவமரியாதை. தவிர்த்தற்கு வெளிப்படையாகத் தெரியும்

ஒரு காரணம், அவர் பார்ப்பனர் அல்ல. சமுத்திரம் அவர்களின் சமூக நீதி உணர்வை நான் பெரிதும் மதிக்கிறேன். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு இரண்டு கருத்தரங்குகளில் அவரோடு மோதிக் கொண்டேன். மோதல் எனக்குள் பகை உணர்வாக மாறியதேயில்லை. இலக்கியத்தரம் பற்றித்தான் எனது கவலை. ●

சிற்றிதழ்கள் இரண்டாம் அலை எழுச்சி இன்னும் தொடர்கிறது. மீட்சி, காலச்சுவடு, முன்றில், கனவு, விருட்சம், நிகழ், தளம் மேலும், கல்குதிரை ஆகிய இதழ்களோடு அண்மையில் புதிய நம்பிக்கை, நிறப்பிரிகை, நவீனகவிதை, வெளி, ஒரு, ஆகிய இதழ்களும் வெளிவருகின்றன. புதியகுரல், சூர்யோதயா, சுட்டும் விழிச்சுடர், அக்னி போன்ற மகளிர் இதழ்களும் தொடர்ந்து வருகின்றன. இவ்வகை இதழ்கள், படைப்பு, திறனாய்வு ஆகியவற்றில் உறுதியான கருத்துத்தளம் கொண்டிருக்கின்றன. இவை தவிரவும் இன்னும் பல சிற்றிதழ்கள், தமிழ்நாடு முழுவதும் பரவலாக வெளிவருகின்றன. தமிழ்ச் சிற்றிதழ்கள் சங்கம் 'தாஸ்னா' என்ற அமைப்பில் சுமார் எழுபது சிற்றிதழ்கள் இணைந்துள்ளன. மதுரைக் கருத்தரங்கின் போது சிற்றிதழ்கள் பற்றி, இவற்றின் நோக்கம், செயல்பாடு, வாசகர்களுக்கு இடையில் இவைகளைப் பரவலாக்குதல், தமிழகத்தின் எத்தகைய தேவையை நிறைவேற்றும் முறையில் இவை செயல்படுகின்றன என்பன போன்ற விவாதங்கள் இல்லை. வணிகப் பத்திரிக்கைகளில் வருவதுபோல தரம்பற்றி சீர்தூக்காமல் இடம் நிரப்பும் முறையில் கவிதைகளும் கதைகளும் வெளிவருகின்றன. திறனாய்வுக்கென தனி இதழ் இல்லை. வரலாறு, மெய்யியல் பற்றி இவற்றில் ஆய்வுகள் இல்லை. இன்னும் இலக்கியத்தோடுதான் நாம் அதிகம் ஒட்டிக்கொண்டிருக்கிறோம். முன்பு கவிதை எழுதியவர்களில் சிலராவது இப்பொழுது சிறுகதை நோக்கி திரும்பியிருக்கிறார்கள். சிறு இதழ்களுக்கிடையிலும் படித்த மேதாவிகளுக்கு என பாமரர்களுக்கு என தனித்தனியே இதழ்கள் வருவதாய்த் தெரிகின்றது. சிற்றிதழ் என்பது மாற்று எதிர்க் கலாச்சாரத்தின் வடிவம் என்ற உணர்வு எல்லோரையும் தாக்கவில்லை. உலக வரலாற்றுச் சூழலில் தமிழகத்திற்குள் வந்து தாக்கும் நெருக்கடிகளின் கடுமையினை சிற்றிதழ்கள் உள்வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. சிற்றிதழ்கள் தமக்குள் இதழ்களைப் பரவலாக்கும் முயற்சியில் ஏதாவது ஒரு ஏற்பாடு தேவை. சென்னை, மேமாதக் கருத்தரங்கின் போது இப்பிரச்னைகள் பற்றி அனைவரும் கூடி சிந்திப்பது பயன்படும். ●

பிரிய கி.ப.,

என்னுள் தோன்றியது இது; பதில் வராத கடிதம் இல்லையா? அப்படி எனில் ஏன் எழுதுகிறேன் என முளைத்தது கேள்வி. தட்டுத் தடுமாறிப் போய்விட்ட மனது சொன்ன பதில் இதுதான்; என்னைத் தெளிவாக்கிக் கொள்வதற்கான ஒரு உபயம் இது; எனவே எழுதுகிறேன்.

உருவத்திற்கும், பார்வைக்கும் தொடர்பு உள்ளதா? இப்படி ஒரு கேள்வியை மீண்டும் மீண்டும் கேட்கும்படி ஆகிவிட்டது எனக்கு இரு தினங்களுக்கு முன்னர் நண்பர் ஒருவரின் வீட்டில் ஒரு கடிகாரம் மாட்டப்பட்டு இருந்தது. கடிகாரம் என்றதும் வட்டமாக சதுரமாக கற்பனை பண்ணிக் கொள்ள வேண்டாம். அது கடிகாரத்தின் ஒரு பகுதியே ஆகும். கைக்கடிகாரத்தைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். கடிகாரத்தின் இருபுறமும் ஸ்டிராப் – ஒரு முனையில் பக்கிள், வலது புறத்தில் சாவி தருவதற்கான பொத்தான். இந்த மாடலில் பெரிய சுவர்க் கடிகாரம் மாட்டி இருந்தார்கள். இதை பார்த்தது முதல் அதை சுவர்க் கடிகாரம் போலக் கருதவே முடியவில்லை. பார்க்கும்போது எல்லாம் கைக்கடிகாரம் போலவே உணர்வு, எனது அறைக்கு வந்ததும் இதே கேள்வி பின் டி.வி.யில் பார்க்கும் உருவங்கள் பற்றி கேள்வி வந்தது. டி.வி.யில் பார்க்கும் உருவங்கள் சிறிதாக இருந்தாலும் ஏன் சிறியது என்று உரைப்பதில்லை? இதன் பின்னால் உள்ள அறிதல் விதிகள் (Cognitive Principles) என்ன? Freedom of Midnight எழுதிய எழுத்தாளர் HT – தந்த பேட்டியில் தாம் எதைப் பார்க்கும் போதும் நிறம், ஒலி, மணம் என்ற பரிமாணங்களில் பார்ப்பதாய் எழுதி இருந்தார். இப்படிப் பார்த்தால் பார்வை வித்தியாசமாக இருக்கிறது. சமீபத்தில் சென்னைவந்த நண்பர் ஒருவர் மாலை ஆறு மணி வரை டெல்லியில் இருந்துவிட்டு விமானம் மூலம் இரவு பத்து மணிக்கு சென்னை வந்து சேர்ந்தார். சென்னையை ஒன்றரை நாள் தூரமாக கற்பனைசெய்து வைத்திருந்த விஷயம் அறுந்துபோய்விட்டதால் வேறுவிதமாக கற்பனை செய்ய முடியாமல் தவித்துப் போய் விட்டதாகத் தெரிவித்தார். இவர் நேரத்தை தூரத்துடன் இணைத்து வைத்து இருந்ததால் இப்படி நேர்ந்துவிட்டது. எல்லாம் அறிதல் தொடர்பான விஷயங்கள், உலகம் மிகவும் சிக்கலாகி வருவதுபோல் உணர்வு.

எஸ்.பி. தங்கவேலு, J N U டெல்லி

அன்பு ஞானி அவர்களுக்கு,

நான் கவிதை என்கிற குப்பையில் ஆழ்ந்து போவதைப் போல உங்களுக்கு மார்க்சியம் என்கிற அறிவியல் பயன்பட்டிருக்கலாம். எப்படியோ எல்லோருக்குமே ஆழ்ந்து போவதற்கென ஏதேனுமொன்று கிடைத்து விடுகிறது. ஆனாலும், நம்முடைய இருத்தலின் கடைசிப் பகுதி என்ன என்கிற – என் போன்ற சிலமன நினைவு அதிகமாகிப் போனவர்கள் – கேள்விக்கு விடையேதும் கிடைக்கவில்லை. நான் உங்களுடன் நட்புக் கொள்வதாலோ பகைத்துக் கொள்வதாலோ என்ன ஆகிவிடப்போகிறது பெரியதாக எனக் குறிக்கிறேன்? நாம் எல்லோரும் நிறைய வேஷம் போடுகிறோம் – எதற்காக – ஏன் எல்லாவற்றையும் மற்றவர்களிடமிருந்து மறைக்கிறோம்? அப்படி மீறி, மற்றவர்களுக்குத் தெரிவதால் என்ன ஆகிவிடப் போகிறது? பொதுவாக நாமெல்லோருமே புகழின் கைக்கூலிகள் என்றே நினைக்கிறேன். எப்படி நான் எழுதிக்கொண்டு போனாலும், என் இருத்தலில் நான் அறிய விரும்புவது இருத்தல் எதற்காக, அதன் இறுதிப்பகுதி எது? இருத்தலின் அர்த்தமென்ன, இவைகளே, எனக்குள் யார் சிரிப்பது? போ – போ – என்னை விட்டுவிடு நான் இப்படியே இருந்துவிடுகிறேன். இம்சிக்காதே தயவு செய்து நீ மனமல்ல. வேறொன்று. நான் மீளமுடியுமா? கர்த்தரே, ஜே.கே. எல்லோரும் என்ன ஆனார்கள்.

**கு. விடுதலை விரும்பி, நெய்வேலி (32-12-90)**
**மார்ச் 91**

# நிகழ் - 18

சில மாதங்களுக்கு முன்பு 'முற்போக்கு இலக்கியம் – ஐம்பதாண்டுக் கால அனுபவம்' பற்றிய திருநெல்வேலிக் கருத்தரங்கக் கட்டுரைகளையும், நாமக்கல்லில் நடந்த முற்போக்கு எழுத்தாளர் சங்கக் கருத்தரங்கக் கட்டுரைகளையும் அண்மையில் படித்தேன். மதிப்பிற்குரிய திரு. தொ.மு.சி. ரகுநாதன் அவர்கள் தம் இலக்கியப் பார்வைக்குள் ஸ்டாலினியம் பெற்றிருந்த அழுத்தம் பற்றிச் சுய விமர்சனம் செய்து எழுதியிருந்தது எனக்குப் பெரும் வியப்புணர்வை ஏற்படுத்தியது. நீண்ட கட்டுரையில் விரிவான விவரங்களை தருகிறார். ஸ்டாலின் திணித்த சோசலிச யதார்த்தவாதம் பற்றிச் சொல்லுகிறார். கார்க்கியின் மரணத்திற்கு ஸ்டாலின் காரணம் என்பதற்கு ஆதாரங்கள் தருகிறார். (வியக்கத்தக்க முறையில் உடல் நலம் தேறிவந்த லெனின் அவர்களின் மரணத்திற்கும் ஸ்டாலின்தான் காரணம் என்ற முறையில் விரிவான ஆதாரங்கள் முன்பே வெளியானதை ரகுநாதன் அவர்கள் அறிந்திருக்கலாம்) **1961–ல்** கலை இலக்கியப் பெருமன்ற தோற்றத்துடன் தங்களுக்குள் இருந்த ஸ்டாலினியப் போக்கிலிருந்து விடுபட்டதாகவும் கூறுகிறார். சோவியத் யூனியன், கிழக்கு ஐரோப்பிய அனுபவங்கள் நம் நாட்டு மார்க்சியக் கட்சியினரின் ஸ்டாலினியப் போக்கைத் தகர்க்கவில்லை என்பதை இன்று வரையிலான அனுபவங்கள் நமக்கு உணர்த்துகின்றன. சில அரிய விலக்குகளும் உள்ளன. 'பொன்மலர்' இதழில் ஜெயகாந்தன் எழுதிய சுயவிமரிசனம் ஒரு அரிய விதிவிலக்கு. நெஞ்சில் வீரம் உடைய ஒருவர்க்குத்தான் உண்மை புலப்படும் என்பதற்கு ஜெயகாந்தன் சான்று.

தமிழ் மக்கள் மத்தியில் தமிழ்நாடு, தமிழிலக்கியம், தமிழ் பண்பாடு ஆகிய உணர்வுகளை தட்டி எழுப்பியதன் மூலம் அரசியலில் செல்வாக்கு பெற்று வந்த தி.மு.க. இயக்கத்தை முறியடிக்கும் நோக்கத்தோடு கலை இலக்கியப் பெருமன்றம் தோற்றுவிக்கப்பட்டதை ரகுநாதன் குறிப்பிடவில்லை. கட்சிக்குள் பி. ராமமூர்த்தி முதலியவர்களால் திரு. ஜீவா அவர்கள் புறக்கணிக்கப்பட்ட போக்கினுள் ஸ்டாலினியத்தை ரகுநாதன் பார்க்கவில்லை. உலக அளவில் புதுக்கவிதையை ஏற்றுக் கொள்வதற்கான ஆதாரங்கள் குவிந்தபோதிலும் கைலாசபதி உட்பட மார்க்சிய இலக்கிய விமரிசகர்கள் புதுக்கவிதையினை ஏற்பதற்கு தங்கள் கோட்பாட்டில் இடம் தரவில்லை. தங்கள் அமைப்பைச் சேர்ந்தவர் என்பதால் பாரதிக்குப் பேரன், மாயகோஸ்கி மருமகன் என்றெல்லாம் சிலர் தூக்கி வைக்கப்பட்டனர். டால்ஸ்டாயின் இலக்கியத் தோற்றத்தை ரசியப் புரட்சியின் பின்னணியில் லெனின் செய்த மதிப்பீடு தன்னிகரற்றது. மார்க்சிய இலக்கியக் கோட்பாட்டை பொறுத்தவரை

லெனின் காலத்திலும் அதன்பிறகும் ரஷ்யாவிலும் மேற்கத்திய நாடுகளிலும் விரிவான ஆய்வுகள் நடைபெற்றன. இவை அனைத்தையும் லெனினுக்குள் வைத்துக் காணமுடியாது. மரபான மார்க்சிய தடத்திலிருந்து விலகித் தத்துவம் பற்றி லெனின் தந்த அரிய குறிப்புகளில் (லெனின் நூல் தொகுப்பு ; 38) வெளிப்படும் புதிய மின்னல் வீச்சுக்களை நம் மார்க்சிய நண்பர்கள் இன்றுவரை காணவில்லை. 'பிரஸ்னேவே' வெளியேறு என்று 'மனிதன் தலையங்கம் எழுதினால் தவறு. 'பிரஸ்னேவே வா' என்று தாமரை எழுதியது தேசப்பற்று. இப்படி அன்று விவாதித்த தி.க.சி. அவர்கள் தன்னை எப்படி சுயவிமர்சனம் செய்து கொள்கிறார் என்று தெரியவில்லை. மார்க்சியத்தை விட இடையில் வந்த குட்டிப் புரோகிதர்களுக்கு எப்படி மகத்துவம் ஏற்படுகிறது? மார்க்சியம் பற்றி ஏன் மரியாதை கெட்டு போகிறது? சுயவிமர்சனம் செய்து கொள்ள திராணியற்றவர்கள்தான் இலக்கியம் முதலிய துறைகளில் இன்னும் செயல்படுகின்றனர் என்பதற்கு மதுரைப் பல்கலைக் கழகத்தில் நடந்த 'எண்பதுகளில் தமிழ் இலக்கியம்' பற்றி அண்மையில் 'தாமரை'யில் வெளிவந்த கட்டுரையும் சான்று. எனினும் ரகுநாதன் அவர்களின் சுயவிமர்சனம் நூலாக விரைவில் வெளிவருவதை நாம் ஆவலோடு எதிர்பார்க்கலாம். ●

ஏப்ரல் மாதம் நண்பர் தோப்பில் முகம்மது மீரான், கோவை வந்திருந்தார். இவர் எழுதிய முதல் நாவலான கடலோர கிராமத்தின் கதைபற்றி நண்பரோடு பேசிக் கொண்டிருந்தேன். இஸ்லாமிய சமூகம் இந்த நாவலை எப்படி ஏற்றுக் கொண்டது என்று கேட்ட போது சில விவரங்களைக் குறிப்பிட்டார். இஸ்லாமிய சமூகத்தை நான் குறை சொல்லவில்லை. சமூகத்திலுள்ள குறைகளைத்தான் சொல்லுகிறேன் என்று தெளிவுபடுத்தினார். நாவலில் என்னைக் கவர்ந்த மனிதன் முகமதுதான். இவன் உழைப்பாளி. வீரன். முதலாளியை இறுதிவரை எதிர்த்து நின்றவன். ஆங்கிலப் பள்ளிக்கு தன் ஒரே சொத்தான நிலத்தைத் தந்தவன், தானே வேதம் ஓதி தன் மகளுக்கு மணம் செய்வித்தவன். இப்படியெல்லாம் செய்வதற்கு இஸ்லாமியம் இடம் தருகிறதா? – என்று கேட்டபோது அவர் கூறியவை எனக்கு வியப்பூட்டின. முதலாளிமார்களோடு ஒத்துச் செல்லும் மதப்போக்கும், இதற்கு எதிரான மக்கள் நலன்களோடு ஒத்துச் செல்லும் இன்னொரு மதப்போக்கும் இஸ்லாமியத்தினுள் உள்ளன. ஒரு முஸ்லீம் தானே வழிபாடு செய்து கொள்ள முடியும். திருமணம் நடத்திக் கொள்ள முடியும். இஸ்லாமியம் குறிப்பாக ஒரு வாழ்க்கை முறை. தொழுகை முக்கியம், அப்புறம் சகோதரத்துவம். இப்படிச் சொன்னார். இவர் கூற்று எனக்குப் புரிகிறது. ●

ஜூன் 1991

# நிகழ் - 20

1967 ஜூலை முதற்கொண்டு முற்போக்குக் கலை இலக்கியத்திங்கள் இதழாக கோவையிலிருந்து வெளிவந்த 'புதிய தலைமுறை' இன்னும் பலர் நினைவில் இருக்கும். இதன் ஆசிரியர் புவனேசுவரி. 65–ல் எஸ்.என். நடராசன் தொடர்பு கிடைத்ததைத் தொடர்ந்து நானும் என் நண்பர்களும் மார்க்சியத்தை புதிதாகப் பயின்றோம். அந்நியமாதலிலிருந்து மார்க்சியத்தை நாகராசன் தொடங்கினார். சிந்தனை மன்றம் என்ற அமைப்பில் சிலஆண்டுகள் காரசாரமான விவாதங்களோடு நம் மரபுக்கு உகந்த மார்க்சியம் கற்றோம். நாகராசன் தொடர்ந்து தந்த தூண்டுதலின் அடிப்படையில் 'புதிய தலைமுறை இதழ்' தொடங்கினோம். கட்சி அனுமதிக்கவில்லை நாங்களாகவே தொடங்கினோம். கவிஞர் ஆதி, மனோ (இன்று எஸ்.வி.ஆர்) நஞ்சப்பன், வெங்கட்ராமன் இவர்களோடு நானும் இணைந்து புதிய தலைமுறையைச் சிறப்பாக உருவாக்கினோம். அன்று தமிழகச் சூழலில் வைத்து கலை, இலக்கியம், தத்துவம் ஆகியவற்றின் வழியே மார்க்சியத்தை புதிய தலைமுறை மூலம் முதன்முறையாக அழுத்தமாகக் கற்றுக்கொண்ட இளைஞர்கள் பலர். மொழிச் சிக்கல் பற்றி தலையங்கங்கள், கட்டுரைகள் தொடர்ந்து எழுதினோம். எங்கும் எதிலும் தமிழ். அனைத்து தேசிய மொழிகளும் மைய அரசின் மொழி என்பதை விடாப் பிடியாக வற்புறுத்தினோம். பாரதிதாசனைப் போற்றினோம். கல்கி, விகடன், கலை மகள் ஆகியவற்றில் வெளிவரும் கதைகளை வர்க்கப் பார்வையின் வழியே கடுமையாகத் திறனாய்வு செய்தோம். ஜெயகாந்தன். பார்த்தசாரதி பற்றி அனேகமாக முதன்முறை என்று மதிக்கத்தக்க முறையில் விமர்சனங்கள் வெளியிட்டோம்.

கோவையிலும் அண்மையிலுள்ள சிறுநகரங்களிலும் நடைபெற்ற உண்மைக் கதைகளை கலைநயம் குறையாமல் எழுதி வெளியிட்டோம். பொள்ளாச்சி நண்பர் வேலுசாமி எழுதிய ஓர் உண்மைக் கதையின் அடிப்படையில் தான் பிறகு சிற்பியின் "சிகரங்கள் பொடியாகும்" கவிதை வானம்பாடியில் வெளிவந்தது. எங்கள் ஆஸ்தானக் கவிஞர் ஆதி. இவரது அற்புதமான கீழைக்காற்று கவிதை, மாவோவின் புகழ் பாடுவது. அன்றைய நிலையில் வியட்நாம் பற்றிய கவிதை என்று குறிப்பெழுதி வெளியிட்டோம் (வெளிச்சங்கள் தொகுப்பில் தமிழ்நாடனால் மறைக்கப்பட்ட கவிதை இது) சிறுகதைகள் எழுதுவதில் மனோவின் தேர்ச்சியை வெளிப்படுத்தும் இரண்டு சிறுகதைகள் புதிய தலைமுறையில் வெளிவந்தன. அன்னியமாதல் பற்றி நாகராசன் தொடர்ந்தெழுதினார். 'அன்பும் அறிவும்' பற்றி எழுதிய கட்டுரை

தீக்கதிரின் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. இராவணன் முதலிய புனைப் பெயர்களில் நான் கட்டுரைகள் எழுதினேன்.

தமிழகத்தில் புதிதாக எழுச்சி கொண்ட – பிறகு மார்க்சிய லெனினியக் கட்சி என்று பெயர் பெற்ற கட்சியின் தலைவர் இமயன் என்ற பெயரில் கட்டுரைகள் எழுதினார். இன்று நினைத்துப் பார்க்கும்போது, அன்று நாங்கள் கற்றுக் கொண்ட தோழமையும் மார்க்சியமும் இன்றும் எங்கள் நெஞ்சில் பதிந்திருக்கின்றன. கடுமையான விமர்சனங்கள் வழியே நாங்கள் ஆரோக்கியமாக வளர்ந்தோம்.

தொடக்கத்தில் புதிய தலைமுறை ஒரு கட்சியின் பத்திரிகை அல்ல. கட்சிப் பத்திரிகை ஆனபொழுது நாகராசன் அதில் இல்லை. நானும் அதில் இல்லை.

இடையில் சில கசப்பான அனுபவங்கள். அரசு அதிகாரத்தின் குறுக்கிடலாலும், தாக்குதலாலும் இருபத்தி மூன்று இதழ்களோடு புதிய தலைமுறை நின்றுவிட்டது. புதிய தலைமுறையின் அனைத்து இதழ்களிலிருந்தும் ஒரு நல்ல தொகுப்பைக் கொண்டுவரும் என் ஆர்வத்தை இன்னும் செயல்படுத்த இயலவில்லை. முதல் பன்னிரண்டு இதழ்கள் மட்டும் என் கைவசம் உள்ளன. பிற இதழ்களுக்கு நண்பர்களை எதிர்பார்க்கிறேன். எங்கள் அனைவரையும் பொறுத்தவரை, புதிய தலைமுறை எங்கள் வாழ்வின் குறுகிய பொற்காலம். இன்னும் நினைத்து வருந்தி மகிழ்ந்து நினைவில் கழியும் பொற்காலம். ●

சில மாதங்களுக்கு முன்பு கவிஞர் தீபானந்தா தம் நண்பர் சம்பத் என்பவரை அழைத்து வந்திருந்தார். சம்பத்தின் அனுபவங்கள் பலவற்றைக் கூறினார். விரைந்து வந்த ஒரு லாரியைப் பார்த்த போது, அடுத்த வளைவில் சில நிமிடங்களில் இந்த லாரி கவிழும் என்று உணர்ந்தார். அவர் உள்ளுணர்வு கூறியபடியே பத்து நிமிடங்களில் செய்தி வந்தது. இம்மாதிரிப் பல நிகழ்ச்சிகளைக் கூறினார். வெளியூருக்கு மாற்றலாகிச் செல்வது போன்று ஒரு கனவு. சில மாதம் கழித்து மாற்றலாகிச் சென்ற இடத்தில் இருந்த கட்டிடம் கிணறு ஆகியவை அனைத்தும் முன்பே இவர் கனவில் கண்டவை. இம்மாதிரி நாமும் நிறையக் கேள்விப்படுகிறோம். டெல்லியில் தன் அறிவியல் துறை நண்பர் குரேஷியின் வீட்டுக்கு எஸ்.என். நாகராசன் சென்றபோது, குரேசியின் துணைவியார் தம் வீட்டுக்கு வரும் ஒரு சூஃபியைப் பற்றி பதற்றத்தோடு சொன்ன செய்தியை நாகராசன் கூறினார். சூஃபி குரேசியின் வீட்டுக்கு வந்து பேசி கொண்டிருந்த சில சமயங்களில் வீடு முழுவதும் மலர்களாக கொட்டுமாம். கொட்டியவுடன் தன்னை யாரோ

அழைக்கிறார் என்று சொல்லிவிட்டு அவர் புறப்படுவாராம். இது பற்றிப் பேசிக் கொண்டிருந்த பொழுது எழுத்தாளர் சங்கர நாராயணன் தன் தந்தையின் அனுபவம் பற்றிச் சொன்னார். வீட்டில் மறந்து வைத்து விட்ட பாஸ்புக்கை இரு மந்திரவாதிகள் அவருக்குத் தருவித்து கொடுத்தார்களாம். உலக இயக்கம், நம் அறிவின் அளவைகளுக்கு கட்டுப்படுவதில்லை. அறிவு வாதத்தின் இறுக்கத்தில் முடங்கியிருக்கும் நம்மை நாமே தளர்த்திக் கொள்ளத்தான் வேண்டும். அறிவின் தீர்மானத்தில்தான் நாம் செயல்பட முடியும் என்பதையும் மறுப்பதற்கில்லை. அறிவு ஒரு ஊன்றுகோல். செல்லும் வழியில் போதிய வெளிச்சமில்லை. ●

உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரியில் முதல் இரண்டாண்டும் என் ஒரு சாலை நண்பர் திரு. அரங்கசாமி. இடையில் சில ஆண்டுகள் இவரை நான் சந்திக்கவில்லை. சென்ற மாதம் நான் இவரை தற்செயலாகச் சந்தித்தேன். இவர் கூறிய சில விவரங்கள் நம் அறிவுலக வரையறைகளை மாற்றிப்போடுகின்றன. சில ஆண்டுகளுக் முன்புதான் நிலத்தின் அடியிலுள்ள நீரூற்றுகளைக் கண்டறியும் திறன் தனக்கிருப்பதாகக் கண்டுகொண்டாராம். சில ரசாயனப் பொருட்களைப் பயன்படுத்துவதன் மூலம் நீரூற்றின் ஆழம் தன்மைபற்றி கூடியவரை சரியாக இவரால் கணித்தறிய முடிகிறதென்றார். நிலத்தின் எல்லைக்குள் முதலில் பூஜைசெய்கிறார். செம்பிலுள்ள நீரை ஒரு குழந்தை அல்லது தம் நண்பரிடம் கொடுத்து நிலத்தின் எல்லைக்குள் தனக்குத் தோன்றுமிடத்தில் வைத்து விடுங்கள் என்கிறார். அந்த இடம் நீருள்ள இடம் செம்பை எடுத்துக் கொண்டவர் தம் மன உணர்வுக்கு எதிர் திசையில் செல்ல முடிவதில்லை. காரில் ஏறி நிலத்தின் எல்லைக்குள் ஓட்டிச் செல்லும்பொழுது தனக்குத் தோன்றுமிடத்தில் காரோட்டியான தம் நண்பரை, நிறுத்தச் சொன்னார். செல்லும்பொழுது எஞ்சின் தானாக நின்றுவிட்டது. நண்பர் திகைத்தாராம். அது நீருள்ள இடம். பூஜை அறையில் இருந்தபடி, கர்னாடகாவிலிருந்து தன்னை அழைத்துச் செல்ல வந்த நண்பருக்கு அவர் நிலத்தில் நீரூற்று உள்ள இடத்தைச் சொல்லியிருக்கிறார். சிறு வயதிலிருந்தே எனக்கு நண்பரைத் தெரியும். நண்பர் பொய் சொல்லமாட்டார். இவர் புன்சிரிப்பின் அழகைப் பார்த்தவர்க்கு நான் சொல்லும் உண்மை தெரியும். இந்தத் திறன் தனக்கு எப்படி வந்தது என்று தானே ஆராய்ந்து பார்த்து அப்புறம் விட்டு விட்டாராம். பூமியோடு இயற்கையோடு பிரபஞ்சத்தோடு சில கோடுகளில் இவர் முற்றாக இணைந்திருக்கிறார். அறிவுக்கு அப்பால் இந்த இயக்கம் செயல்படுகிறது. அந்த இயக்கத்தின் செயலுக்கு முற்றிலும் தன்னை என் நண்பர் ஒப்படைத்திருக்கிறார். நமக்குள் தட்டுப்படும் இத்தகைய சில உணர்வுகளை அழித்தபிறகுதான் நாம் அறிவு வாதம் பேசுகிறோம். ●

- டிசம்பர் 1991

# நிகழ் - 21

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சி இன்னும் அப்படியே பதற்றத்தோடு நினைவில் பதிந்திருக்கிறது. என் மனைவிக்கும் எனக்கும் இடையில் ஏதோ ஒரு பிரச்னை. என்னை என் மனைவி மதிக்கவில்லை. காரணம் இருக்ககூடும், நான் ஒரு நல்ல கணவனாக இருந்ததில்லை. நீங்கள் ஒரு கம்யூனிஸ்ட் என்று தெரிந்திருந்தால் உங்களை கல்யாணம் செய்திருக்கமாட்டேன் என்பது அவள் கட்சி. இரவு, நேரம் கழித்து வீட்டுக்கு வருகிறேன். நண்பர்களோடு தொடர்ந்து பேசிக் கொண்டிருக்கிறேன். புத்தகம் படிக்கிறேன், புத்தகம் வாங்குகிறேன். குடும்ப பொறுப்பு எனக்கு இல்லை. மனைவியோடு கோயிலுக்குச் செல்வதில்லை. சினிமாவுக்குச் செல்வதில்லை. இப்படியெல்லாம் என் மீது அவளுக்கு கோபமும் வருத்தமும் சேர்ந்திருக்கின்றன. என்னை மதிக்காத அவள் கடவுளை மதிக்கிறாள். கடவுளைத் தவிர தனக்கு கதியில்லை என்கிறாள். எனது நிலைப்பாட்டில் நான் தவறு காணவில்லை. எனக்கு நண்பர்கள் தேவை, இலக்கியம் தேவை, மார்க்சியம் தேவை. யாருக்காகவும் இவற்றை நான் விட்டுக் கொடுக்க முடியாது. எனக்காகக் கூடவா என்று மனைவி கேட்கிறாள். ஒருநாள் முன்னிரவு, கடுமையாக இகழப்பட்ட நான் அவள் பெரிதும் நேசிக்கிற அந்த முருகன் படத்திற்கு அருகிலிருந்து விநாயகர் சிலையை எடுத்து அடிக்கிறேன். கண்ணாடி, படத்தின் சட்டம் உடைந்து நொறுங்கி கீழே கொட்டியது. கடவுளை நான் மறுக்கிறவன். உங்கள் மனைவியின் கடவுள் பக்தியை உங்களால் மாற்ற முடியவில்லையா என்று நண்பர்கள் கேட்டிருக்கிறார்கள். மாற்றுவதற்குக் கூட இது வழி என நான் நினைத்திருக்கலாம்.

அப்பொழுது என் மனைவி என்ன செய்தாள்? பயங்கரமாகக் கதறினாள். அவள் உடைந்து நொறுங்கி விட்டாள். உடைந்து கிழிந்து சிதறிய துணுக்குகளை ஒருசேரக் குவித்து வைத்து அப்படி அழுதாள். மறுநாளும், அப்புறம் நினைக்கிறபொழுதெல்லாம் அழுதாள். என் மனத்தில் ஏதோ ஒன்று சுத்தமாகக் கழன்றது. கடவுளே கதி என்று இருக்கிற மனிதர்களைத் துன்புறுத்தக் கூடாது. என் மனைவியின் நம்பிக்கை எத்தனை ஆழத்தில் பதிந்துள்ளது. இப்பொழுதும் என் மனைவி சொல்லுகிறாள். எனக்கு நிம்மதியில்லை குடும்பத்திற்காக உழைத்ததுபோதும். கடைசி வருடங்களில் நான் கடவுளுக்குச் சேவை செய்யவேண்டும். என் மனைவி அப்படி செய்வாள் என நம்புகிறேன்.

செய்வதும் செய்யாததும் அவள் விருப்பம். என் மீதும் உறவினர்கள் மீதும் உலகத்தின் மீதும் இல்லாத நம்பிக்கையை அவள் கடவுள் மீது வைத்திருக்கிறாள். ●

சில நாட்களுக்கு முன்பு நண்பர் கோபால் ஒரு வட இந்தியரை அழைத்து வந்தார். அவர் பெயர் பிரபோத்காந்த். சமூக இயலில் முதுகலைப் பட்டம் பெற்றவர். டெல்லி கல்லூரியில் விரிவுரையாளர். இந்தியாவை கால்நடையாகவே சுற்றி பார்க்க வேண்டும் என்று ஓராண்டுக்கு முன்பு கிளம்பியவர். வயது முப்பது. நிறைய அனுபவங்களைப் பெற்றிருக்கிறார். இந்தியாவில் எங்கு சென்றாலும், உங்களுக்கு திருமணமாகிவிட்டதா? எவ்வளவு குழந்தைகள்? எவ்வளவு சம்பளம்? என்ன வேலை? என்று கேட்கின்றனர் என்கிறார். திருமணத்தோடும் வேலையோடும்தான் வாழ்க்கையை தொடர்புபடுத்தி நம்மவர் பார்க்கின்றனர் என்று விமர்சனம் செய்கிறார். தமிழ்நாட்டில் கோவில்கள் அதிகம். மத நம்பிக்கையோடு மூடநம்பிக்கையும் அதிகம் என்கிறார். வட இந்தியாவில் இவ்வளவுக்கில்லை என்கிறார். சிதம்பரத்திற்கருகில் தான் சந்தித்த ஒரு என்ஜினியர் பற்றிச் சொன்னார். ஒரு சாது, அவரை பார்த்து இதற்காகத்தான் பிறந்தீர்களா என்று கேட்ட மறுநாள் வேலையிலிருந்து விலகினார். சிதம்பரம் கோவிலுக்கு ஒரு நாளைக்கு இரண்டு முறை சென்று திரும்புகிறார். மனைவி வழியாக வந்து சேர்ந்த நிலத்தையும் விற்றுக் கொண்டிருக்கிறார். எந்நேரமும் கடவுளைப் பற்றிப் பேசுகிறார். விற்றுத் தீர்ந்த பிறகு என்ன செய்வீர்களென்று அவர் மனைவியைக் கேட்டபோது, அவர் கூறிய பதில், இவர் எங்கோ போய்விடுவார். நானும் இரண்டு குழந்தைகளும் தற்கொலை செய்து கொள்வோம். பீகாரில், வங்காளத்தில் இப்படி ஒரு மனைவி சொல்லமாட்டாள் என்கிறார். வங்காளப் பெண், கணவனுக்கு இந்த மாதிரி சிறிதும் இடம் கொடுக்கமாட்டாள். அவளுக்கும்தான் கடவுள் நம்பிக்கை உண்டு என்கிறார். ●

பீகாரில் ஒரு கிராமத்தில் இளைஞர்களைக் கூட்டி ஒரு சாலையைப் பழுதுபார்க்க செய்வித்தது பற்றிச் சொல்கிறார். நக்சலைட் என்று முதலில் போலீசார் சந்தேகித்தார்களாம். ஊருக்கு நன்மை செய்வது உங்கள் சந்தேகத்திற்குரியது என்றால் நான் நக்சலைட் தான் என்று பதில் கூறினாராம். இதேபோல ஒரிசாவில் ஒரு நிகழ்ச்சி. வறண்ட கிராமம். நீர் இல்லை. இளைஞர்கள் சோம்பித் திரிகிறார்கள். இளைஞர்களை கூட்டுவித்து அவர்களோடு பேசி, நான்கு நாட்களில் ஒரு கிணறு தோண்ட வைத்திருக்கிறார். நூறு இளைஞர்கள் கடப்பாறை, மண்வெட்டி

எனக்கொண்டு வந்து தோண்டினார்கள். பாறையைத் தகர்த்தார்கள். எண்பது அடி ஆழத்தில் நீர் கிடைத்தது. 'பிரபோத் காந்த் கிணறு' என்று அதற்கு அவர்கள் பெயர் சூட்டினார்கள்.. இவர் மேற்கொண்ட பயணம் ஒரு புனிதப் பயணம். ஆண்டுக்கு ஒருமுறையாவது 100 கி.மீ. அல்லது 200 கி.மீ. தொலைவாவது இப்படி பயணம் செய்யலாம். மக்களையும் ஊர்களையும் பார்த்துத் திரும்பலாம். நம் மக்கள் மீது இதனால் நமக்கு அன்பு துளிர்க்கலாம். இவர்களுக்கு ஏதாவது நாம் அப்புறம் செய்யலாம். ●

கோவைக்கு வந்திருந்த நண்பர் தி.க. அழகிய சிங்கர் (ஆசிரியர் – விருட்சம்) அவர்களும் நானும் சிற்றிதழ்களின் வளர்ச்சி பற்றிப் பேசினோம். சிற்றிதழ்களுக்கிடையில் ஏதாவதொரு வடிவத்தில் உறவை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். சிற்றிதழ்களை மக்கள் மத்தியில் கொண்டு செல்வதில் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டும். சிற்றிதழ்கள் எழுத்துப் பயிற்சிக்காக, அல்லது எழுத்தாளர்களை உருவாக்குவதற்காகவும், தொடர்ந்து எழுத்தாளர்களின் சமூக உணர்வு, கலை உணர்வு மேம்பாட்டுக்காகவும் நடத்தப்படுவதில் தவறில்லை. இதற்கு மேல் சிற்றிதழ்கள் தம் ஆர்வங்களையும் கடமைகளையும் விரிவுபடுத்திக் கொண்டிருக்கின்றன. இந்நிலையில் ஒவ்வொரு இதழுக்கும் ஏதாவதொரு கருத்தியல் ஆதாரமாக இருக்கத்தான் வேண்டும். தவிர, கவிதை, சிறுகதைகள், திறனாய்வுகள் இவற்றின் தரம் தொடர்ந்து உயர வேண்டும். நம் சூழலின் பிரச்னைகளோடு வைத்து இவை பேசப்படவேண்டும். சிற்றிதழ்கள் குழு மனப்பான்மையில் முடங்கியுள்ளன என்று சிலர் இகழ்ந்துரைப்பதை நாம் எந்த அளவில் பொருட்படுத்தலாம் என்றும் சிந்திக்க வேண்டும். ஏதாவதொரு இடத்தில் சந்தித்து, கருத்தரங்கு, கட்டுரை என்ற வடிவில் இல்லாமல், நம் பிரச்னைகளைப் பேசிக்கொள்ள வேண்டும். சிற்றிதழ்கள் வெளிவருவதில் இவற்றின் ஆக்கத்தில் பரப்பலில் எழுத்தாளர்களுக்கும், பொறுப்பு உண்டு. சமூக உணர்வு, கலை உணர்வு ஆகியவற்றின் தொடர்பாக மாற்றுக் கருத்தியலோடு உறவு கொள்வதன் மூலம் நம் கருத்தியலின் தரம்மேம்படும். நல்ல இலக்கியத்தை, இலக்கிய நூல்களை அறிவு நூல்களைப் பரப்பும் பொறுப்பை நாம் மேற்கொள்ளாவிட்டால் சிற்றிதழ்கள் வளர்ச்சி சாத்தியமில்லை. அவர்கள் போன்ற அமைப்புக்களின் பங்கு பெறலும் இம்முறையில் தேவை. மே மாதத்தில் சென்னை அல்லது திருச்சியில் நாம் சந்திப்பது பற்றி சிற்றிதழ் நண்பர்கள் திட்டமிட வேண்டும். தமிழ்ச் சூழலில் நம்மைத் தக்கவைத்துக் கொள்ள இந்தச் சந்திப்பு நமக்கு உதவும். வலுவான ஓர் அறிவியக்கம் என்ற ஒரு ஆதாரத்தில்தான் நாம் நிற்க முடியும். இதுபற்றியெல்லாம்

நண்பர்கள் தொடர்ந்து சிந்தித்துச் செயல்பட வேண்டுமென்று நானும் அழகிய சிங்கரும் பிற நண்பர்களை வேண்டுகிறோம். தயவு செய்து எங்களுக்கு எழுதுங்கள்.●

கோவை பள்ளி ஒன்றில் தங்கி இருக்கிற கர்நாடகத் தமிழர் ஒருவரின் கதை இது. இவர் பெயர் ராஜூ, நஞ்சன் கூடு ராஜன் நகர் பகுதிக்கு அருகில் வாழ்ந்தவர். 17 ஏக்கர் நிலம், 75 ஆடுகள், 4 உழவு மாடு, ஒரு பசுமாடு ஆகியவற்றுக்கு இவர் அங்கு சொந்தக்காரர். எல்லாவற்றையும் இழந்து இரவில் தப்பி, இரவு முழுவதும் இலைகளுக்கடியில் படுத்து, கால் உணர்வு அற்றுப் போனவர். மறுநாள் காலை லாரியில் ஏற்றப்பட்டு கோவைக்கு வந்து சேர்ந்தார். கையில் மாவுக்கட்டு, தடி ஊன்றி எழுதுகிறார். இவர் கூறினார்; சிறுவயதில் கர்நாடகம் போனேன். தமிழ்நாட்டில் எனக்குப் பூர்வீகம் இல்லை. 30 வருடங்களாக வறண்ட நிலத்தைப் பக்குவப்படுத்தி வாழை, பருத்தி வளர்த்தேன். நம் விவசாயம் கடப்பாறை, ஏர் சம்பந்தப்பட்டது. கன்னடியர்களுக்கு ஏர் மட்டும் தான் தெரியும். பருத்தி, வீரியவிதைகள் மூன்று அடிக்கு இரண்டு என்று நாம் பயிரிடுகிறோம். அவர்கள் ஏரால் மட்டும் உழவு செய்து எட்டு / பத்து விதைகளை ஒரு கொத்தாக போடுவார்கள். இப்பொழுது அவர்கள் நம்மிடமிருந்து விவசாயத்தைத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். தமிழ் மக்களுக்கு பாதுகாப்பு கொடுத்த ஊர்க்கவுண்டர் வீட்டுக்கு ஒரு கும்பல் வந்தது. அவரது ஒரு பெண்ணை துணியைப் பறித்து முலைகளை அறுத்தார்கள். இன்னொரு பெண்ணை இழுத்துச் சென்றார்கள். எங்கள் பகுதியில் ஒரு தாயையும் அவரது இரண்டு பெண்களையும் இழுத்து சென்று வயல் வெளியில் வைத்து நாசம் செய்தார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என எங்களுக்குத் தெரியாது. இரவில் வேன், லாரியில் ஒரு பெரும் கும்பல் வந்தது. வீடுகளைத் தாழிட்டோம். கூரையை பிரித்து தீப்பந்தங்களை உள்ளே வீசினார்கள். உயிர் பிழைக்க தப்பி ஓடினோம். பத்து நாட்களுக்குப் பிறகுதான் என் மனைவியையும் பெண்களையும் பார்த்தேன்.

கொடுத்து பழகிய கைகளில் பிறரிடம் உணவு வாங்கி உண்பதை எண்ணி அழுகிறார். இனி எப்படித் திரும்பிச் செல்வது என்று கலங்குகிறார். திரும்பிச் சென்றாலும் வட்டல் நாகராஜின் ஆட்கள் விட்டு வைக்க மாட்டார்கள் என்று அஞ்சுகிறார். உயிர் பிழைத்து வந்த – தன் ஊரைச் சார்ந்த 25 குடும்பங்களில் இவர் குடும்பமும் ஒன்று.

**- தாமரை ஆறுமுகம்**

நண்பர்கள் சந்திக்கும்பொழுதெல்லாம் இப்பொழுது ஒரு பிரச்னை கடுமையாக, மனவருத்தத்துடன் விவாதிக்கப்படுகிறது. தினமணியும் கணையாழியும் எழும்பியுள்ள பிரச்னை பற்றித்தான் இந்த விவாதம். இந்த விவாதத்திற்கு இப்பொழுது என்ன தேவை? வரலாறு, மானுடவியல், மொழியியல் ஆகியவற்றில் தேர்ந்த ஆய்வாளர்கள் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக, இதுவரை முடிவு காணாமல் விவாதித்து வருகிற இப்பிரச்னை, பொதுமக்கள் வாசிப்புக்குரிய தினமணிப் பத்திரிக்கை விவாதங்களிலா முடிவு பெறும்? ஆய்வு தினமணியின் நோக்கமா? இருக்கமுடியாது.

அப்படியானால் தினமணியின் நோக்கம்தான் என்ன?

தினமணிக்கு ஒரு அரசியல் உண்டு. தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளிலிருந்து நிதி உதவி பெறாமல் இந்தியாவுக்கு வளர்ச்சி இல்லை; தொழில் வளர்ச்சிக்கு சோசலிசம் பயன்படாது, தனியார்வசம் தொழில்துறை (பொதுத்துறை) ஒப்படைக்கப்படுவதன் மூலம்தான் தொழில் வளர்ச்சி பெறும். இடது சாரிகள் இதை இன்னும் தெரிந்து கொள்ளவில்லை. இப்படியெல்லாம் தொடர்ந்து விடாப்பிடியாக விவாதிக்கிறது தினமணி. அடித்தள மக்களின் விடுதலை பற்றி தினமணிக்கு அக்கறை இல்லை. மண்டல் குழுவின் பரிந்துரைகள் செயல்பட வேண்டுமென்பதில் தினமணிக்கு அக்கறை இல்லை, தினமணியின் அரசியலை வைத்துத்தான், ஆரியர் – திராவிடர் பிரச்னையை இப்பொழுது ஏன் எழுப்புகிறது என்பதைப் புரிந்து கொள்ள முடியும். முதலாளிகள், பார்ப்பனர் வாழ்வுக்கான அரசியல், பொருளியல் அமைப்பை உறுதிப்படுத்த வேண்டும். பிற சமூகப் பிரிவு இதற்குச் சேவை செய்ய வேண்டும். இன்றுள்ள அரசியல் சூழலில் இதைச் செயல்படுத்த முடியும். அதாவது, ஏகாதிபத்திய உதவியோடு இந்திய அரசின் மைய அதிகாரத்தைப் பலப்படுத்தி, அதன் மூலம் இந்தியா முழுவதும் விடுதலை எழுச்சியை, அடித்தள மக்களின் எழுச்சியை ஒடுக்க வேண்டும். இதுதான் தினமணியின் அரசியல், தமிழ்நாட்டில் ஒரு நெருக்கடி நிலையை மைய அரசும் மாநில அரசும் செயல்படுத்தும் இன்றைய சூழல்தான். இந்த அரசியலை செயல்படுத்துவதற்கான தக்க சமயம். இந்து மத அடிப்படைவாதத்தில் மக்கள் இன்று அமிழ்த்தப்படுகிறார்கள். திராவிட இயக்கமும் இன்று முன்னைய தீவிரத்தோடு செயல்படவில்லை. சோவியத் யூனியன் தகர்வைத் தொடர்ந்து மார்க்சிய இயக்கம் செயலற்று இருக்கிறது, இந்தச் சூழல்தான் தினமணிக்கான தக்க தருணம். தினமணியின் அரசியலை குறிவைத்துத்தான் ஆரிய திராவிடர் பிரச்னையை நாம் கொண்டு செல்ல வேண்டும். ●

- மார்ச் 1992

# நிகழ் - 25

புதிய தலைமுறையிலிருந்து (67–68) நான் வெளியேறிய வெளியேற்றப்பட்ட பிறகு 70 களின் தொடக்கத்தில் ஒரு மே தினத்தன்று விசாரணைக்காக சிறப்புப் புலனாய்வுத்துறை என்னையும் என்னைப் போல இன்னும் பலரையும் தன் அலுவலகத்திற்குச் கொண்டு சென்றது. நாங்கள் நக்சலைட்டுகள் என்று இந்த விசாரணை. குடும்ப நிலவரம், மார்க்சியத்திற்கு வந்த பாதை, பாராளுமன்றப் பாதையில் ஏன் உடன்பாடில்லை, மாவோவைப் பற்றி உங்கள் கருத்து என்ன, இப்படி பல கேள்விகள். இவற்றுக்கெல்லாம் உடனுக்குடன் பதில் தர வேண்டும். திருக்குறள் படித்த நீ புரட்சி பற்றி எப்படி பேசலாம், என்றெல்லாம் அதட்டல் தோரணையில் கேள்விகள் அந்தத் தொடக்கக் காலத்தில் தோழர் அப்பு கட்சி அமைப்பின் தலைவர். அவர் சம்மதத்தோடுதான் 'புதிய தலைமுறையில் கட்டுரைகளை வெளியிடுகிறீர்களா என்று கேள்வி. இல்லை என்பது என் பதில். நான் 'ஆம்' என்று ஒப்புக்கொண்டதாக ஆய்வாளர் ஆங்கிலத்தில் எழுதுகிறார். நான் மறுத்தபோது, அப்புறம், தாளை மறைத்து வைத்துக் கொண்டு எழுதுகிறார். திடீரென ஒரு கேள்வி. 'புதிய தலைமுறை' ஆசிரியர் குழுவில் நீங்கள் இருந்தீர்களா? சில கணங்கள் தீவிர சிந்தனை. ஏற்கனவே நண்பர் எஸ்.வி. ஆருடன் இப்படி வரக்கூடிய விசாரணையின்போது எப்படி பதில் சொல்வது என்று பேசி முடிவு செய்திருந்தபடி 'ஆம்' என்றேன். காவல்துறைக்கு நன்கு தெரிந்த சில விவரங்களை மறைத்துப் பயனில்லை. இன்னொருவர் பெயர் சொல்லி அவர் இருந்தாரா என்று கேட்கிறார். 'ஆம்' என்றேன். 'ஆதி' என்மதிப்புக்குரிய நீண்டகால நண்பர். காவல்துறையின் கண்காணிப்புக்கும் துன்புறுத்தலுக்கும் உள்ளானவர். மரபுக் கவிதை அவர் விருப்பத்திற்கு அருமையாக வளைந்து கொடுக்கும். 'புதிய தலைமுறை'யிலிருந்து நான் வெளியேறிய பிறகு அவரோடு நெருக்கமான உறவு இல்லை. இடையில் என்னென்னவோ நடந்திருக்கின்றன. 'ஆம்' என்று நான் கூறியவுடன் ஆதி அழைக்கப்பட்டார். அவரை நோக்கி வசைமொழி. ஆசிரியர் குழுவில் இருந்தீரா என்று அவரை நோக்கி கேள்வி இல்லை என மறுக்கிறார். மீண்டும் சில வசைச் சொற்கள். காவல்துறைக்கு ஏற்கனவே தெரிந்திருக்கக்கூடிய, இப்பொழுது ஒப்புக்கொள்வதால் பாதிப்பு எதுவும் நேராது என்ற நிலையில் இந்தச் செய்தியை இவர் ஏன் மறுக்க வேண்டும்? அப்படியானால் என்னைப் பற்றி அவர் என்ன நினைப்பார் என்ற பதற்றம். மாலையில் வீடுகளுக்கு அனுப்பப்பட்டோம். மறுநாள் ஆதியைச் சந்தித்தேன். என்மீது அவருக்கு பலத்த சந்தேகம். 'என்னைப் பற்றி எப்படி சொல்லலாம்' என்று கேட்டார். ஒன்றை ஒப்புக்கொண்டால்

இன்னும் பலவற்றையும் ஒப்புக்கொள்ள வைப்பார்கள். முற்றாக மறுத்துவிட வேண்டும். இது அவர் அணுகல் முறை. எத்தனையோ கடிதங்கள் உடைக்கப்பட்டுத்தான் வந்து சேர்ந்தன. ஆதியின் அறையிலிருந்தும் 'புதிய தலைமுறை' அலுவலகத்திலிருந்தும் நிறைய விவரங்கள் எடுத்துச் செல்லப்பட்டன. சிலவற்றை ஒப்புக்கொள்வதன் மூலம் இன்னும் சிலவற்றை மறைக்க முடியும். மறுக்கவும் வேண்டும். இப்படி ஆதி சிந்திக்கவில்லை. அவர் நிலைபாட்டை நான் தவறு என்று சொல்லமாட்டேன். என்னைப் பொறுத்தவரை எனது அணுகுமுறையும் தவறு அல்ல. ஆனால் அதன்பிறகு இன்றுவரை ஆதியின் மூலம் என்மீது சொல்லப்படும் அவதூறு, எனக்குள் உறைந்திருக்கிற மனவேதனை இதனோடுதான் நான் வாழவேண்டும். நான் ஒப்புக்கொண்ட செய்தியால் யாருக்கும் தீங்கு நேரவுமில்லை. எதை மறைத்தேன் என்று கேட்டால், சொல்வதற்கில்லை. ●

பூ.சா.கோ. கலைக்கல்லூரி சிந்தனை மன்றத்தில் (6–3–93) மாணவர்களுக்கு சிறுகதை எழுத பயிற்சி கொடுக்கிறார் சுஜாதா. தன் முன்னுரையில் மனுஷ்ய புத்திரனின், 'கால்களின் ஆல்பம்' என்ற கவிதையில் எழுதப்பட்ட சிறுகதையைக் கண்ணீர் தளும்ப எடுத்துரைத்தார் சுஜாதா. மண்டபத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்புகள். என்னருகில் விஜயா பதிப்பகம் திரு. வேலாயுதம் அமர்ந்திருக்கிறார். அவருக்குள் சில நினைவுகள் அலைமோதுகின்றன. சிறுவயது. பசி வயிற்றைத் தின்று கொண்டிருக்க இன்னொருவர்க்கு அடுக்கில் உணவு எடுத்துச் செல்ல வேண்டும். பசி இடைவழியில் அடுக்கைத் திறந்து வைத்து காய்கறியில் கொஞ்சம் என எடுத்துக் கொள்கிறார். எடுத்துக்கொண்டது தெரியாதபடி அளவு குறைச்சலாக எடுத்துக் கொள்கிறார். இப்படி பல நாட்கள் பிற்காலத்தில் வாழ்க்கைச் சக்கரத்தில் ஏற்றத் தாழ்வுகள் இவரிடமிருந்து பெற்ற கடனை சிரமத்திற்கிடையில் அவர் திருப்பித் தருகிறார். தன்கைக்கு வந்த தொகையை ஒரு கடிதத்தோடு வேலாயுதம் அவர்கள் அனுப்பி வைக்கிறார். உங்கள் அடுக்கிலிருந்து உணவை எடுத்து உண்டேன். நான் வளர்ந்து ஆளாகியதில் உங்களுக்குப் பங்கு உண்டு. நான் செய்த குற்றம் என் நெஞ்சை இன்னும் துன்புறுத்துகிறது. இப்பொழுதாவது ஒப்புக்கொண்டு மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். உங்கள் தொகையை நான் திருப்பி அனுப்புகிறேன். இதைச் சொல்லும்பொழுது திரு. வேலாயுதம் மனம் பொருமுகிறார்.

வாழ்வில் இப்படி அனுபவம் பெற்றவர்க்குத்தான் இலக்கியம் தெரியும். மனிதனைத் தெரியும். படைப்பின் தூண்டுதல் தெரியும் என்கிறார். இவருக்குள் நெடுங்காலமாய்க் கிடந்தது இந்த அருமையான சிறுகதை. ●

ஒரு பத்தாண்டுகளுக்கு முன் எனக்கு அறிமுகமானவர் சகோதரி லயோலா அவர்கள். இருதய அறுவைச் சிகிச்சைக்குப் பின் மருத்துவமனையில் அவரைப் பார்த்தேன். இப்போது ஓராண்டுக்கு இடையில் நெருக்கமாக இருந்து அவரைப் பற்றித் தெரிந்து கொள்கிறபோது, எனக்கு ஏற்படும் வியப்புணர்வுக்கு அளவில்லை. அன்பு என்பதை அவரிடமிருந்து நாம் கற்றுக் கொள்ள வேண்டும். தேவையறிந்து ஓசையில்லாமல் உதவி செய்கிறார். அறுவை சிகிச்சைக்குப் பின் இன்னும் ஒரு பெரிய நோய். ஒரு நாளைக்கு எத்தனை மாத்திரைகள் உட்கொள்வது என்ற சலிப்பு. கல்லூரி வேலை வேதனையை மறக்க மேலும் சில பணிகள். 84–ல் முனைவர் பட்டத்திற்காக அவர் எழுதிய ஆய்வேட்டின் சில இயல்களை அண்மையில் படித்தேன். 'விவிலியத்தில் மனித நேயம்' என்பது அவரது ஆய்வு மார்க்சியம், மனித நேயம், புரட்சி என்பது பல காலம் படித்து, பலரோடு உறவு கொண்டு பகைத்து, கசந்து, மார்க்சியத்தின் ஆழம் தெரிந்திருக்கிறதாகக் கருதிக் கொண்டிருக்கும் எனக்குள் பெரும் வியப்பு. ஏசு ஒரு மனிதர். புரட்சிக்காரர். தீர்க்கதரிசிகள் புரட்சியை வேண்டியவர்கள். இப்படி விரிந்து செல்லுகிறது அவரது ஆய்வு. தன் இருப்பிடத்தில் தான் இயங்கும் தளங்களில் இவர் எப்பொழுதும் ஒரு கலகக்காரர். மத எல்லைக்குள்ளிருந்து வெளிப்படுவது இவரது கலகக்குரல் இவரது ஆய்வேடு அச்சில் வரவேண்டும். ●

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமை. வ.உ.சி. பூங்காவில் களம் நண்பர்கள் சந்தித்துக் கொள்கிறோம். இரண்டொரு முறை எங்களுக்கு நெருக்கமாக வந்து அப்புறம் எங்கள் விவாதங்களிலிருந்து விலகி சற்று தொலைவில் அமர்ந்து எங்களைக் கவனித்தவர், திரு. வ.கி. துறையன் அவர்கள். இப்பொழுது எங்களோடு நெருக்கமாக இருந்து உறவாடுகிறார். இவருக்கு வயது 69–க்குமேல். நிறைய புத்தகங்கள் வாங்குகிறார். படிக்கிறார் தேவைப்படுகிற நண்பர்களுக்குக் கொடுத்து விடுகிறார். மூளைச்சிக்கலை உருவாக்கும் நூல்களை இவர் படிக்க விரும்புவதில்லை. ஆன்மீகத்தில் இவருக்கு அக்கறை அதிகம். ஆனால் தியானத்திற்குள் தன்னைச் சிறைப் பிடித்துக் கொள்கிற ஆன்மீகம் இருவருக்கு வேண்டாம். சோதிடர்களிடம் இவர் செல்வதில்லை. அதிசயங்கள் செய்வதாகச் சொல்லும் சன்னியாசிகளிடம் இவருக்கு மரியாதை இல்லை. கோவைக்கு அருகில் ஒரு கிராமத்தில் வளமாக வாழ்ந்தவர். இளம்வயதில் திமுக தலைவர்களை தன் ஊருக்கு அழைத்துச் சென்று பேச வைத்திருக்கிறார். ஒரு முன்னோடி விவசாயி என்ற முறையில் நவீன உத்திகளைப் பயன்படுத்தி அதன் பலன்களைப் பார்த்திருக்கிறார், அதிகாரிகளிடம் தன் ஊர் மக்களை அழைத்துச் சென்று நியாயமான உதவிகளைப் பெற்றுத் தந்திருக்கிறார். தன் நிலத்தில் ஒரு பகுதியை ஆசிரியர் வீடுகட்டிக் கொள்ள இலவசமாகத்

தந்தார். இனி தேவையில்லை என்ற நிலை வந்தவுடன் தன் நிலத்தை விற்று விட்டு கோவையில் குடியேறியிருக்கிற இவர் 40/50 ஆண்டுகளுக்கு முற்பட்ட தன் கிராமத்து / தன் சமூகத்தின் கதையை தன்வாழ்வியல் அனுபவங்களை ஒரு ராமகிருஷ்ணர் நம்முன் அமர்ந்து கதை சொல்வது போல சொல்கிறார். கற்பு என்பது புண்ணாக்கு என்று ஒரு எழுத்தாளர் பதில் தந்தபோது, 'புண்ணாக்கைப்பற்றி ஒரு விவசாயி என்ற முறையில் எனக்குத் தெரியும். உனக்கு என்ன தெரியும்' என்று எழுதியதைச் சொல்கிறார். ஒருநாள் 250 நூல்களை எடுத்துவந்து என்னிடம் தந்து 'நண்பர்களுக்குக் கொடுங்கள். அவர்கள் படிக்கட்டும்' என்று நூல்களைக் கொடுத்து விட்டுச் சென்றார். சமூக நலத்தை நெஞ்சில் நிறுத்தி வாழ்ந்த வாழ்கின்ற பெரியவர். இவரது கதையை நாடாக்களில் பதிவு செய்தேன். அடுத்த சில மாதங்களில் இவரது கதை அச்சில் வெளிவரும். நம் கிராமங்களின் கதைகளை நாம் பெரியவர்களின் கதைகளை நம் கால வரலாற்றை நாம் பதிவு செய்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு செல்லத்தான் வேண்டும். இப்படிப் பதிவு செய்யவேண்டிய கதைகள் ஒரு கோடி தேறலாம். நாம் செய்யத்தான் வேண்டும்.●

ஈரோடு 21–3–93இல் பார்வை சார்பில் முற்பகலில் நண்பர், வசந்தகுமாரின் 'பாரதிதாசன் – வரலாற்றுத் தேவை' நூல் வெளியீடு. பிற்பகலில் நண்பர் தேவிபாரதியின் 'பலி' சிறுகதைத் தொகுப்பு வெளியீடு. இடைநேரத்தில் பேராசிரியர் எம். கே. சுப்பிரமணியம் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தோம். கல்லூரி முதல்வராக இருந்து ஓய்வு பெற்றவர். பெரியாரைத் தன் ஒரே தலைவராக இன்றும் தன் நெஞ்சில் தாங்கியிருப்பவர் பெரியார் நினைவில் தோய்ந்து சில நிகழ்ச்சிகளைக் கூறினார். இந்திராகாந்தி அரசில் அமைச்சராக இருந்தவர் டாக்டர் சந்திரசேகர், மக்கள்தொகை ஆய்வில் உலகப் புகழ் பெற்றவர். பெரியாரைப் பார்க்க தன் 'இம்பாலா' காரில் சென்றாராம். அவரது சின்ன ஆசை.

சந்திரசேகரின் உறவினர்களை பெரியார் நினைவுகூர்ந்தார். இந்த முதுமையிலும் உடல்நலத்தோடு அவர் இருப்பது எப்படி என்று கேட்ட சந்திரசேகருக்கு பெரியார் தந்த பதில்: "சின்ன வயசிலே சேத்துல கிடந்த நெல்லிக்காய்களைப் பொறுக்கித் தின்றிருக்கிறேன்". "ராஜாஜி கூறிய அறிவுரைபடியா மணியம்மையை பெரியார் மணந்து கொண்டார்?" என்று கேட்டால், பேராசிரியர் சுப்பிரமணியம் சொல்கிறார் : "ராஜாஜி வேண்டாம் என்றுதான் கூறினார், பெரியார் ஈரோடு வந்தபோதும் பார்த்திருக்கிறோம். உறவினர்கள் அவருக்கு உதவியாக இல்லை. உடனிருந்து அவருக்கு சில பணிவிடைகள் செய்ய வேண்டும். மணியம்மைதான் உடனிருந்து ஊழியம்

செய்தார். தொண்டர்கள் இழிவாகப் பேசினார்கள். இந்நிலையில் பெரியார் திருமணம் என்ற பெயரில் இந்த ஏற்பாடு செய்து கொண்டார்". மணியம்மையின் அர்ப்பணிப்பை மனம் நெகிழ்ந்து பேராசிரியர் சொல்லுகிறார். மணியம்மைக்குத் தான் இந்த அர்ப்பணிப்பு இருந்ததென்று சொல்லுகிறார். கேட்கும்போது நம் மனமும் சேர்ந்து உருகுகிறது. ராஜாஜியைத் தான் திட்டலாம். மற்றவர் திட்டுவதைப் பெரியாரால் பொறுக்க முடியாது. தன் நண்பரிடம் பெரியாருக்கு அவ்வளவு மரியாதை. டி.எஸ்.எஸ். ராஜன் தனக்கு எதிராக இயக்கம் தொடங்கியபோது ஏன் அவரை நீங்கள் தாக்கவில்லை என்று கேட்டபோது பெரியார் கூறினாராம் : "தாட்சண்யம்". 52-ல் அரசியல் சட்டத்தை எரித்துச் சிறை சென்ற திராவிடத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த தலித் மக்கள் பிறகு விடுதலையாகி வந்து பார்த்தபொழுது அவர்களின் ஊரில் மனைவி மக்கள் இல்லை. வறுமைக் கொடுமை காரணமாக இடம் பெயர்ந்து போய்விட்டார்கள். தொழிற்சங்கம் அழிந்தது என்று பேராசிரியர் கூறியபோது நெஞ்சம் விம்மத்தான் செய்தது.●

தி.மு.க. 7-ஆவது மாநில மாநாடு. தமிழர் கூட்டம் வெள்ளம்போல கரையிலேனும் அமர்ந்திருக்க ஆவல். இரண்டு நாட்கள். அறிவனும் நானும் 10 மணி நேரம் அமர்ந்திருந்தோம். இந்திக்கு இதுவே எதிர்ப்புப் போராக இருக்கவேண்டும். தலைவர் ஆணையிட வேண்டும். இப்படி தொடர்ந்து வேண்டுகோள். தலைமுறை மாறிவிட்டது. அண்ணாவின் 'ஆர்யமாயை' படியுங்கள் என்று வற்புறுத்துகிறார் அப்துல்ரகுமான். சிங்காரவேலர், தியாகராயர் என்று முன்னவர்களை அறிமுகப்படுத்த வேண்டியிருக்கிறது. வை.கோ. பெயர் சொல்லுகிறபொழுதெல்லாம் உற்சாகமான கைதட்டல். தலைமைக்கு இது எதிர்ப்பா, எச்சரிக்கையா. இடைநேரத்தில் தலைவர் துதிப்பாடல்கள். திரைப்படம் குறிப்பாக, இந்தித் திரைப்பட ராகங்கள். நிறையவே கலைக்குழுக்கள் இருக்கின்றன. உரையாற்றக் கிடைத்த வாய்ப்புக்காக, தலைவர் தாளில் வணக்கங்கள். தம் மாவட்டத்திற்கே தலைவர் உரிமையுடையவர் என்ற புகழாரங்கள். இடையில் சில கதைகள். அழுகல் வியாபாரியென பெரியாரை அழகிரி கோபித்த கதை. காந்தி இந்தியில் எழுதிய கடிதத்திற்கு ராஜாஜி தமிழில் பதில் எழுதிய கதை. இறுதிப் போர் என்னவாக இருக்கும் என்ற பேரார்வம். மாநாட்டுச் செலவு 55 லட்சம். வசூல் 86 லட்சம். இடப்பட்ட தீ பற்றி எத்தனை அர்த்தங்களில் பேச்சு. இறுதியாக தலைவர் உரை. ஏப்ரல் 20-ல் ரயில் நிறுத்தம். இந்திப் பலகை அழிப்பு - எப்பொழுதும் எங்கும். 75 மாநில மாநாட்டு முடிவில் ஏற்பட்ட அதேசோர்வு. "அதிகாரத்தைப் பற்றிக்கொள்ளும் அரசியல் நாடகத்தில் அட்டைக் கத்தியோடு இன்னும் ஒரு போர். இந்த நாடகத்தில் இறுதிப் போர் என எதுவும் இல்லை." ●

- ஏப்ரல் 1993

# ஞானியின் படைப்புகள்

- தொகுப்பு : கோவ்வவாணன்

## 1. இந்திய வாழ்க்கையும் மார்க்ஸியமும் விவாதத்திற்கான ஒரு முன்னுரை 1976

தனக்கு இன்றியமையாத தேவைகள் இல்லாமல் ஒருவன் மார்க்சியத்தை ஏற்கக்கூடாது என்று தொடங்கி இந்த நூலில் இந்திய வாழ்க்கைக்கும் மார்க்சியத்திற்கும் இடையிலான உறவை ஆராய்கிறார், இந்தியர்கள் நம்பிக்கை கொள்ளும் இறை என்பதன் உள்ளடக்கம் குறித்து ஆராய்கிறார், கடவுளின் உருவங்கள், சடங்குகள், கதைகள் முதலியவற்றுக்கு அப்பால் விரிந்திருக்கும், இறை (BEING) குறித்து ஞானி பேசுகிறார்.

கடவுள் என்ற கருத்திற்கு ஆழ்ந்து சென்றால் பிரபஞ்சம், வரலாறு, சமூகம் என்பதைத்தான் தரிசிக்கிறோம் என்ற தாகூரின் கருத்தைத் தம் ஆய்விற்கு ஆதாரமாக ஞானி சொல்கிறார், வேற்றுமைக்குள் ஒற்றுமை என்ற இந்தியக் கலாச்சாரம் குறித்து நம்பிக்கையோடு பேசுகிறார் ஞானி. அனைத்தும் பிரம்மமென்றால் வர்க்க வேறுபாடுகள் முதலியவற்றை இந்தியச் சமயம் மற்றும் பண்பாடு மறுத்தாக வேண்டும். சமயங்கள் கூறும் மோட்சம் - முக்தி - நிர்வாணம் முதலியவை மனித விடுதலையைக் குறித்த கருத்தாக்கங்களாகவே இருக்க முடியும்.

இவ்வாறு இந்திய வாழ்க்கை என்பது மார்க்சியப் பார்வையின் வழியேதான் செரித்துக் கொள்ளக்கூடியதாக இருக்க முடியும் என்கிறார் ஞானி. மதங்களின் உருவங்கள் கலைத்து அவற்றின் ஆதாரங்களுக்குள் நாம் செல்ல வேண்டும் அங்குதான் இறையை நமக்குள்ளும் காணமுடியும்.

## 2. மணல் மேட்டில் ஓர் அழகிய வீடு 1979

புகழ்பெற்ற மெய்யியலாளராகிய ஜே.கிருஷ்ணமூர்த்தி குறித்து அவர் பாணியிலேயே எழுதப்பட்ட குறுநூல் இது. ஜே.கே.வின் நூல்களிலிருந்து திரட்டிய சுமார் முப்பது மேற்கோள்கள் - ஒவ்வொன்றின் மீதும் ஞானி தன்னுடைய கருத்துரைகளை எழுதுகிறார். ஜே.கே.வின் கருத்துரைகளை "மணல் மேட்டில் ஓர் அழகிய வீடு" என்று வர்ணிக்கிறார். ஜே.கே.வின் மீது ஆழ்ந்த மரியாதையோடு ஜே.கே. பற்றிய விளக்கங்களையும் விமர்சனங்களையும் ஞானி முன் வைக்கிறார். ஜே.கே.வின் நிதர்சனம் - விழிப்புணர்வை ஞானி ஏற்கிறார். நிகழில் மனிதன் இருக்கத்தான் வேண்டும். பழைய கருத்தோட்டங்களில் மனிதன் உறைந்து விட கூடாது. வர்க்கப் போர் சூழலிலும் மனிதனுக்கு விழிப்புணர்வின் அடிப்படையிலான ஞானம் தேவை. முன்னையதின் தொடர்பில்லாமல் மனிதன் இல்லை. முன்னையதின் தொடர்பிலிருந்து மனிதன் தன்னைப் புதுப்பித்துக் கொள்வது தேவை மட்டுமல்ல சாத்தியமும் தான். ஜே.கே.வுக்குள் சமயமில்லை. எனினும் சமயத்தன்மை தொடர்கிறது. ஜே.கே.வுக்குள்ளும் தொலைவில் ஒரு கடவுள் இருக்கிறார். காலமற்றது, நமக்கு புலப்படாதது? உட்காட்சி ஆகிய சொற்கள் வழியே இவர் தனக்குள் ஒரு கடவுளை கொண்டிருக்கிறார். மார்க்சியம் தனக்கு எதிரியாக ஜே.கே.வைக் கருத வேண்டியதில்லை. ஜே.கே.வின் ஆதாரத்தில் வாழ்வைக் கட்ட முடியாது எனினும் ஜே.கே.வின் ஒளி நமக்குத் தேவை.

## 3. கல்லிகை 1984, 1996

எழுபதுகளின் தொடக்கத்தில் கோவையில் தோன்றி வளர்ந்த வானம்பாடி இயக்கத்தின் தூண்டுதலோடு ஞானி எழுதிய நீண்ட கவிதை - குறுங் காவியம் "கல்லிகை" நவீனகாலச் சூழலில் அகலிகையின் கதை புதுமைப்பித்தன் தொடங்கி எத்தனையோ எழுத்தாளர்களின் கைவண்ணத்தோடு புத்தாக்கம் பெற்றுள்ளது. ஞானியும் மார்க்சிய நோக்கில் கல்லான அகலிகையின் கதையை புதுக் கவிதை பாணியில் செய்திருக்கிறார். ஞானிக்குள் இயங்கும் கவித்துவத்திற்கு இந்தக் கவிதை சான்று. வரலாற்றில் உடைமையும் அரசும் தோன்றிய காலத்திலிருந்தே மனிதன் தனக்குள் பிளவுபட்டுவிட்டான். உடைமையும் அரசும் ஒரு பக்கம் மனிதனை ஆதிக்கம் செய்ய மறுப்பக்கத்தில் மதம் அவனைத் தன் ஆதிக்கத்திற்குள் வசப்படுத்துகிறது. திசை தெரியாமல் மனிதன் திண்டாடுகிறான். வர்க்கங்கள் நிலவுகிற வரலாற்றுக் காலம் முழுவதும் மனிதனுக்கு

இதுதான் விதி. உடமையும் அரசும் அழிகிற காலம் வரை இந்தக் கதியே தொடரும்.

அகலிகைக்குள் மனிதனுக்கு, ஏற்பட்ட அடிமைத்தனத்தை ஞானி காண்கிறார். ஒரு பக்கம் இந்திரன். மறுபக்கம் கௌதமன். இவர்களுக்கிடையில் அகப்பட்டு கல்லாகிறாள். உடமையையும் அரசையும் துறந்து வரும் ராமனுக்காக அவள் காலமெல்லாம் காத்திருக்கிறாள். இப்படிச் சொல்லுகிறது ஞானியின் கல்லிகை.

உடமையையும் அரசையும் இழந்த இராமன் ஏழைகளோடு பழம்குடிகளோடு உறவு கொண்டு, அதிகாரத்தின் உச்சத்திலிருக்கும் இராவணனை அழிக்கிறான். அயோத்திக்கு அரசனான இராமனுக்குள்ளும் ஆதிக்கம் வலுப்பெற சீதையைக் காட்டுக்கு அனுப்புகிறான். இவ்வாறு இராம காதை குறித்தும் மார்க்சிய நோக்கில் ஒரு பொருள்கோளை முன் வைக்கிறார் இந்த கவிதையில் ஞானி.

கல்லிகை என்ற இந்த தொகுப்புநூலில் "எனக்குள் ஒரு வானம்" என்ற இன்னொரு கதைக் கவிதையும் அடங்கியுள்ளது மார்க்சியத்தில் நம்பிக்கை கொண்டிருந்த போதிலும் தன் குடும்ப சூழலில் நேர்ந்த நெருக்கடியின் விளைவாக தனக்குள் அந்நியமாகித் தற்கொலை செய்துகொண்ட தன் நண்பர் தேவராஜின் கதையைச் சில மாற்றங்களோடு இந்த நீண்ட கவிதையில் சொல்கிறார். அந்நியமாதல் குறித்த மிக விரிவான பார்வையை இந்த கவிதை முன் வைக்கிறது. அந்நியமாதலில் அழுத்தம் கொள்ளாத கட்சி மனிதனுக்கு உதவி செய்வதில்லை. நளன் தர்மன் முதலியவர்களின் கதைகளையும் அந்நியமாதலின் வழியே ஞானி இந்தக் கவிதையில் சொல்கிறார்.

## 4. மார்க்சியமும் தமிழ் இலக்கியமும் 1988

1970 முதல் ஞானி எழுதிய சுமார் முப்பதிற்கும் மேற்பட்ட நானூறு பக்க அளவிலான கட்டுரை நூல் இது. கட்சி சார்ந்த மார்க்சியரின் பார்வையிலிருந்து ஞானியின் பார்வை முற்றாக வேறுபடுகிறது. மதத்தைப் புரிந்து கொள்வதற்கு மட்டுமல்லாமல் கலை மற்றும் இலக்கியப் படைப்புகளையும் புரிந்து கொள்வதற்கு மார்க்சின் அந்நியமாதல் என்ற கோட்பாடு ஆதாரமாக விளங்குகிறது. 1844ல் இருபத்திநாலு வயதான மார்க்ஸ் தன் கருத்துக்களைக் தனக்கு தானே தெளிவுபடுத்திக் கொள்வதற்காக எழுதிய பொருளாதார தத்துவக் கையெழுத்துப் படிகளில் அந்நியமாதலை எடுத்துரைத்தார். மூலதனம் முதலிய அவரது அனைத்து படைப்புகளிலும் அந்நியமாதல்

இடம் பெறுகிறது. இயற்கையிலிருந்தும் சமூகத்திலிருந்தும் இறுதியாக தன்னிலிருந்தும் மனிதன் வரலாற்றுக்குள் அந்நியப்பட்டான். அந்நியமாதலிலிருந்து விலகி இயற்கைமயமாகும். சமூகத்தோடும், தன்னோடும் நிறைவான உறவைப் பெறுவதன் மூலமே மனிதன் தனக்கான விடுதலையைப் பெறமுடியும். அரசு மற்றும் வர்க்கங்கள் இருக்கும் வரை அந்நியமாதலும் இருக்கும். அந்நியமாதல்தான் மதம் மற்றும் கடவுளை உற்பத்தி செய்கிறது. அந்நியமாதலின் ஒருவகை இயக்கம் கலை மற்றும் இலக்கியப் படைப்புகள் வரலாற்றுக்கு முற்பட்ட காலங்களில் நிலவிய ஆதிப்பொதுமை மனிதனுக்குள் நீரோட்டமாக என்றும் ஓடிக் கொண்டிருக்கிறது.

இந்த நீரோட்டம் காரணமாக அந்நியமாதலுக்கு மனிதன் என்றும் எதிர்வினை தருபவனாக இருக்கிறான். ஒரு பொதுமைச் சமூகத்தை சமதர்மச் சமூகத்தை தனது ஆழ்ந்த உள்ளடக்கமாக கொண்டிருப்பவை இலக்கியங்கள். அந்நியமாதலுக்கு எதிர்வினை என்ற முறையில் இயங்குவது தான் மார்க்சியம்.

இத்தகைய ஆழ்ந்த பார்வையை முன்நிறுத்தி தமிழ் இலக்கிய ஆய்வை விரிவாகச் செய்கிறார் ஞானி சங்க இலக்கியம் முதற்கொண்டு தற்கால இலக்கியம் வரை எல்லாவற்றையும் இந்த நோக்கில் ஆய்வுக்கு உட்படுத்துகிறார் ஞானி. ஆதிப்பொதுமை சமூகத்தின் தொடர்பில் தான் சங்ககாலத்துக் கடை ஏழு வள்ளல்களை ஞானி காண்கிறார். உடைமையும் அரசும் தொடர்ந்து மூவேந்தர்கள் வழியே ஆதிக்கம் பெற்ற காலம் சங்க காலம் ஆதிப்பொதுமை சமூக அழிவை சங்கத்தமிழ்ச் சான்றோர்கள் ஏற்கவில்லை. உடைமைக்கும் அரசுக்கும் எதிராக அவர்கள் பேசினார்கள். பழங்காலத்துக் களவுமுறையை அவர்கள் போற்றினார்கள். குடும்பத்திற்குள்ளும் உடைமை சாதி முதலியவற்றுக்கு ஆதிக்கம் கிடைத்த போது சங்ககாலம் அழிந்தது. பாணர்கள் மற்றும் புலவர்களுக்கு ஆதரவில்லை. பரத்தமைதான் இனி வாழ்க்கை முறை. இப்படிச் சங்க இலக்கியத்தைப் பொருள்படுத்துகிறார் ஞானி. வள்ளுவரையும், இளங்கோவையும், கம்பரையும் ஆதிக்க வர்க்கத்தின் கருத்தியலை பரப்பியவர்களது கட்சி சார்ந்த மார்க்சியர் கருத்தை ஞானி ஏற்பதில்லை. வள்ளுவர் முதலியவர்களின் மக்கள் சார்பை விடாப்பிடியாக எடுத்துரைக்கிறார். சோழர் காலத்தில் எங்கும் இருந்த இராவணர்களுக்கு எதிராகத்தான் கம்பர் தன் காவியத்தின் மூலம் தன்னைத் திரட்டிக் கொள்கிறார்.

சமுதாயத்தில் பெருகிவரும் வறுமைக் கொடுமையை வள்ளல்களாலும் மன்னர்களாலும் இனித் தீர்க்கமுடியாது. ஆகவே எடுக்க எடுக்கக் குறையாத அமுத சுரபியைத் தெய்வங்கள் அருளினால் ஒழிய, வறுமை தீராது என்ற அடிப்படையில்தான் "மணிமேகலை" அமுதசுரபி பற்றிய கற்பனையை முன் வைக்கிறது. இப்படித் தமிழ் இலக்கியங்களுக்கு மார்க்சிய நோக்கில் ஆழ்ந்த பொருள் காண்கிறார் ஞானி.

தமிழ் இலக்கியத்தில் கணியன் பூங்குன்றனார் முதற்கொண்டு வள்ளுவர் முதலியவர்கள் வழியே சித்தர்களுக்குள்ளும் தொடரும் சமத்துவம் - சமதர்மப் பார்வைக்கு அழுத்தம் தருகிறார் ஞானி. இந்த நீரோட்டம் புதுமைப்பித்தன் மற்றும் ஜெயகாந்தனுக்குள்ளும் தொடர்வதை எடுத்துக்காட்டுகிறார். எழுத்து தோற்றுவித்த புதுக் கவிஞர்கள் சமதர்மப் பார்வையை ஏற்காததில் ஞானிக்கு உடன்பாடில்லை. இயற்கையோடும் சமுதாயத்தோடும் கொள்ளும் ஆழ்ந்த உறவில்தான் மனிதன் தன்னை உயிர்பித்துக் கொள்கிறார். தனக்குள் ஆழ்ந்து செல்லும்பொழுது "யங்" முதலியவர்கள் கூறியபடி தனக்குள் சமுதாயத்தின் கூட்டு உறவைப் பெறுகிறான் மனிதன். இந்த அடி மனத்திற்குள் ஓடும் நீரோட்டம்தான் மனிதனுக்குள் கவித்துவமாகப் பொங்குகிறது. மனிதனின் படைப்பு இயக்கத்திற்கு மூலம் இந்தக் கவித்துவம் தான். மார்க்சியமும் இலக்கியமும் இணைவது இந்த இடத்தில் தான். வானம்பாடி இயக்கம் மார்க்சியத்தோடு கொண்ட உறவை இப்படித்தான் விளக்க முடியும். கட்சி சார்ந்த மார்க்சியருக்கு இத்தகைய ஆழ்ந்த பார்வையில்லை. இந்த ஆழ்ந்த பார்வைதான் தமிழ் இலக்கியத்தில் தொடர்ச்சியாக சித்தர்களைத் தோற்றுவிக்கிறது. பாரதிக்குள்ளும் ஒரு சித்தனை ஞானி காண்கிறார். பாரதியின் கண்ணன் பாட்டு குறித்த இவரது ஆய்வு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

எதார்த்தவாதம் மட்டுமே மார்க்சியரின் படைப்பு நெறி என்பதை ஞானி ஒப்புக்கொள்ளவில்லை. MODERNISM என்று கூறப்படும் நவீனத்துவம் எதார்த்தவாதத்தோடு ஒத்து இயங்கக் கூடியது என்பது ஞானியின் கருத்து. சுந்தர ராமசாமியின் "ஜே.ஜே சில குறிப்புகள்" என்ற நவீனத்துவப் படைப்பை ஞானி பாராட்டுகிறார். கலைக்கு முதன்மை தந்தவன் ஜே.ஜே. இதன் காரணமாக எதார்த்தத்தைப் புறக்கணிக்கிறான். வாழ்வில் அறம் குலைந்து ஏற்றத்தாழ்வுகள் பெருகுகிற

சூழலில் எதார்த்த வாழ்வைப் புறக்கணிக்கிற ஜே.ஜேவை நாம் இகழமுடியாது. ஜே.ஜேவின் வாழ்க்கை யதார்த்த வாழ்வின் சீர்குலைவு பற்றிய விமர்சனம் ஜே.ஜே.வின் சாவு/தற்கொலை எதார்த்தத்தின் மீது ஒரு தாக்குதல்.

கம்யூனிஸ்ட்டுகளின் கலை இலக்கியப் பார்வையை ஞானி தொடர்ந்து விமர்சனம் செய்கிறார். பிரதிபலிப்பு என்ற லெனினின் கோட்பாட்டில் எதிர்வினைக்கு இடம் இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். சூழல்தான் மனிதனை மாற்றுகிறது என்பது ஒரு பாதி உண்மை. சூழலை மாற்றுபவன் மனிதன் என்ற மார்க்சின் கருத்தை ஞானி எடுத்துக் காட்டுகிறார். கட்சியின் கட்டுப்பாட்டில் உருவாக்கப்பட்ட சோசலிச எதார்த்தவாதம் ஞானிக்கு உடன்பாடில்லை. கட்சி உருவாக்குவது மனிதன் மீது இன்னொரு வகை ஆதிக்கம். ஆதிக்கத்தை எப்பொழுதும் மறுப்பவன் கலைஞன். இப்படிச் செல்லுகிறது ஞானியின் பார்வை. இலக்கியத்திற்குள்ளும் இயங்கும் வரலாறு மற்றும் தத்துவம் குறித்து தொடர்ந்து எடுத்துரைக்கிறார் ஞானி.

## 5. தொலைவிலிருந்து 1988

ஞானியின் குறும் கவிதைகள் பலவற்றைக் கொண்டது இந்தத் தொகுப்பு. வானம்பாடி இயக்கத்தின் தாக்கம் காரணமாக அவ்வப்பொழுது நேர்ந்த தன் வாழ்வியல் அனுபவங்களை இந்தக் கவிதைகளில் வெளிப்படுத்தியிருக்கிறார். தன் குடும்பத்திற்குள்ளும், மார்க்சியக் கட்சியோடும் தனக்கு நேர்ந்த அனுபவங்கள், பாதிப்புக்கள் முதலியவைகளை இந்தக் கவிதைகளில் தன் ஆளுமையிலிருந்து விலகிய முறையில் ஞானி சொல்லியிருக்கிறார். நான் தொலைவிலிருந்து வருகிறேன். எந்த புல்லையும் மிதிப்பது கூட எனக்கு விருப்பமில்லை என்ற முறையில் தனக்கு ஆதிக்க உணர்வு அறவே இல்லாத ஒரு மனிதனின் பார்வையில் சில பல கவிதைகள் இயங்குகின்றன. கட்சிக்குள் மனிதன் எவ்வாறு சிறையுண்டு அவதிப்படுகிறான் என்பதையும் சோவியத் யூனியனின் சோசலிசம் என்ற பெயரில் மக்களுக்கு நேர்ந்துள்ள வேதனையையும் சொல்கிறார். அலங்காரங்கள் அறவே ஒதுக்கிய நடையில் நிறமற்ற கவிதைகளை இந்தத் தொகுப்பில் தந்திருக்கிறார். இவை கவிதைகள் அல்ல என்று புறக்கணிக்கக் கூடிய அளவிற்கு நிறமற்றன எனினும் மனிதனின் ஆழ்ந்த பார்வைகளை வெளியிடும் கவிதைகள் இவை. மார்க்சியத்திற்குள்ளும் ஆன்மீகப் பார்வைக்கு இடமுண்டு என்பதற்கு இந்தக் கவிதைகள் சான்று.

# 6. படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம் 1994

எண்பதுகளின் தொடக்கத்திலிருந்தே தமிழ் இலக்கிய ஆய்வுக்குள் அமைப்பியல் அணுகுமுறை செல்வாக்கு பெற்றது. இதைத் தொடர்ந்து பின் அமைப்பியலும் கலை இலக்கிய ஆய்வுக்குள் செயல்பட்டது. இதன் தேவை குறித்து ஞானி மறுக்கவில்லை. அதே சமயம் இலக்கியத்தின் கட்டுமானத்திற்கு அல்லது வாசகனுக்கு மட்டுமே முதன்மை தரும் போக்கை ஞானி ஏற்கவில்லை. கவிஞன் செத்துவிட்டான் கவிதை இருக்கிறது என்பது வாசக பார்வைக்கு அழுத்தம் தரும் ஒரு கருத்து. வாசகனுக்குள்ளும் ஒரு கலைஞன் இருக்கவே செய்கிறான். எந்த ஒரு மனிதனுக்குள்ளும் ஒரு படைப்பாளி இருக்கிறான். படைப்பு இயக்கமில்லாமல் ஒரு மனிதன் செயல்பட முடியாது, வாழமுடியாது. இலக்கியம் மற்றுமே படைப்பன்று கருவிகள் மற்றும் கருத்தாக்கங்களை மனிதன் படைக்கிறான். மனிதன் தனக்கான உலகத்தைப் படைத்துக் கொள்கிறான். இயற்கை முதலியவற்றையும் மனிதன் தன் வயப்படுத்திக் கொள்கிறான். படைப்பின் மூலமே மனிதன் தன்னைப் படைத்துக் கொள்ளவும் செய்கிறான். ஒரு சிற்பத்தை உருவாக்கும்பொழுதே தன்னைச் சிற்பியாக படைத்துக் கொள்கிறார் மார்க்ஸ். பட்டு உற்பத்தி செய்யாமல் பட்டுப்பூச்சிக்கு வாழ்வில்லை. பட்டு உற்பத்திதான் அதன் வாழ்வியக்கம். உயிர் இழப்பு என்பது பொருட்படுத்தக் கூடியதன்று மில்டனும் தன் உயிரைக் கொடுத்துத்தான் சொர்க்க நீக்கத்தை படைத்துள்ளான் இத்தகைய படைப்பிற்கு விலை மதிப்பில்லை. இப்படி மார்க்ஸ் கூறியிருக்கிறார்.

கண்ணாடி என்பது ஒரு அற்புதப் பொருள். உயர்ந்த கொதி நிலையில் மணலும் சுண்ணாம்பும் சேர்ந்து தான் கண்ணாடி ஆகிறது என்ற போதிலும் கண்ணாடி ஒரு மூன்றாவது பொருள். இது பாய்ச்சலின் விளைவு இது இயங்கியல் முறைக்கு ஒத்தது. இப்படித்தான் படைப்பை விளக்க வேண்டும். வாசகனுக்குள்ளும் இருக்கும் ஒரு படைப்பாளிதான் தான் படிக்கும் இலக்கியத்தை ஒரு பிறவியாக பொருள் கொள்ளுகிறான். இலக்கிய ஆக்கத்தினுள் வரலாறும் மெய்யியலும் படைப்பு இயக்கத்தின் வழியே பாய்கின்றன. இலக்கியம் என்ற கட்டுமானத்தை அதற்குள் இடம்பெறும் மூலப்பொருட்களை வைத்து விலக்கிவிட முடியாது படைப்பாளிக்குள்ளும் செயல்படுவது வரலாறும் சமூகமும் அவனுக்குள் இயங்கும் சக்தி வரலாற்றின் வழியே அவனுக்கும் இயங்கும் சக்தி அவனையும் மீறியதாக அந்த சக்தி செயல்படுகிறது. கலைஞன் அதற்கு இடம்

கொடுக்கிறான் இவ்வாறெல்லாம் தான் படைப்பியக்கத்தை நாம் பார்க்க முடியும் என்கிறார் ஞானி.

இலக்கிய ஆய்வு மற்றும் திறனாய்வு என்பது இந்த படைப்பியக்கத்தை கலைஞனுக்குள் மட்டுமல்லாமல் வாசகர்களாகிய நமக்குள்ளும் கண்டறிவதுதான் என்கிறார் ஞானி. இராமாயணத்தை பயில்வது என்பது நமக்குள் இராமனை மட்டுமல்லாமல் இராவணன் முதலியவர்களையும் கண்டறிய வேண்டும். அறத்திற்கும் மறத்திற்கும் இடையில் நமக்குள்ளும் நடைபெறும் போராட்டத்தை இலக்கிய ஆய்வின் வழியேயும் நாம் கற்கவேண்டும். வரலாற்றின் வழியே சமூகத்தில் நடைபெறும் போராட்டம்தான் நமக்குள்ளும் இப்படி வெளிப்படுகிறது. ஆகவே சமூக விடுதலைதான் படைப்பு மற்றும் திறனாய்வின் நோக்கமாக அல்லது இறுதி நோக்கமாக இருக்க முடியும் படைப்புக் கோட்பாடும் திறனாய்வுக் கோட்பாடும் வேறு வேறாக இருக்க முடியாது இது மார்க்சியத்திற்கு ஒத்த கோட்பாடுதான். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட வரலாறுடைய தமிழ் இலக்கியத்தை படைப்பியல் நோக்கில் ஞானி ஆராய்கிறார்.

தொல்காப்பியத்தில் சொல்லப்படும் முதல், கரு, உரிப் பொருள்களையும் அகம், புறம் ஆகிய பிரிவுகளையும் நம் காலத்திற்கு ஒத்த முறையில் ஆழ்ந்த பொருளோடு விரிவுபடுத்துகிறார். நவீனத்துவம் என்றும் பின் நவீனத்துவம் என்றும் தமிழ் இலக்கிய ஆய்வுக்குள் புகுந்துள்ள புதிய பார்வைகளை படைப்பியல் நோக்கில் விளக்குகிறார். எதார்த்த வாதம் என்றைக்கும் உயிர்த்துடிப்போடு விளங்கும். நவீனத்துவம் என்ற பார்வையை எதார்த்தவாதம் உள்வாங்கிக் கொள்ள முடியும். தமிழ் இலக்கியத்திற்குள்ளும் ஆண் ஆதிக்கம் உயர் சாதிப் பார்வை முதலியவை பதிந்துள்ளன. இவ்வகை ஆதிக்கப் பார்வையைக் களைந்து கொள்வதன் மூலமே நம் படைப்புத் திறன் மேம்படும் ஆதிக்கத்தைக் களைந்து கொள்வதாகிய பின் நவீனத்துவ பார்வை. மார்க்சியத்திற்கு எதிரானதன்று பின் நவீனத்துவத்துள்ளும் இயங்கும் இடது சாரிப் பார்வையை மார்க்சியர் தழுவிக்கொள்ள முடியும். ஜே.ஜே. வுக்குள்ளும் பதிந்திருக்கிற ஆதிக்க உணர்வைக் களைந்து கொள்ள வேண்டும். நகுலன், அசோகமித்திரன் ஆகியவர்கள் படைப்புக்குள் பின் நவீனத்துவப் போக்கு சிறப்பாகச் செயல்படுகிறது. இந்தப் பின் நவீனத்துவப் பார்வை கூடத் தமிழ் இலக்கியத்திற்கு முற்றிலும் எதிரானதன்று. வாலி வதைக்கு அழுத்தம் தந்து வாசிக்கும்பொழுது இராமாயணத்தின் தோற்றம் புதியதாகும். இப்படிப் பழைய இலக்கியங்களுக்குள்ளும் தற்கால இலக்கியங்களுக்குள்ளும் செயல்படும் படைப்பியக்கத்திற்கு அழுத்தம் தந்து வாசிக்கிறார் ஞானி. ஆதிக்கத்திற்கு எதிராக மனிதனின் படைப்பியக்கத்தை தூண்டுகிறது தமிழ் இலக்கியம்.

# 7. தமிழகத்தில் பண்பாட்டு நெருக்கடிகள் 1994

சோவியத் யூனியனில் சோ.சலிசம் தகர்ந்ததை அடுத்து வரலாற்றில் தனி மார்க்சியத்திற்கு வாழ்வில்லை என்ற கருத்து சில வட்டாரங்களில் ஏற்பட்டிருக்கிறது. உண்மையில் முதலாளியத்தின் ஊடுருவலைக் கொண்ட மார்க்சியத்திற்குத் தான் இப்படித் தகர்வு நேர்ந்திருக்கிறது. மார்க்சியத்தின் உள்ளுறை ஆற்றல்களை வளர்த்தெடுக்கக்கூடிய வாய்ப்பு இப்பொழுது நேர்ந்திருக்கிறது. ஞானியின் மார்க்சிய ஆசானாகிய தோழர் எஸ்.என்.நாகராசன் அவர்களின் இவ்வகைக் கருத்தை ஞானி ஏற்றுக் கொண்டு தமிழகச் சூழலில் நேர்ந்துள்ள பண்பாட்டு நெருக்கடிகளை வளமான மார்க்சிய நோக்கில் ஆராய்கிறார்.

தமிழகத்தில் சில வட்டாரங்களில் பெரியாரியம், தலித்தியம், பெண்ணியம் குறித்து தீவிரமான விவாதங்கள் எண்பதுகளின் இறுதியில் எழுந்துள்ளன. இவர்கள் மார்க்சியத்தை பேருருவக் கருத்தியல் என்றும் பேருருவக் கருத்தியலுக்கு வரலாற்றில் இனி இடமில்லை என்றும் தலித்தியம் முதலிய நுண்ணுருவ கருத்தியலுக்குத்தான் இனி இடமுண்டு என்று கூறி மார்க்சியத்தை ஒதுக்குகின்றனர். ஆதிக்கம் எந்த வடிவத்தில் திரட்சி பெற்றாலும் அதை மார்க்சியம் ஏற்பதில்லை என்ற நோக்கில் மேற்குறித்த விவாதங்களை ஞானி இந்த நூலில் எதிர்கொள்கிறார்.

சாதி, மதம், பார்ப்பனீயம் ஆகியவற்றைக் கடுமையாக எதிர்க்கும் பெரியாரியம் தனி உடமை அரசு ஆதிக்கம் (முதலாளியம்-சந்தைப் பொருளாதாரம் இந்தியாவில் பன்னாட்டு நிறுவனங்களின் ஊடுருவல், நுகர்வுவெறி, இயற்கை அழிவு) முதலியவற்றை எதிர்ப்பதில்லை. இதற்குக் காரணம் முதலாளியம் பெரியாரியத்திற்குள் தங்கி விட்டது, பெரியார் முன்வைத்த சமதர்மம் என்ற கருத்தியலுக்கு அழுத்தம் தருவதன் மூலம் பெரியாரியத்தை வளர்க்க முடியும்.

சந்தைப் பொருளாதாரம் என்ற பெயரில் முதலாளியத்தின் சுரண்டலும் அரசின் ஒடுக்குமுறையும் தொடர்ந்து அதிகரிக்கிற சூழலில் தலித் மற்றும் பெண்கள் மீது ஒடுக்குமுறை இனிப் பல மடங்கு அதிகரிக்கும் அன்றியும் தமிழகத்தில் தமிழ் மற்றும் தமிழ் தேசியத்திற்கும் ஆபத்து அதிகரிக்கும். இவற்றை ஞானி பண்பாட்டு நெருக்கடிகள் என்று குறிப்பிட்டாலும், இவரே நூலில் முன்னுரையில் குறித்தபடி இவை மெய்யியல் நெருக்கடிகள்.

சமதர்மத்திற்கு அழுத்தம் தருகிற மார்க்சிய பார்வையை ஆழப்படுத்துவதன் மூலம் பெரியாரியம், தலித்தியம், பெண்ணியம், தமிழியம் முதலிய கருத்தியலுக்குள் தங்கியுள்ள முதலாளியத்தை வெளியேற்ற முடியும் என்று இந்த நூலில் விவாதிக்கிறார் ஞானி. ஞானியின் மிகச் சிறந்த படைப்புகளில் இந்த நூல் குறிப்பிடத்தக்கது.

## 8. எண்பதுகளில் தமிழ் நாவல்கள் 1994

எண்பதுகளில் வெளிவந்த சுமார் முப்பது எழுத்தாளர்களின் அறுபத்து ஐந்து நாவல்களை ஆய்கிறது இந்த நூல். இலக்கிய ஆய்வில் குறிப்பாக நாவல் பற்றிய ஆய்வில் புதிய அணுகுமுறைகள் எண்பதுகளின் தொடக்கத்திலிருந்தே தமிழ் இலக்கியச் சூழலுக்குள் வந்து விட்டன, நான்கு புறமும் இழுத்துக் கட்டக்கூடிய ஒரு கூடாரம் போல் மையத்தோடு எல்லாவற்றையும் இணைப்பதாகிய பல திறக் கூறுகளோடு கூடிய கதையமைப்பு தேவையில்லை. ஒரு நாவலுக்கு மையம் தேவையில்லை கதைகூடத் தேவையில்லை. நாவலில் ஒரு கதாநாயகனை மற்றவர் சுற்றி வருகிற மாதிரி கதையமைப்பு தேவையில்லை. இவ்வகைக் கதையமைப்பு ஏதோ ஒரு வகையில் ஆதிக்கத்தை கட்டமைக்கிறது. நாவலில் எல்லா மனிதர்களும் சமமான முக்கியத்துவமுடையவர்கள்.

ஒரு நாவலுக்குத் தொடக்கம் என்று எதுவுமில்லை. அதே போல நாவல் ஒரு கட்டத்தில் முடிவு பெற வேண்டும் என்பதுமில்லை. நாவல் என்பது சமூக மாற்றத்தை ஊக்குவிக்கவேண்டும் என்பதுகூட தேவையில்லை. இப்படிப் புதிய நோக்குகளில் இலக்கிய ஆய்வுகள் வந்திருக்கின்றன. இந்த நோக்கை தன் கருத்தில் கொண்டு எண்பதுகளில் நாவல்களை ஞானி ஆராய்கிறார். அசோகமித்ரன், சா. கந்தசாமி, சங்கரநாராயணன் ஆகியவர்களின் நாவல்கள் இவ்வகை நாவல்கள் என்று ஞானி குறிப்பிடுகிறார். எதார்த்த வாதத்திற்கு இன்னும் தேவை இருக்கிறது என்ற முறையிலும் இந்திரா பார்த்தசாரதி, ராஜம் கிருஷ்ணன், சு.சமுத்திரம் போன்றோரின் நாவல்களை ஞானி பாராட்டுகிறார். ராஜம் கிருஷ்ணன் தமிழ் சமூகத்தின் பல்வேறு வரலாற்று பதிவுகளை பெருமளவு செய்தவர் என்ற முறையில் தமிழ் நாவலாசிரியர்களின் முன் வரிசையில் அவரை வைக்கிறார் ஞானி.

கலைப்படைப்பு என்ற முறையில் குறைபாடுகள் பல இருந்த போதிலும் சமூக நீதிக்கு தொடர்ந்து அழுத்தம் தருவதற்காக சு.சமுத்திரத்தை ஞானி பாராட்டுகிறார். ராஜேஸ்வரி பாலசுப்ரமணியம் முதல் ஞானி எடுத்துரைக்கிறார். தமிழுக்கு இத்தகைய ஆய்வுகள் பெரிதும் தேவை.

## 9. கடவுள் ஏன் இன்னும் சாகவில்லை 1996

பிரபஞ்சம், வரலாறு, தனிமனித வாழ்க்கை ஆகியவற்றில் புதிர்கள் நிலவும் காலம் வரை கடவுள் என்ற கருத்தாக்கம் திரும்பத்திரும்ப உயிர்த்தெழும் என்ற கருத்தை முன் வைத்து எழுதப்பட்ட கட்டுரைகள்.

பெரியாரியமும் கட்சி சார்ந்த மார்க்சியரும் கடவுள் என்று கருத்தாக்கத்தின் தோற்றம், வளர்ச்சி முதலியவை குறித்து ஆழ்ந்த பார்வை கொள்வதில்லை. இதன் காரணமாக கடவுள், மதம், புராணம் ஆகியவற்றின் மீது மக்கள் கொண்ட நம்பிக்கையை இவர்களால் மாற்ற முடியவில்லை என்று விவாதிக்கும் ஞானி இந்த நூலில் பெரியாரியம் குறித்தும் கட்சி சார்ந்த மார்க்சியர் குறித்தும் விரிவான விவாதங்களை முன் வைக்கிறார்.

ஞானி தன் இளமைக் காலத்தில் அத்வைதம் குறித்த அனுபவம் பெற்றதை ஆதாரமாகக் கொள்கிறார். அத்வைதம் என்பது ஒரு சிகர அனுபவம் அதைப் பொருளியல் மற்றும் சமூக தளத்திற்கு கீழ் இறக்கும் பொழுது சமதர்மம் என்ற பார்வை அழுத்தம் தரமுடியும். விவேகானந்தர், பாரதி ஆகியவர்கள் இப்படிச் செய்தவர்கள். கிறுத்துவத்துக்குள் உள்ள விடுதலை இறையியலை இந்து மதத்திற்குள் காண முடியவில்லை என்கிறார் ஞானி. பின் நவீனத்துவம் முன் வைக்கிற கட்டுடைத்தல் என்ற அணுகுமுறை ஞானியின் ஆய்வுக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கிறது.

## 10. தமிழில் நவீனத்துவம், பின் நவீனத்துவம் 1997

இந்த தொகுப்பின் முதல் கட்டுரை தமிழில் நவீனத்துவம் என்ற பொருள் பற்றியது. பிற கட்டுரைகள் மார்க்சியமும் இலக்கியமும், மார்க்சியம் ஒரு மறுபார்வை, தமிழ் மரபின் தடங்கள் முதலியவை. சோவியத் யூனியனில் மார்க்சியம் தகர்ந்ததை அடுத்து மார்க்சியத்தின் புத்துயிர்ப்புக்கான அதன் ஆற்றல்களை விரிவாக ஆராய்கிறார் ஞானி. இந்த நோக்கில் பேராசிரியர் தேவி பிரசாத் சட்டோபத்தியாய அவர்களின் "அந்தி மெய்யியலில் ஒரு இருப்பனவும், இறந்தனவும்" குறித்து விரிவான விமர்சனத்தை ஞானி முன்வைக்கிறார்.

இந்திய மெய்யியலில் இறந்தவை அதிகம், இருப்பவை குறைவு என்பது தேவிபிரசாத் அவர்களின் முடிவு. இந்திய மெய்யியலில்

இருப்பவை அதிகம், இறந்தவை குறைவு என்பது ஞானியின் முடிவு. இந்திய மெய்யியலில் காலம் தோறும் எழுந்த கேள்விகள் இன்றும் தொடர்கின்றன நான் யார்? என் படைப்பின் நோக்கமென்ன? முடிவு என்ன? எனக்கு விடுதலை எப்போது சாத்தியம்? பிரபஞ்சத்திற்கும் எனக்கும் என்ன உறவு? என் வாழ்வின் அர்த்தம் என்ன? இவைதான் மெய்யியலின் அடிப்படைக் கேள்விகள். இத்தகைய கேள்விகள் இருத்தலியல் கேள்விகள் என்று புறக்கணிக்க முடியாது. இந்த கேள்விகளுக்கு வரலாற்றுக் காலங்களில் காலத்திற்கு ஒத்த முறையில் விடைகள் தரப்பட்டன. மார்க்சியம் இவ்வகைக் கேள்விகளுக்குக் கூடியவரை சரியான விடைகள் இன்று தருகிறது. பிரபஞ்சம் மற்றும் வாழ்வின் புதிர்கள் இன்று முழுமையாகத் தீர்ந்த பாடில்லை. ஆகவே மார்க்சியமும் தொடர்ந்து தேடலில் ஈடுபட்டுத் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளவேண்டும். இப்படி விரிவான கருத்துக்களை ஞானி முன் வைக்கிறார்.

நவீனத்துவம் மட்டுமல்லாமல் பின் நவீனத்துவத்தையும் கட்சி சார்ந்த மார்க்சியர் மறுக்கின்றனர். பின் நவீனத்துவம் முன் வைக்கும் பிரதி, புனைவு, கட்டுடைத்தல் முதலிய கருத்தாக்கங்களை ஞானி ஆராய்ந்து இவ்வகை ஆய்வு மார்க்சியத்திற்குப் புறம்பானதன்று என்பதோடு இலக்கியம் குறித்த மார்க்சிய ஆய்வை இவை வளப்படுத்தும் என்று கூறுகிறார். "சு. சமுத்திரத்தின் வாடாமல்லி", "எம்.வி. வெங்கிடராமின் காதுகள்", "தமிழவனின் சரித்திரத்தில் படிந்த நிழல்கள்" முதலிய படைப்புகளை ஆராய்ந்து தன் கருத்துக்களை நிறுவுகிறார். பின் நவீனத்துவத்தினுள் செயல்படும் வலதுசாரி போக்கை ஞானி மறுக்கிறார்.

தமிழ் மரபின் தடங்கள் என்ற கட்டுரை திராவிட இய்க்கம் குறித்து விரிவான ஆய்வை முன்வைக்கிறது. பெரியார் தோற்றுவித்த இயக்கம் திராவிட இயக்கத்தின் ஒரு கிளை மட்டுமே. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை முதலியார் மூலம் வெளிப்பட்டது சைவ சமயம் சார்ந்த இன்னொரு கிளை, திராவிட முன்னேற்றக் கழகம் என்பது அரசியலுக்கு அழுத்தம் தரும் இன்னொரு கிளை. இன்று வளர்ந்து வரும் தமிழ்த் தேசிய இயக்கம் என்பது மேலும் ஒரு கிளை. பெரியாரது இயக்கம் தமிழர்களுக்கு சாதியில்லை, மதமில்லை, சடங்குகளில்லை என்ற போதிலும் சாதியோ, மதமோ, சடங்குகளோ இல்லாமல் தமிழ் சமூகமில்லை அன்றியும் தமிழ் சமூகத்தின் துவக்ககாலம் என்பதைக்

குமரிகண்டத்தோடும் சிந்து சமவெளி நாகரிகத்தோடும் நாம் இணைத்துப் பார்க்க முடியும் டாக்டர் இராதகிருஷ்ணன் முதலியவர்கள் ஆய்ந்து வரைத்தபடி இந்திய நாகரீகத்தின் மேல் அடுக்கு ஆரிய நாகரீகம். இதைக் களைந்து பார்த்தால் அடித்தளம் திராவிட நாகரீகம். வேதத்திற்கு எதிரான சாங்கியம், நியாயம், வைசேடிகம், சார்வாகம் மற்றும் பௌத்தம், சமணம் ஆகியவையும் திராவிட நாகரீகத்தோடு உறவு உடையவை. வேதங்களின் உள்ளும் திராவிடர்களுக்குப் பங்களிப்புண்டு. இந்தியாவை திராவிட இந்திய தமிழ் இந்தியா என்றுகூடச் சொல்லமுடியும் இப்படி தமிழ் மரபின் பல்வேறு தடங்களை ஞானி கண்டு சொல்கிறார். திராவிட இயக்கத்தின் குறை, நிறைகளை ஆராய்கிறார். தமிழ் தேசிய உணர்வை எவ்வாறு கட்டமைப்பது என்று சொல்கிறார்.

அதிக அளவில் தனக்குள்ள சுதந்திரமான வெளியை இந்தப் படைப்பில் ஞானி வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். தங்கு தடையில்லாமல் எல்லாத் திசைகளுக்குள்ளும் பயணம் செய்கிறார். வரலாறு, மெய்யியல், இலக்கியம் என்பதினுள் விரிவான பயணங்கள் ஞானி செய்கிறார் என்பதற்கு இந்த நூல் ஆதாரம்.

## 11. புதிய தரிசனங்கள் - கலையும் அரசியலும் 1997

புதிய தரிசனங்கள் வெளி வந்தவுடன் சாகித்திய அக்காதமி தேர்வுக்கு இந்நாவல் தகுதியுடையது என்று கண்டு நாவலாசிரியர் பொன்னீலன் அவர்களைக் கலந்து கொண்டு நாவலாசிரியருக்கு வந்த கடிதங்கள், இந்த நாவல் குறித்து பத்திரிகைகளில் வந்த மதிப்புரைகள் மற்றும் புதியதாக எழுதப்பட்ட கட்டுரைகள் என்ற முறையில் ஞானி இந்த நூலைத் தொகுத்திருக்கிறார்.

ஆயிரத்தித் தொள்ளாயிரம் பக்க அளவில் மூன்று தொகுதிகளாக வெளிவந்துள்ள இந்தப் பெரிய நாவல் 1975-இல் இந்திராகாந்தி பிறப்பித்த நெருக்கடிச் சூழலைக் கருப்பொருளாக கொண்டு அமைகிறது இந்த நாவல். அவசர நிலையை மையப்படுத்தி தமிழில் இந்த நாவல் எழுதப்பட்டிருக்கிறது என்ற போதிலும் அனேகமாக வேறு எந்த மொழியிலும் இத்தகைய பெரிய நாவல் தோன்றியிருக்க இயலாது. தமிழ்நாட்டின் தென்மாவட்டமொன்றில் நெருக்கடி காலத்தில் இரண்டு

பெரிய சமூகங்களுக்கிடையில் நடைபெற்ற வன்முறையுடன் கூடிய போராட்டங்களை இந்த நாவல் சொல்கிறது. வளர்ச்சி பெற்ற நாடார் சமூகத்தினருக்கும் ஒடுக்கப்பட்ட மள்ளர் சமூகத்தினருக்கிடையில் பல்வேறு போராட்டம். போராட்டத்தில் பல்வேறு அரசியல் கட்சிகள் ஐம்பதுக்கும் மேற்பட்ட பாத்திரங்கள் அகண்ட காவிரி போல பரந்து செல்லும் கதையமைப்பு. இந்திராகாந்தியை நம்பிப் பின்சென்ற வலதுசாரி கம்யூனிஸ்ட்டுகளுக்கு தோல்வி. கம்யூனிஸ்ட் கட்சி பற்றிய உள்ளார்ந்த விமர்சனங்கள், தலித்தியம், பெண்ணியம் என்னும் சில போக்குகள் தமிழில் மகத்தான நாவல்களுள் ஒன்று என்ற பெருமையை இந்த நாவல் எளிதாகப் பெற்றது. இவற்றையெல்லாம் இந்தத் தொகுப்பு சொல்கிறது

## 12. தமிழ்த் தேசியம் பேருரைகள் 1997

இந்தியாவில் கூட்டாட்சி ஏற்படவில்லை. சோசலிசமும் கைவிடப்பட்டது. இந்தியாவில் செயல்பட்ட ஐந்தாண்டு திட்டங்கள் முதலியவை முதலாளியப் பெருக்கத்திற்குக் காரணமாயின. பல்வேறு மாநிலங்களுக்குகிடையில் சமச்சீரான வளர்ச்சியில்லை. கிழக்கு மாநிலங்கள் முதலியவை புறக்கணிக்கப்பட்டன. மக்களாட்சி முறை உறுதிப்படவில்லை. ராணுவம் உட்படப் பெருகி அரசு நிர்வாகம் மக்கள் மீது சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் அதிகரித்தது. மாநிலங்களின் அதிகாரங்களையும் மைய அரசு பறித்தது. மாநிலங்களின் மொழி, கலாச்சாரம், பொருளியல் முதலிய தேவைகள் மதிக்கப்படவில்லை. இப்படிப் பல்வேறு காரணங்கள். காஷ்மீர், பஞ்சாப் எனத் தேசிய இனங்களின் விடுதலைக்கான போராட்டங்கள் வெடித்தன. தமிழ்நாட்டிலும் இப்படி தேசிய இனப் போராட்டங்கள் தொடர்ந்து எழுச்சி விடுதலைக்கான தேவை முதலியவற்றை உள்ளடக்கிய ஒரு தொகுப்பு நூலை தமிழியம் என்ற அமைப்பு சார்பில் ஞானி தொகுத்துள்ளார். தோழர்கள் பி.ஆர்.குப்புசாமி, கு.ச. ஆனந்தன், ஆனைமுத்து, மணியரசன், தமிழ்நாடன், எஸ்.என். நாகராசன் ஆகியவர்கள் பேருரைகளாகக் கொண்ட சிறப்பான தொகுப்பு நூல் இது. தமிழ்த் தேசிய இன விடுதலைக்கான வரலாறு, தத்துவம், பண்பாடு வாழ்வியல், இலக்கிய ஆக்கம் எனப் பல்வேறு போக்குகளை இந்த நூல் சொல்லுகிறது. தமிழ்த் தேசியம் குறித்த கருத்தியல் தெளிவிற்கு இந்த நூல் ஒரு முயற்சி.

## கவிஞர் தமிழன்பன் படைப்பும் பார்வையும் 1998

எழுத்து, கசடதபற இதழ்களுக்குப் பிறகு சமூக உணர்வோடும் படிமச் சிறப்போடும் கவிதை எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர் தமிழன்பன். வானம்பாடி இயக்கத்தின் ஆழ்ந்த பாதிப்போடு பத்திற்கும் மேற்பட்ட கவிதைத் தொகுப்புக்களை வெளியிட்டவர் தமிழன்பன். பெரியாரியமும் மார்க்ஸியமும் இவரிடம் முழு அளவில் இணைந்துள்ளன. கவியரங்கங்களில் இவர் முன்வைத்த அரசியல் கவிதைகளிலும், கவித்துவம் குறையவில்லை. பெரியார், பாரதியார், பாரதிதாசன் முதலியவர்களோடு மாவோ குறித்தும் அற்புதமாகக் கவிதை எழுதியுள்ளார். தலித்தியம், பெண்ணியம், சூழலியம் என்று இனம் காணத்தக்க உணர்வோடும் கவிதை வடித்துள்ளார். அண்மைக்காலக் கவிதைகளில் மெய்யியல்பார்வை மேலோங்கித் தெரிகிறது. அமெரிக்காவிற்கு சென்று வந்தாலும் அதன் வல்லரசியப் போக்கைக் கண்டித்துக் கவிதை எழுதியுள்ளார். தற்காலத் தமிழ்க் கவிதையில் மகாகவி என்று ஒருவரை இனம் காண இயலவில்லை என்றாலும் ஒரு மகாகவிக்கான ஆற்றல்மிக்க சில கூறுகள் இவரது கவிதைகளில் தென்படுகின்றன. தமிழன்பனின் ஒட்டுமொத்தமானக் கவிதை குறித்து ஞானி எழுதியுள்ள இந்த நூல், ஞானியின் கவிதை பற்றிய பார்வையையும் வெளிப்படுத்துகிறது. தமிழன்பனின் முக்கியமான தொகுப்புக்களிலுள்ள சிறந்தக் கவிதைகளை ஞானி குறிப்பிட்டுள்ளார். தற்காலத் தமிழ்க்கவிஞர்கள் குறித்து தனி நூல்களின் தேவையை நம்மால் உணரமுடியும்.

தன் வரலாறு எழுதுவது
என் நோக்கம் அன்று.
தன் வரலாறு எழுதும் அளவுக்கு
என் வாழ்வில்
மேடுபள்ளங்கள் இல்லை.
எனது தமிழ்நோக்கின் வெளிப்பாடு
இந்த நூல்.

